


# ஆட்சித்தமிழ்

பொதுப் பதிப்பாசிரியர்

முனைவர் ச. நாகராசன் எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,

தமிழ் வளர்ச்சி இயக்குநர்

தமிழ் வளர்ச்சி இயக்ககம்

குறளகம், சென்னை – 600 108

1999

# நூல் விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **ஆட்சித்தமிழ்** |
| பொதுப் பதிப்பாசிரியர் & வெளியீட்டாளர் | : | இயக்குநர்<br>தமிழ் வளர்ச்சி இயக்ககம்<br>குறளகம், சென்னை-600 108 |
| பதிப்புரிமை | : | தமிழ்நாடு அரசு |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| படிகளின் எண்ணிக்கை | : | 5000 |
| வெளியிடப்பட்ட ஆண்டு | : | 1999 |
| பயன்படுத்தப்பட்ட தாள் | : | த.நா.அ.தா. (70 ஜி.எஸ்.எம்.) |
| நூலின் அளவு | : | 20 X 16.5 |
| விலை | : | உரூ. |
| ஒளியச்சுக் கோவை & அச்சிட்டோர் | : | இராயப்பேட்டை<br>எழுதுபொருள், அச்சுத்துணைப் பொருள்கள் தயாரிப்பாளர் கூட்டுறவுச் சங்கம்<br>இராயப்பேட்டை, சென்னை-14 |
| நூல் கிடைக்குமிடம் | : | தமிழ் வளர்ச்சி இயக்ககம்<br>குறளகம், சென்னை-600108<br><br>உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்<br>தரமணி, சென்னை - 600 113 |

**மு. கருணாநிதி**
முதலமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009
நாள் · 11 3.1999

# அணிந்துரை

''எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு''

-என்று பாடிய புரட்சிக் கவிஞரின் உணர்வுகளைத் தாங்கிச் செயல்படும் இந்த அரசு, தமிழகத்தில் ''எங்கும் தமிழ் எதிலும் தமிழ்'' என்னும் நிலை வரவேண்டும் என்பதைக் கவனத்தில் கொண்டு, ஆட்சிமொழி தொடர்பாக நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது.

''தமிழுக்கு விலங்கிட்டுத் தாயகம் பற்றி
நமக்குள்ள உரிமை தமக்கென் பாரெனில்
வழிவழி வந்தவுன் மறத்தனம் எங்கே?
மொழிப்பற் றெங்கே? விழிப்புற் றெழுக!''

-என்று பாடித் தமிழ்மொழிப் பற்றினை ஊட்டிய புரட்சிக் கவிஞர் அவர்களின் தலைமையில் 7.10.1956 அன்று குளித்தலையில் தமிழ் ஆட்சிமொழி மாநாடு நடைபெற்றது. 1 11.1956 முதல் சென்னை மாகாணம் என்பதில் இருந்து ஆந்திரம், கேரளம் ஆகியவற்றின் பகுதிகள் பிரிந்து, தனித்தனியே மொழிவாரி மாநிலங்கள் அமைந்ததால், அந்நாள் முதல் தமிழ் வழங்கும் பகுதி தனி மாநிலமாகச் ''சென்னை மாநிலம்'' எனத் தோன்றியது. அதனைத் தொடர்ந்து, தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் 27.12.1956 அன்று தமிழகத்தில் நிறைவேற்றப்பட்டது. எனினும், 1967ஆம் ஆண்டில் கழக அரசு அமைந்தபின் ''சென்னை மாநிலம்'' என்பதைத் ''தமிழ்நாடு'' எனப் பெயர் மாற்றம் செய்தது முதல் பல்வேறு தமிழ் வளர்ச்சிப் பணிகள் - தமிழ் ஆட்சிமொழிப் பணிகளாக மேற்கொள்ளப்பட்டன.

அரசின் ஒரு துறையில் இருந்து பிற துறைகளுக்கு எழுதப்படும் கடிதங்களில் தமிழ் பயன்படுத்தப்பட வேண்டும் என 27.9.1969 அன்றும், அரசுச் செயலகத் துறைகளுக்கு எழுதப்படும் கடிதங்களில் தமிழ் பயன்படுத்தப்பட வேண்டும் என 2.12.1971 அன்றும் ஆணைகள் வெளியிடப்பட்டன.

சென்னை உயர்நீதி மன்றத்திற்குச் சார்நிலையில் அமைந் திருக்கின்ற அனைத்து நீதிமன்றங்களிலும், தீர்ப்பாயங்களிலும் 14.1.1970 முதல் நீதிமன்ற நடவடிக்கைகளை - சாட்சியங்களைத் தமிழில் பதிவு செய்து கொள்ளலாம் என 13.11.1969 அன்று ஆணையிடப்பட்டது.

அரசு நிருவாகம் முழுவதிலும் தமிழ்மொழி பயன்படுத்தப் படுவதை விரைவுபடுத்தும் நோக்குடன், 28.5.1971 அன்று, ''தமிழ் வளர்ச்சி இயக்ககம்'' ஓர் இயக்குநர் தலைமையில் தோற்றுவிக்கப்பட்டது.

அனைத்து நிலையிலும் படிப்படியாகத் தமிழை ஆட்சிமொழியாக உயர்த்திடும் முயற்சியின் உயர்நிலைப் பணியாக 13.5.1996 அன்று தமிழ் ஆட்சிமொழித் துறை தனி அமைச்சகமாக உருவாக்கப்பட்டது. அதன்பின் தமிழ் ஆட்சிமொழிப் பணிகள் மேலும் விரைவுபடுத்தப்பட்டு வரு கின்றன. 1000 தமிழ்த் தட்டச்சுகள் வழங்கப்பட்டுள்ளன. ஆட்சிச் சொல் அகராதிகள் அனைத்து அலுவலகங்களுக்கும் அளிக்கப்பட்டுள்ளன. அரசாணைகள், வரைவுகள், அரசு எழுதும் மடல்கள் அனைத்தும் தமிழிலேயே வெளிவர வேண்டும் என்பதற்கு அரசு மிகுந்த ஊக்கமளித்து வருகிறது.

அரசின் ஆட்சிமொழி தொடர்பான இத்தகைய பணிகள் அனைத்தையும் தொகுத்துக் கூறும் வகையிலும், அரசின் ஆட்சிமொழி நடவடிக்கைகளை அறிந்து- அவைகளுக்குப் பணியாளர்களும், பொதுமக்களும் உரியமுறையில் ஒத்துழைப்புகளை வழங்குவதற்கு உதவும் வகையிலும், ''ஆட்சித் தமிழ்'' எனும் அருமையான இந்நூலினைத் தமிழ் வளர்ச்சித்துறை வெளிக் கொணர்ந்துள்ளமை கண்டு மகிழ்வதுடன், சீரிய இம்முயற்சியின் பொருட்டு என் மனமார்ந்த பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள

**(மு. கருணாநிதி)**



**முனைவர் மு. தமிழ்க்குடிமகன்**
தமிழ் ஆட்சிமொழி,
தமிழ்ப்பண்பாடு, இந்து சமய
அறநிலையத்துறை அமைச்சர்

தலைமைச்செயலகம்,
சென்னை - 600 009.
11.3.99

# முன்னுரை

தமிழை ஆட்சிமொழியாகச் செயற்படுத்துவதில் எத்தனையோ காலகட்டங்களில் புதிய புதிய முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டிருக்கின்றன. எனினும் 13.5.'96 அன்று தமிழ் ஆட்சிமொழித்துறை தனி அமைச்சகமாகப் பிரிக்கப்பட்டதுதான் இதன் உச்சகட்டம் எனலாம். இத்தகையதொரு புரட்சிகர ஏற்பாட்டைச் செய்த மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்களை வாழ்த்தி வணங்குகிறேன்.

அதன்பின் ஏராளமான வேலைகள் நடைபெற்றுள்ளன. 13 மாவட்டங்களுக்கு மட்டுமே அலுவலர்கள் இருந்த நிலை மாறி, 29 மாவட்டங்கட்கும் உதவி இயக்குநர்கள், அலுவலக உதவியாளர்கள் எனப் புதிய பணியமர்த்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. ஒருவரே இரண்டு மூன்று மாவட்டங்களைக் கவனிக்கும் அவல நிலை அறவே நீங்கியது.

இன்று தலைமைச் செயலகத்தில் தொலைபேசிக் குறிப்பேட்டைத் தமிழில் வெளிக் கொணரும் அளவுக்கு நிலைமைகள் முன்னேறியுள்ளன. அரசாணைகள், வரைவுகள், மடல்கள் தமிழில் வெளிவர வேண்டு மென்பதில் அரசு விழிப்பாகவே உள்ளது.

'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' என்பது எமது குறிக்கோள். தமிழ்நாட்டில் பணியேற்கும் இ.ஆ.ப., இ.கா.ப., அலுவலர்கள் அனைவரும் ஒரு குறிப்பிட்ட காலத்துக்குள் தமிழைப் பயின்று தேர்ச்சி அடைய வேண்டும்.

அதேநேரத்தில் தமிழக அலுவலகங்கட்குள் பணியாற்ற வரும் ஊழியர்கள் தேர்வாணையத்தின் மூலம் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். இப்போதைய நிலை அவர்கள் தம் தேர்வுகளைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதிடலாம் என்பதுதான்.

எனவே, முற்றிலும் ஆங்கிலத்தில் எழுதுபவர்கள் வெற்றி பெற்றுத் தேர்வும் பெற்று வந்துவிடுகிறார்கள். இவர்கள் தங்கள் தகுதிகாண் பருவத்தை (Probation) நிறைவு செய்யுமுன் ஒரு தேர்வு எழுதி வெற்றி பெறவேண்டும். இது பத்தாம் வகுப்புத் தமிழ்த் தேர்வுக்குரிய பாடத் திட்டத்திற்குச் சமமானதாகும்.

ஆனால் தற்போது நாம் வெளியிடும் இந்த **ஆட்சித்தமிழ்** நூலில் முழுத் தேர்ச்சிபெற்று, தேர்விலும் வெற்றி பெற்றாக வேண்டும்.

அலுவலகத்தில் பணியாற்றும் பலருக்கு அரசாணைகள் பல மேற்போக்காகவே தெரியும். எனவே, இன்னதற்கு இது என்று திட்ட வட்டமாகக் கூறும் அருமையான தொகுப்பு நூலாக இது அமைந்துள்ளது.

இதில் சிங்கப்பூரில் ஆட்சிமொழிகள் பற்றிய செய்தியும் ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளது. அதிலும் தமிழுக்கு உரிய இடம் தரப்படுவதுடன், அது மூன்றாவது இடத்தில் வைத்து முறையாகச் செயற்படுத்தப்படுகிறது என்பதையும் இங்குச் சொல்லியுள்ளோம். அப்போதாவது நமது தமிழன்பர்களுக்கு ஒரு தெளிவு பிறக்கும் என்ற நம்பிக்கையில்.

கி.பி. 2-ஆம் நூற்றாண்டுக்குப் பின் பல்வேறு ஊடுருவல்களால் தமிழில் பிறமொழிச் சொற்கள் கலந்துள்ளன. தனித்தமிழ் இயக்கம் தொடங்கிய பிறகும், திராவிட இயக்கம் தமிழை உயிராக மதித்துப் பொதுவாழ்வில் களம் இறங்கிய பிறகும் பல பிறமொழிச் சொற்கள் அகன்றுள்ளன. 'நல்ல தமிழ் நடை' என்பதும் நடைமுறையாகிவிட்டது. எந்த ஒரு பிறமொழிச் சொல்லையும் கலக்காமல் பேசமுடியும் எனும் நிலையும் எட்டப்பட்டுள்ளது. 'மணிப்பிரவாளம்' என்பது ஒழிக்கப்பட்டு விட்டது. ஒரு பிறமொழிச் சொல் கலக்கும்போது பல தமிழ்ச் சொற்கள் மங்கிவிடுகின்றன. 'ஜன்னல்' எனும் ஒரு போர்த்துகீசியச் சொல் பலகணி, சாளரம், வளிவாய், காற்றுவாரி, காலதர் எனும் ஐந்து சொற்களை அடக்கி வைத்துள்ளது என்பதை மறந்துவிடக் கூடாது. எனினும் இப்போது நிலைமையில் வெகுவான முன்னேற்றம் உள்ளது.

ஆனால் புதியதொரு தலைவலி வந்துள்ளது. 'ஆங்கிலத்தையும் தமிழையும் கலந்து பேசும், அதிலும் வலிந்து பேசும்' புதிய போக்கு மிகுந்துள்ளது. 'தமிங்கிலம்' எனும் புதுச் சொல்லும் கிளம்பியுள்ளது. இது குறித்து ஒவ்வொரு தமிழனும் கவனம் செலுத்தினால் நிலைமை சீராகும்.

இப்படிப்பட்ட சூழ்நிலையில்தான் இப்போது புதிய முயற்சி மேற் கொள்ளப்பட்டுள்ளது. அரசு அலுவலகங்களில் பணியில் சேருவோர் எந்த மொழியில் தேர்வெழுதி வந்திருந்தாலும் 'ஆட்சித்தமிழ்'எனும் இந்த நூலை முழுமையாகப் படித்து, அதில் தேர்வும் எழுதி வெற்றி பெற்றால்தான் தகுதிகாண் பருவத்தை நிறைவு செய்யமுடியும் என்ற நிலை உருவாகியுள்ளது. அந்த அடிப்படையில் இந்த நூல் அருமையாக உருவாக்கப்பட்டுள்ளது.

''நம்முடைய அரசாங்க மொழி தமிழாக இருக்கும் என்று பிரகடனம் செய்வதிலே நாம் ஒரு பெரிய முன்னேற்றப் பாதையிலே ஓர் அடியை எடுத்து வைத்திருக்கிறோம்'' என்று அன்று ஆட்சிமொழிச் சட்ட அறிமுகத்தின் போது மாண்புமிகு திரு.சி. சுப்பிரமணியம் பேசினார். இன்று கலைஞர் ஆட்சியில் அவரால் அமைக்கப்பட்ட தனித்துறை இந்த நூலை வெளியிடுவதில் பெருமை கொள்கிறது.

இந்தச் சட்டம் வருமுன் சட்டமன்றத்தில் 'தமிழ் ஆட்சிமொழி' குறித்துப் பலமுறை தருக்கமிடப்பட்டுள்ளது. 'இனி இங்கிலீஷ் பாஷை யில் அரசாங்கத்தை நடத்த முடியாது' என்று சொன்னார் அன்றைய முதல்வர் திரு.ஓ.பி. இராமசாமி ரெட்டியார்.

'இனி எல்லாம் தமிழில்தான்' என்ற உயரிய குறிக்கோளோடு 13.5.96 அன்று தனி அமைச்சகத்தை அமைத்தார் மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்கள்.

அன்றைய சட்டமன்ற நிகழ்ச்சிகளில் தமிழ் ஆட்சிமொழியாக வேண்டும் என்று முழு மூச்சாக உழைத்தவர், உரையாற்றியவர், போராடி யவர் என்ற முறையில் அ.கஜபதி நாயக்கரின் தொண்டினை மறக்க முடியாது.

''அந்த அளவுக்கு நம் மனம் மாற வேண்டும்; அதற்கான முயற்சிகள் செய்ய வேண்டும். அதிகாரத்தில் இருக்கிறவர்கள் உறுதியாகச் செய்யமுடியும்'' என்று முழங்கியவர் கஜபதி நாயக்கர்.

இன்று அதிகாரம் பெற்ற அரசு தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தை நிறைவேற்ற எத்தனை முயற்சிகளை எடுத்து வருகிறது என்பதை நாடறியும்.

பொதுமக்கள் தொடர்பிலிருந்து தலைமைச் செயலகம் வரை இன்று 'தமிழ்' கோலோச்சுகிறது. 'தமிழாய்ந்த தமிழ் மகனின்' ஆட்சியில் தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் உயிர்த்து எழுந்து உண்மையான செயற்பாட்டுக்கு வந்துள்ளது.

எங்கள் சிந்தனையில் விளைந்த இந்நூலிற்கு, இந்தச் சிந்தனைக்கே வித்தான மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்கள் அணிந்துரை வழங்கியிருப்பது எங்களைப் பெரிதும் மகிழ்விக்கிறது. 40 ஆண்டுகட்குப் பின் நாங்கள் எய்தும் வெற்றி ஒவ்வொன்றுக்கும் உரிமை படைத்த மாண்புமிகு முதல்வர் அவர்கள் திருமுன் இந்த நூல் படைக்கப்படுகிறது.

அன்புடன்,

**(மு. தமிழ்க்குடிமகன்)**



**முனைவர் ச. நாகராசன்,**
எம்.ஏ.,எம்.ஃபில்.,பிஎச்.டி.,
தமிழ் வளர்ச்சி இயக்குநர்.

தமிழ் வளர்ச்சி இயக்ககம்,
சென்னை 108.
நாள் 24.3.99

# நன்றியுரை

தமிழ்நாட்டில் தமிழே ஆட்சிமொழி எனும் வகையில் சட்டம் இயற்றபபட்டு நாற்பத்திரண்டு ஆண்டுகளுக்கும் மேலாகிறது. இதனை நடைமுறைப்படுத்த அரசாணைகள் பல பிறப்பிக்கப்பட்டுள்ளன. இவ்வாணைகளி னடிப்படையில் அரசு அலுவலகங்கள், அரசுச் சார்பு நிறுவனங்கள் அனைத்தும் (விதிவிலக்குகளுக்குட்பட்டுத்) தமது நிருவாக நடைமுறைகள் அனைத்திலும் தமிழையே பயன்படுத்துதல் வேண்டும். அவ்வாறு அலுவலகங்களில் தமிழ் பயன்படுத்தப்படும் நிலை குறித்துத் தமிழ் வளர்ச்சித்துறை அலுவலர்கள் ஒவ்வொரு அலுவலகத் திற்கும் நேரில் சென்று ஆய்வு செய்து உரிய நடவடிக்கைகளை மேற்கொள்கின்றனர். திட்டச் செயற்பாட்டில் குறிப்பிடத்தக்க அளவு நல்ல முன்னேற்றம் காணப்பட்டுள்ளது. எனினும் ஆட்சிமொழிச் செயலாக்கம் நூற்றுக்கு நூறு அனைத்து அலுவலகங்களிலும் முழுமையாக அமைந்துள்ள நிலை இல்லை. முழுமையை நோக்கித் தமிழ் வளர்ச்சித் துறையின் பயணம் தொடர்கிறது.

ஆட்சிமொழித் திட்டம், தமிழ் வளர்ச்சிப் பணிகள் ஆகியவற்றில் எல்லையற்ற ஈடுபாடு கொண்ட மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் 1996இல் தமிழ் ஆட்சிமொழித் துறைக்கெனத் தனி அமைச்சகத்தையே தோற்றுவித்து அமைச்சரையும் அமர்த்தியதன் வாயிலாக அன்னைத் தமிழின்பால் அரசுக்குள்ள அக்கறையைப் புலப்படுத்தினார்கள். மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் சீரிய வழிகாட்டுதலால் தமிழ் வளர்ச்சிப்பணிகள் நாளும் நடைபெற்று வருகின்றன.

அரசு அலுவலர்களும், பணியாளர்களும் ஆட்சிமொழித் திட்டம் பற்றிச் செவ்வனே அறிந்து கொள்ளுத[illegible] வேண்டும் என்றும், அப்போது தான் இத்திட்டச் செயலாக்கம் முழுமையாக அமையும் என்றும்,

இந்நோக்கில் 'ஆட்சித்தமிழ்' எனும் நூல் தமிழ் வளர்ச்சித் துறையால் வெளியிடப்படும் என்றும், அரசுப் பணியாளர்கள் தேர்வாணையம் வாயிலாக இதில் தேர்வு எழுதித் தேர்ச்சி பெற்ற பிறகே அவர்களின் தகுதி காண் பருவம் முடிக்கப்பெறும் என்றும் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு, இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் அறிவித்தார்கள். அவ்வறிவிப்பிற்கிணங்கத் தமிழ் வளர்ச்சி இயக்ககம் இந்நூலினைச் சிறந்த முறையில் உருவாக்கியுள்ளது. ஆட்சிமொழி வரலாறு, தமிழ்நாடு ஆட்சிமொழிச் சட்டம், இது தொடர்பான இன்றியமையாத அரசாணைகள், செயலாக்க நிலை, குறைகளைவு நடவடிக்கைகள், தமிழ் வளர்ச்சி தொடர்பான பிற பணிகள் பற்றிய அரிய செய்திகள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. ஆட்சிமொழிச் செயலாக்கம் பற்றி அனைவரும் தெளிவாக அறிந்து கொள்ளவும், அரசு அலுவலகங் களின் நடைமுறையில் முழுமையாகத் தமிழே இடம்பெறவும் இந்நூல் பெரிதும் உதவும் என்பதில் ஐயமில்லை.

இந்நூலிற்குச் சிறந்ததொரு அணிந்துரையை வழங்கிச் சிறப்பித்துள்ள மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களுக்கும், ஆக்கமுறையிலான கருத்துகளை வழங்கி நெறிப்படுத்துவதுடன் இந்நூலுக்கு அழகியதொரு முன்னுரையையும் அளித்துச் சிறப்பித்துள்ள மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு, இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்களுக்கும் தமிழ் வளர்ச்சித்துறையின் சார்பில் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உடனுக்குடன் ஆணைகளை வழங்கித் தமிழ் வளர்ச்சிப் பணிகளுக்கு உறுதுணைபுரியும் தமிழ் வளர்ச்சி-பண்பாடு, அறநிலையத் துறையின் அரசுச் செயலாளர் மற்றும் அலுவலர்கள், இந்நூலில் இடம்பெற்றுள்ள இயல்களை அரிதின் முயன்று எழுதியளித்துள்ள இத்துறையின் உதவி இயக்குநர்கள், பிற வகைகளில் உதவி புரிந்துள்ள இத்துறை அலுவலர்கள்-பணியாளர்கள், அருமையான முறையிலும் விரைந்தும் நூலினை அச்சிட்டளித்த அச்சகத்தார் ஆகியோர்க்கும் என் நன்றி உரியதாகும்.

**ச. நாகராசன்**

# பொருளடக்கம்

# இயல் ஒன்று
# தமிழ் ஆட்சிமொழி வரலாறு

## தமிழின் தொன்மையும் சிறப்பும்

''ஒரு நாட்டுச் செல்வங்களுள் மொழியும் ஒன்றாகும். மொழித் துணையின்றி ஒரு நாட்டார் நாகரிகமாகவும் வசதியாகவும் வாழ்வதரிது. முன்னோர் அரும்பாடுபட்டு ஈட்டிய அறிவுச் செல்வமெல்லாம், மொழி வாயிலாகவே போற்றப்பட்டு வருகிறது''

என்பார் மொழிஞாயிறு தேவநேயப்பாவாணர். உயர்தனிச் செம்மொழியாய், தனித்தியங்க வல்லதாய்த் திகழ்வது தமிழ்.

*''தனித்தியங்கும் தன்மை தமிழினுக்குண்டு*
*தமிழே ஞாலத்தின் தாய்மொழி பண்டு''*

என்பது பாவேந்தர் பாரதிதாசனின் முடிவு. தமிழ், இலத்தீன், கிரேக்கம், எபிரேயம், சீனம், சமக்கிருதம் ஆகியவை உலகின் தொன்மை மொழிகளாகக் கருதப் பெறுகின்றன. இவற்றுள் இலத்தீன், கிரேக்கம், எபிரேயம் ஆகியவை ஏட்டளவில் நின்ற மொழிகளாகிவிட்டன. சமக்கிருதம் உலக வழக்கு அழிந்தொழிந்து சிதைவுற்று மிகக் குறைந்த எண்ணிக்கையோரால் பேசப்படும் மொழியாகிவிட்டது. இவற்றை நோக்கும்போது தமிழ் மட்டுமே இன்றுவரை உயிருள்ள 'என்றுமுளதென் தமிழாய்' இலங்குகிறது.

திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் கண்ட அறிஞர் கால்டுவெல்,

''தமிழ்மொழி பெற்றிருக்கும் எண்ணி மதிப்பிடற்கியலாச் சொற் செல்வங்களும், செந்தமிழ் மொழியின் பல்வேறு வகைப்பட்ட இலக்கண வடிவங்களும் அம்மொழிப் பழைமையை நிலைநாட்டும் நல்ல சான்றுகள் ஆகும்.''

எனத் தமிழின் தொன்மையை வியந்தது மட்டுமன்றி, தமிழின் பெருமையையும் தமிழர் பண்பாட்டையும் உணர்ந்து,

''தமிழ் போன்ற திராவிட மொழியை நன்றாகக் கற்ற ஐரோப்பியர் ஒருவர், அத்தகைய வியத்தகு மொழியை வளர்த்துள்ள மக்களினத்தை மதிப்போடு கருதாமல் இருக்க முடியாது... தென்னிந்தியப் பழங்குடி மக்கள் மிக மதி நுட்பம் வாய்ந்தவர் என்பதற்கையமில்லை''

எனத் தமிழினத்தையும் வியந்து போற்றுகின்றார். இங்கிலாந்திலிருந்து வந்து தமிழைக் கற்ற டாக்டர் ஜி.யு. போப், தமிழின் சிறப்பை உணர்ந்து

தம்முடைய கல்லறையில் 'ஒரு தமிழ் மாணவன்' எனப் பொறிக்கச் செய்தார். தாய்லர் (Taylor) என்ற அறிஞர்.

''மனிதரால் பேசக்கூடிய செம்மை செய்யப்பெற்ற தூய்மையான மொழிகளுள் தமிழும் ஒன்று''

என்றார். டாக்டர் ஸ்லேட்டர் (Dr. Slater) என்பவர்,

''திராவிட மொழிகளுள், துல்லியமாக, சரியாகச் சிந்திப்பதற்குத் தகுந்த பொருத்தமான மொழி தமிழாகும்''

என்றார். தமிழின் தொன்மையை ஆய்ந்த பாவாணர்,

''மாந்தன் முதன்முதலில் தோன்றியவிடம் குமரிநாடே'' (Lemuria) என்பது தமிழறியாமலே சில மேனாட்டுக் கலைவல்லார் கண்ட முடிவாகும். "Lemuria is the cradle of mankind" என எக்கேல் என்பவர் கூறுகின்றார். தமிழ்ச் சரித்திரமும் திராவிட மொழி நூலும் இதற்குத் தக்க சான்று பகர்கின்றன. திராவிடருக்குள் மொழியிலும் இலக்கியத்திலும் நாகரிகத்திலும் தூய்மைப்பட்டவர் இன்றும் தென்னாட்டிலுள்ள தமிழரே. தமிழ்நாட்டுள்ளும் மொழித் திருத்தம் தெற்கு நோக்கியதே. தமிழரின் முன்னோர் இருந்தது தென் பெருங்கடலில் முழுகியுள்ள குமரிநாடு. அது ஒரு காலத்தில் கோடிக்கணக்கான அல்லது இலக்கக் கணக்கான ஆண்டுகள் நிலை பெற்றிருந்தது. பனிமலை (இமயம்) தோன்றியதற்கு முன்பே அது தொன்முது நாடாயிருந்தது. தமிழ் வடக்கு நோக்கிச் செல்லச் செல்லச் சிறிது சிறிதாய்த் திரிந்து பின்பு திராவிடமாகின்றது. திரவிடமும் வடக்கு நோக்கிச் சிறிது சிறிதாய்த் திரிந்து பின்பு ஆரியமாகின்றது''

எனக் கூறியுள்ளமை இங்குக் கருதத்தக்கது.

பேரறிஞர் அண்ணா அவர்கள்,

''நமது தமிழ்மொழி தொன்மைமிக்கது. மென்மைமிக்கது; வளம்பெற்றது; வலிமை பெற்றது. வலிவும், பொலிவும் பெற்றுத் தானும் வாழ்ந்து பிற மொழிகளையும் வாழ வைத்தது தமிழ்''

என்றார். மாண்புமிகு முதல்வர் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத்தின் 118ஆவது பட்டமளிப்பு விழா உரையில்,

''எத்துணைச் செழுமையைத் தமிழ் முன்பே பெற்றிருந்தால் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இலக்கணத்தை உருவாக்கியிருக்கக் கூடும் என்பதை நினைத்துப் பார்த்திட வேண்டும். அதற்கும் சில பல நூற்றாண்டுகளுக்கு முன்பு பிறந்து, தவழ்ந்து, வளர்ந்த மொழி என்பதால் தானே அதன் வாயிலாகத் தமிழரின் சால்பை உணரமுடிகிறது.''

எனத் தமிழின் தொன்மையை ஆய்வியல் நோக்கில் ஆழ்ந்து சிந்திக்கத்தக்க வகையில் தெளிவுபடுத்தியுள்ளார்.

'தமிழ்த்தாய், தன்மக்களைப் புதிய சாத்திரம் வேண்டுதல்', எனும் தலைப்பில் தாம் எழுதிய கவிதையில் பாரதியார் தமிழ்த்தாயே கூறுவதாக,

*கன்னிப் பருவத்தில் அந்நாள் - என்றன்*
*காதில் விழுந்த திசை மொழியெல்லாம்*
*என்னென்னவோ பெயருண்டு - பின்னர்*
*யாவும் அழிவுற்றிறந்தன கண்டீர்*

எனப் பாடல் வரிகளை அமைத்து, தமிழின் நிலைபேற்றுத் தன்மையை உணர்த்தியுள்ளார். 'சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே' என்றும் 'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவதெங்கும் காணோம்' என்றும் பன்மொழியறிந்த பாரதியார் தமிழின் தகுதியைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

பாவேந்தர் பாரதிதாசன் தமிழ் தனித்தியங்கவல்லது எனக் கூறியது மட்டுமன்றி 'உலகின் முதன்மொழி, மூத்த மொழி தமிழே; இயற்கைப் பொருள்கள் தோன்றிய காலத்தே - ஐவகை முதற்பொருளும் தோன்றிய அப்போதே தமிழ் தோன்றிவிட்டது', என்பதை,

*''திங்களொடும் செழும்பரிதி தன்னோடும் விண்ணோடும்*
*உடுக்களோடும்*
*மங்குல் கடல் இவற்றோடும் பிறந்த தமிழுடன் பிறந்தோம்*
*நாங்கள் .... ''*

✱✱✱✱

*''பண்டுவந்த செழும்பொருளே*
*பார் அடர்ந்த இருட்கடலில்*
*படிந்த மக்கள்*
*கண்டு வந்த திருவிளக்கே*
*களிப்பருளும் செந்தமிழே''*

எனப் பல்வேறு பாடல்களில் எடுத்துரைத்துத் தமிழ் உணர்வூட்டினார்.

## தமிழ் உணர்ச்சி

தொன்மைச் சிறப்பும், வளமும் பெற்ற தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட தமிழினம், காலந்தோறும் தமிழ் உணர்ச்சி பெற்றிருந்ததா? 'தமிழ் உணர்ச்சி' என்று எதைக் கருதியது? - என்பதையும் ஆய்ந்தறிய வேண்டும்.

பேரறிஞர் அண்ணா அவர்கள்,

''தமிழ்ச் சமுதாயம் தமிழ் மொழியின் அடிப்படையில்தான் இயங்குகிறது. இதை உணர்ந்திருந்தாலும் எடுத்துச் சொல்ல

முடியாமல் - எடுத்துச் சொல்லும் வகையறியாது - நாம் இருக்கலாம். ஆனால் தமிழ் வாழ்ந்தால்தான் தமிழ்ச் சமுதாயம் வாழ முடியும். தமிழர் வாழ்ந்தால்தான் தமிழ்ச் சமுதாயம் வாழ முடியும் என்று நாம் உள்ளுர உணர்ந்திருக்கிறோம்''

எனக் குறிப்பிட்டதற்கேற்ப, 'தமிழுணர்ச்சி' என்பது இனத்திற்குரிய உணர்ச்சியாக மாற்றம் பெற்ற பாங்கினை அறிந்து கொள்வது இன்றியமையாதது.

உலக மொழிகளுக்கெல்லாம் - பெரும்பாலான மொழிகளுக்கு, மக்களின் பெயரால் மொழி அமைந்திருக்கிறது; அல்லது நாட்டின் பெயரால் மொழி அமைந்திருக்கிறது. ஆனால் தமிழைப் பொறுத்த வரையில் மக்களுக்கு மொழியின் பெயரால் பெயர் அமைகிறது. நாட்டுக்கும் மொழியின் பெயரால் பெயர் அமைகிறது. தமிழ் என்பது முதலாவதாக நிற்கிறது. தமிழர்-தமிழகம் என்பது தமிழின் பின்னாக நிற்கின்றன. இப்படிப்பட்ட ஒரு சிறப்பு தமிழ் மொழிக்கு அமைந்திருக்கிறது.

இத்தகு சிறப்பைப் பெற்ற தமிழில் - தமிழரிடத்தில் 'தமிழ் உணர்ச்சி' என்பது முதலில் பாடுபொருளைக் குறிப்பதாகவே இருந்தது.

*''அருந்தமிழ் ஆற்றல் அறிந்திலர் ஆங்கெனச்*
*சீற்றம் கொண்டு இச்சேனை செல்வது''*

எனும் சிலப்பதிகார வரிகளில் தமிழ் மன்னர்களுடைய ஆற்றலைத் தமிழின் மேல் ஏற்றி வைத்துத் 'தமிழ் ஆற்றல்' எனக் கூறப்பட்டது. இதனால் தமிழ் என்பதற்கு 'வீரம்' என்று பொருள் கொள்ளப்பட்டது.

'ஆரிய அரசன் பிருகத்தனுக்குத்(குறிஞ்சிப்பாட்டு) தமிழ் உணர்த்தியது' என்ற பகுதியில் தமிழ் என்பதற்குப் பொருள் 'அகப்பொருள்' என்றாகிறது.

திருமந்திரத்திற்குத் 'தமிழ் மூவாயிரம்' என்றே பெயர் உண்டு. இதில் திருமூலர்,

*''என்னை நன்றாக இறைவன் படைத்தனன்*
*தன்னை நன்றாகத் தமிழ்செய்யு மாறே''*

எனப் பாடுவதில் 'தமிழ்' என்பது 'இறைமை' எனப் பொருள் தந்தது.

தேவாரம் பாடிய சம்பந்தரைப் பற்றிக் குறிப்பிடும்போது 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்' என்கிறார் சுந்தரர். இக்குறிப்பில் 'தமிழ்' என்பது தமிழ்ச் சமயமான 'சைவ சமயம்' எனப் பொருள் பெறுகிறது.

இவ்வாறு பாடுபொருளே 'தமிழ்' என்றும் 'தமிழ் உணர்ச்சி' என்றும் கருதப்பட்ட போக்கு, கால்டுவெல் காலத்தில்தான் மாற்றம் பெறுகிறது. முன்பு இருந்ததெல்லாம் பாடுபொருளைப் பற்றிய உணர்ச்சி;

பாடு பொருளையே மொழி என்று கொண்ட ஓர் உணர்வு. கால்டுவெல் காலத்துக்குப் பின்பு, மொழி என்ற ஒன்று உண்டு - பாடு பொருள்கள் எல்லாம் மொழியாகிவிடா; பாடுபொருளை வெளிப்படுத்துவதற்கு மொழி ஒரு கருவியாக அமைகிறது என்ற தெளிவான உணர்வாக இது மாற்றம் பெறுகிறது.

மொழியைக் கருவி எனக் கருதும் கொள்கையும் இக்காலத்தில் ஏற்கக் கூடியதல்ல. ஏனெனில் கருவி உணர்வுடன் தொடர்பு கொண்டதன்று. ஒரு கருவி, வாழ்நாள் முழுவதும் உடனிருக்கும் என்று கூறமுடியாது. ஒரு கருவியை முற்றிலும் ஒதுக்கிவிட்டு வேறு ஒரு கருவியைப் பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்பு அமைவதுண்டு. இத்தகைய நிலைமைகள் மொழிக்கு இல்லை. எனவே அதைக் கருவி என்று உரைத்தல் பொருந்தாது. ..மொழி உயிர்மை உடையது. பேசும் மக்களின் முயற்சியால் வளம் பெறக்கூடியது. மொழிக்குரியோர் போற்றத் தவறினால் அது திரிபடைகிறது; மறைந்தும் விடுகிறது. பெண்ணானவள் குழந்தை பெற்றுத் தரும் வெறும் இயந்திரம் என்பார் சிலர். ''அவள் தாயாகி நம்மை வளர்த்து ஆளாக்கி வாழ் நாளெல்லாம் தொடர்ந்து வரும் பெண்மை'' என்பதை உணர்பவர்கள் மொழியின் சிறப்பை மேலும் உணர முடியும்.

மொழி தொடர்ச்சி உடையது. வழிவழியாக வரும் பரம்பரைச் சொத்து போன்றது. ஒரு மொழிக்குரியோர், வேறு மொழியாளரின் இடையில் வாழ வேண்டிய சூழ்நிலை பெற்றபோதும், அவர்களுக்கு மொழிப் பற்று இருக்குமானால், அம்மொழி பரம்பரைச் செல்வம்போல் அழிவின்றி விளங்கும். இன்றேல் மெல்ல மெல்ல உருவிழந்து, உயிரிழந்து, அடியோடு மறைந்து விடும். இவை மட்டுமன்றி ஓர் இனத்தை அழிக்க விரும்புவோர் அவ்வினத்தின் மொழியை முதலில் அழிப்பார்கள். காரணம் மொழி பண்பாட்டைக் காத்து வருகிறது. எனவே மொழி அழிக்கப்படும்போது பண்பாடும் அழிகிறது. அந்த மொழிக்குரியோரின் தனித்தன்மையும் ஒழிந்து விடுகிறது. தாய்மொழியை மறந்து தம்மைச் சுற்றியுள்ளோரின் மொழியை ஏற்றுக் கொள்ளும் மனம் கொண்ட இனம், தன் தனித்தன்மை, பண்பாடு ஆகியவற்றை இழந்து விடுகிறது. இதற்கு,

1. பிரான்சில் வாழ்ந்திருந்த 'கால்' இனத்தவர் தம்மொழியைத் துறந்து பிரெஞ்சு மொழியை ஏற்றுக் கொண்டதால் அந்த இனமே அழிந்தமை,

2. வட இந்தியா முழுவதும் பரவியிருந்த திராவிடர் தம் மொழியைத் துறந்து, வந்தேறிகளின் மொழியை ஏற்றுக் கொண்டதால் அவர்களின் பண்பாடே மாறிப்போனமை,

3. மொரீசியசுத் தீவில் ஏறத்தாழ 200 ஆண்டுகளுக்கு முன்பு குடியேறிய தமிழர்கள் தாய்மொழியை மறந்துவிட்டு 'கிரியோல்' என்ற கலப்பு மொழியை ஏற்றுக் கொண்டதால், தங்கள் தமிழறிவை இழந்தமை,

4. மொழிப்பற்றாளர்கள் உழைப்பால், செருமன் மொழி மேலாண்மையிலிருந்து விடுபட்டுச் 'செக்' நாட்டினர் இன்று தனி இனமாக வாழ்தல்

ஆகியவற்றைச் சான்றுகளாகக் கொள்ளலாம்.

## சிங்கப்பூரில் ஆட்சிமொழிகள்

உலகின் சில நாடுகளில் முறையான ஆட்சிமொழிச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டு, அந்நாட்டின் மொழி மட்டுமன்றி, ஆட்சிமொழியாக ஏற்றுக் கொள்ளப்பட்ட மொழிகளும் காத்துப் பேணப்படுகின்றன. சான்றாகச் சிங்கப்பூரில் இன்று 73 விழுக்காடு சீனர்களும் 18 விழுக்காடு மலேசிய மக்களும் 6 விழுக்காடு இந்திய மக்களும் உள்ளனர். மிகப் பெரிய மக்கள் பலம் பெற்றிருந்தாலும், மக்கள் செயல் கட்சித் தலைவரும் 30 ஆண்டுகளுக்கும் மேலாக ஆட்சியில் இருக்கும் பிரதமருமாகிய லீ-குவான்-யு அவர்கள், ஆட்சிமொழி குறித்துத் தெளிவானதும் பெருந்தன்மையுமான முடிவை எடுத்துள்ளார். இதில் தேசிய மொழி (National Language) என்பது மலாய் மொழியாகும். காரணம் இதுதான் மண்ணின் மொழியுமாகும்.

அடுத்து, ஆட்சிமொழிகளாவன (Official Languages) 1. மலாய், 2. சீனம், 3. தமிழ், 4. ஆங்கிலம். இதனைச் செயற்படுத்துவதிலும் இந்த ஒழுங்குமுறை கடைப்பிடிக்கப்படுகிறது. சிங்கப்பூர் நாடு முழுமையும் ஆட்சி செலுத்துவதற்கான தலைமையான இடம் நாடாளுமன்றம்தான். அந்த நாடாளுமன்றத்தின் முகப்பில் முதலில் மலாய் மொழியிலும், அடுத்துச் சீன மொழியிலும், 'நாடாளுமன்றக் கட்டிடம்' என்று மூன்றாவது இடத்தில் தமிழ் மொழியிலும், 'Parliament House' என்று நான்காவது இடத்தில் ஆங்கில மொழியிலும் பெயர்ப் பலகை இருப்பதைக் காணலாம். இந்த அனைத்து மொழிகளுக்கும் தொடர்பு மொழியாகவும், நிருவாக மொழியாகவும் 'ஆங்கிலம்' விளங்குகிறது. இது தொடர்பாக, சிங்கப்பூர் அரசு வெளியிட்ட செய்திக் குறிப்பு கீழே தரப்பட்டுள்ளது.

### LANGUAGE AND LITERACY

The official languages are Malay, Chinese, Tamil and English. Malay is the national language and English the language of administration. Mandarin is being increasingly used among the

Chinese in place of the main Chinese dialects - Hokkien, Teochew, Cantonese, Hakka, Hainanese and Foochow. Besides Tamil, some of the other languages spoken by Indians are Malayalam, Punjabi, Telugu, Hindi and Bengali.

மேற்கூறியவற்றிலிருந்து மொழி-மொழியுணர்ச்சி என்பது பாடுபொருளைக் குறிப்பதல்ல, கருவியைக் குறிப்பதல்ல என்பதையும், மொழி என்பது ஓர் இனத்தின் பண்பாட்டுக் கூறு என்பதையும், அந்த இனத்தின் மனப்பாங்கிற்கேற்ப வாழ்வையும், தாழ்வையும் பெறக்கூடிய உயிர்மை கொண்டது என்பதையும் அறியலாம்.

மொழிக்குரிய இனம் மொழியைக் காக்கவல்ல உணர்வையும், மொழியைப் பெருமைக்குரிய செல்வமாகக் கருதிக் காப்பாற்றி வரும் தலைமுறையிடம் ஒப்படைக்கும் பொறுப்புணர்வையும், அன்றாடச் செயற்பாடுகளில் பேச்சாலும், எழுத்தாலும் அதன் பயன்பாட்டை மிகுதியாக்கி வளர்க்கும் கடமையுணர்வையும் கொண்டதாக இருக்க வேண்டும். இத்தகைய உணர்வுகளுக்கு அடிப்படையாக அந்த இனம் தம் மொழியை உயிர் எனக் கருதும் உண்மையுணர்வு - வலிமைமிக்கதாய் அமைய வேண்டும். இத்தகைய மொழியுணர்வு தமிழரிடம் தோன்றிய வரலாற்றை,

''தமிழுக்கு அமுதென்றுபேர்! - அந்தத்
தமிழ் இன்பத் தமிழ் எங்கள் உயிருக்குநேர்!

***

''தமிழ் எங்கள் உயிர் என்பதாலே - வெல்லுந்
தரமுண்டு தமிழருக் கிப்புவி மேலே''

எனும் பாவேந்தரின் வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

## ஆட்சி மொழி விளக்கம்

'ஆட்சி' என்ற சொல்லுக்கு, சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி (Lexicon) 'ஆள், ஆளுகை, உரிமை', எனப்பொருள் கூறுகிறது. சென்னைப் பல்கலைக்கழக 'ஆங்கில - தமிழ்ச் சொற்களஞ்சியம் 'Administration' என்பதற்கு 'நடைமுறை ஆட்சிமுறை, ஆட்சிமுறை, நிருவாகம், செயலாட்சி, ஆட்சியினர்' எனப் பொருள் தருகிறது. நா. கதிரைவேற்பிள்ளையின் தமிழ் மொழியகராதி 'ஆட்சி' என்பதற்கு 'ஆண்மை, ஆளுமை, உரிமை நிலையினொன்று, நன்னிமித்தம், பழக்கம், முயற்சி' எனப் பொருள் கூறுகிறது. 1862 இல் வெளிவந்த வின்சுலோவின் தமிழ்-அகராதி 'ஆட்சி' என்ற சொல்லுக்கு 'ஆளுகை, உரிமை, வழக்கம்' எனப் பொருள் தருகிறது அமெரிக்கக் கலைக்களஞ்சியம் (The Encyclopaedia Americana) 'ஆட்சி' என்பதை, 'செயலாட்சியின் மேலாண்மை' என்கிறது. ''இச் சொல் மேலாளர்

தொகுதியினையும், அவர்களது மேலாண்மைக் காலத்தையும் சுட்டுகிறது. அதன் பரந்த பொருளில் மேலாண்மை என்ற ஒரே பொருளுடைய 'ஆட்சி' என்ற சொல் செயலாண்மைக் கட்டளைகளுடன் கூடிய தொகுதி ஒத்துழைப்பால், திட்டமிடல், அமைப்பு ஆகியவற்றால் அதன் குறிக்கோளினை நிறைவு செய்ய இயலும். இது ஒரு கலையும்,வளரும் அறிவியலுமாகும். இது பலவகையான வாழ்க்கைத் தொழில்களிலும் மிகவும் தேவைப்படுகிறது'' என்றும் விளக்கமளிக்கிறது. நியூ காலேஜியேட் அகராதி **(New Collegiate Dictionary)** 'ஆட்சி' என்ற சொல்லுக்கு

1. ஆட்சி செலுத்தும் ஒரு செயல் அல்லது செயல்முறை
2. மேலாண்மை, நிருவாகச் செயல்களின் நிறைவேற்றம்
3. கொள்கையாக்கத்திலிருந்து வேறுபடும் பொதுவான பணிகளைச் செயற்படுத்துதல்
4. அ. ஆட்சி செலுத்தும் ஒரு குழு

   ஆ. மக்களாட்சியின் கீழான அரசியல் செயற்குழு

   இ. அரசின் முகமை அல்லது குழுமம்.

என விளக்கமளிக்கிறது. 'ஆக்சுபோர்டு' ஆங்கில அகராதி 'ஆட்சி' என்பதை

1. ஆட்சி புரியும் செயல் அல்லது ஓர் அலுவலகத்தில், பணியில், அமைச்சில் பணியாற்றுதல், கடமையைச் செய்தல்.
2. செயலாற்றுதல், நிறைவேற்றம்
3. வாணிக மேலாண்மை

என விளக்குகிறது.

இவ்வாறு பல்வேறு வகைகளில் பொருளுரைக்கப்பட்ட 'ஆட்சி'யானது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட 'அரசு' ஒன்றினால் நடத்தப்படுகிறது. இவ்வரசு, ஆட்சியைச் செலுத்த- அரசின் கடமைகளை நிறைவேற்றப் பயன்படுத்தும் மொழியே 'ஆட்சிமொழி' எனப்படும்.

ஆட்சி-அரசு-மக்கள் எனும் மூன்றும் சட்டமுறைப்படி தனித்தனி அமைப்புகளாகத் தோற்றமளித்தாலும், இம்மூன்றும் இடையறாது இணைந்தாற்றும் செயற்பாடுகளே 'ஆட்சி' (அல்லது) 'அரசாட்சி' எனப் பெயர் பெறுகிறது. குடியரசு நாட்டில் ஆட்சியை நடத்த வேண்டிய 'அரசை' அமைக்கும் உரிமை மக்களுக்கு மட்டுமே உரியதாகும். அமெரிக்கக் குடியரசுத் தலைவராய்த் திகழ்ந்த ஆபிரகாம்லிங்கன் தம் கெட்டிஸ்பர்க் உரையில், அரசுக்கும் மக்களுக்கும் உள்ள உறவை ''அரசு மக்களுடையது; மக்களால் ஆக்கப்பட்டது; மக்களுக்காக அமைந்தது'' எனத் தெளிவுபடுத்தியுள்ளார்.

மக்களால் மக்களுக்காக நடத்தப்படும் ஆட்சியில் அம்மக்கள் பேசும்மொழியே ஆட்சிமொழியாக அமைவதுதான் இயற்கை நீதியாகும். மக்களாட்சிக் கோட்பாட்டிற்கு உகந்ததுமாகும். மாறாக அம்மண்ணில் தோன்றாத வேற்றுமொழி ஆட்சிமொழியாகுமானால் அது மக்களாட்சிக் கோட்பாட்டிற்கும், இயற்கை நீதிக்கும் மாறான செயலாகும்.

ஒருமொழி, நாட்டின் ஆட்சிமொழியாவதற்கு இலக்கணம் ஏதும் வரையறுக்கப்படவில்லையாயினும், அம்மொழியைப் பேசும் மக்களின் மொழி விழிப்புணர்வும், எழுச்சியும், பயன்பாட்டில் வீழாது வாழ வைக்கும் முயற்சிகளுமே அதன் ஆட்சிமொழித் தகுதியை மேம்படுத்துகின்றன அல்லது தாழ்த்துகின்றன. பேரறிஞர் அண்ணா அவர்கள் மதுரைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் ஆற்றிய உரையில்,

> ''பயிற்றுமொழி, பாடமொழி, ஆட்சிமொழி, இணைப்பு மொழி என்ற சொற்றொடர்கள் வேகமாக உலவிடக் காண்கிறோம். ''தாய்மொழி'' என்னும் தகுதிக்கு ஈடாக, வேறு எந்தத் தகுதியையும் ஒரு மொழி பெற்றிடத் தேவையில்லை. ஆயினும் நமது தமிழ்மொழி, நமது தாய்மொழி என்பதால் மட்டுமன்று, வளமிக்கது என்பதாலும் எவரும் வியந்து பாராட்டத்தக்கதாகிறது. அங்கே வளம் கெடாமலும் மேலும் வளரவுமான செயல்களைச் செம்மையாக்கித் தருவது உமது கடமையாகும. தமிழ் ஆட்சிமொழியாக எல்லாத் துறைகளிலும் திகழ்வதற்கான சூழ்நிலையை உருவாக்குவதில் உமது நல்லார்வம் நிரம்பத் தேவை''

என்றும்; இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டுத் தொடக்க உரையில்,

> ''தமிழ் மொழியின் அருமை பெருமையை நாம் உணர்வதோடு, பிறரும் உணர்ந்து, தமிழர்களாகிய நம்மை அவர்கள் நோக்கி இந்தத் தமிழ்மொழி உங்களுக்கு மட்டும் உரிய மொழி அல்ல, எங்களுக்கும் அதுதான் மொழி, அதுதான் இணைப்புமொழி, அதுதான் பொதுமொழி, அதுதான் ஆட்சிமொழி என்று கூறும் காலம் வரும்''

என்றும் கூறியுள்ள கருத்துகள் இங்குச் சிந்திக்கத் தக்கன.

மாண்புமிகு முதல்வர் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் பாரீசில் நடைபெற்ற மூன்றாம் உலகத் தமிழ் மாநாட்டில் ஆற்றிய உரையில் ,

> தமிழ், உலகின் பல பகுதிகளில் பரவியுள்ளது, தமிழர்கள் உலகெங்கும் சென்றுள்ளார்கள். ஆனால், தமிழ்மொழி எடுத்துக்காட்டாக மொரீசியசுத் தீவில் மறைந்து வருகிறது. இன்னும் வேறு சில நாடுகளிலுள்ள தமிழர்களும் தம்

தாய்மொழியை மறந்துவிடக் கூடிய அபாயத்திலுள்ளனர். இந்த மாதிரியான நிலைமை தொடர்ந்து நிலவ அனுமதிக்கக் கூடாது.

தமிழர்கள் வாழ்கின்ற நாடுகளிளெல்லாம், தமிழைக் கற்பதற்கான வாய்ப்பிற்கும், தமிழனோடு தொடர்ந்து தொடர்பு வைத்துக் கொள்வதற்கான வாய்ப்பிற்கும் வகை செய்யப்பட வேண்டும்.

மொழிப் பிரச்சினைமீது கவனம் செலுத்துவது தவறோ குற்றமோ ஆகாது என்பதை, அண்மையில் நான் பல்வேறு ஐரோப்பிய நாடுகளைப் பார்த்தபோது கண்டேன்.

சுவிட்சர்லாந்து, இத்தாலி போன்ற நாடுகளில் தாய்மொழிப் பிரச்சினை,பிற தேசியப் பிரச்சனைகள் எதற்கும் குறையாத இடத்தைப் பெற்றுள்ளது. வரலாற்றுக் காலம் தொட்டு ஆழ்ந்த புலமை பெற்றது தமிழ் மொழியாகும். அது ஒரு செழுமையான மொழி, பாரதி போன்ற கவிஞர்கள் அதன் பெருமையைப் பாடியிருக்கிறார்கள்.

ஆனால், அந்தத் தொல்புகழையே போற்றிக் கொண்டு ஓய்ந்திருக்கக் கூடாது. சிந்தனைகளை உணர்த்தவும் விஞ்ஞான வளமிக்க-விண்வெளிப் பயணம் நடத்துகிற நவீன காலத்தின் செய்திகளைத் தெரிவிப்பதற்கும் ஏற்ற கருவியாய், வாகனமாய்த் தமிழ் மாற வேண்டும் என்பதனை நாம் உணர வேண்டும். தொழில் நுணுக்கம், அறிவியல், மருத்துவம் முதலியவற்றைக் கற்பிப்பதற்கு ஏற்ற பயிற்று மொழியாய் வளர்ந்தாக வேண்டும்.

தமிழ் வளர்வதற்காகத் தமிழ் நாட்டுக்கும் பிற நாடுகளுக்கும் இடையே மாணவர்களைப் பரிமாறிக் கொள்வது தேவையாகும். வேற்று மொழிகளின் தொடர்பால் தன் தனித்தன்மை கெடாமல் தமிழ் செழுமைப் படுத்தப்படலாம்.

ஆங்கிலம்-தமிழ் புதிய அகராதி ஒன்றை உருவாக்குதலும் தேவையாகும். இந்த அகராதி மிகச் சிறந்ததாய் அமைய வேண்டுமெனின் மூன்று இலட்சம் சொற்களுக்குப் பதில் குறைந்த அளவு ஆறு இலட்சம் சொற்களேனும் இடம் பெற்றிட வேண்டும். அப்போதுதான் தமிழ் உண்மையான ஒரு புத்துலக மொழியாக முடியும்.

இங்கே நீங்கள் தமிழ்நாட்டுத் தூதுக்குழுவினரைப் பார்க்கின்றீர்கள். அவர்கள் மருத்துவ மனைக்குத் தம் குழந்தையை எடுத்து வந்திருக்கிற பெருமிதமான தாயைப் போன்றவர்கள். அனுபவம் வாய்ந்த மருத்துவ வல்லுநர்களையும், அறுவை மருத்துவ வல்லுநர்களையும் போன்றவர்கள் இங்கே கூடியுள்ள தமிழறிஞர்கள். அவர்கள் குழந்தைக்கு (தமிழுக்கு) முழு உடல் நலத்தையும் தர முயல்கிறார்கள்.

இப்படிப்பட்ட கடுமையான அறுவைச் சிகிச்சைகளுக்கெல்லாம் குழந்தை இரையாகலாமா என்று எண்ணி, அந்தச் சிகிச்சையைத் தடுக்கக் கூடாது தாய். அது தாய்மை அன்பைக் காட்டுவதாகாது. அதேபோல் அறுவைச் சிகிச்சைக்காரர்களும் கண்டபடி தம் கத்தியை ஓட்டக்கூடாது. தமிழ் வல்லுநர்களும், ஆராய்ச்சி செய்துவிட்டு அத்தோடு தம் பணி முடிந்ததென்று எண்ணிவிடக் கூடாது.

இந்த மாநாடு மூன்று பணிகள் மீது கவனம் செலுத்த வேண்டும். முதலாவதாக உலக நாடுகளுக்கும், தமிழ் நாட்டுக்குமிடையே மாணவர்கள் பரிமாற்றத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். இரண்டாவதாகத் தமிழை ஒரு புத்துலக மொழியாக்கும் வண்ணம் ஆங்கிலம்-தமிழ் அகராதியைத் தயாரிக்கும் பணியிலிறங்க வேண்டும். மூன்றாவதாக உலகின் பல்வேறு நாடுகளிலும் தமிழைப் பரப்பவும் வளர்க்கவும் வழிவகை செய்ய வேண்டும். இந்தப் பணிகளில் மறைந்த அண்ணாவின் அடியொற்றி நடக்கும் எமது தமிழ்நாட்டு அரசு இயன்ற எல்லா உதவிகளையும் செய்யும்.''

எனத் தமிழ் வளர்ச்சிக்கான தொலைநோக்கோடு பல திட்டங்களைக் குறிப்பிட்டதும் இங்குக் கருதத் தக்கது.

இவற்றிலிருந்து மக்களின் மொழியே ஆட்சிமொழியாகும் தகுதி பெற்றது.என்பதையும், அதை வளர்த்து மேம்படுத்தும் கடமையும் அம்மக்களுக்கேயுரியது என்பதையும் உணரலாம்.

## காலந்தோறும் தமிழகத்தின் ஆட்சிமொழி

ஓல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர் காலத்தில் தமிழகத்தில் தமிழே ஆட்சிமொழியாக இருந்தது.

> *இயற்சொல் திரிசொல் திசைச் சொல் வடசொல்லென்று*
> *அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.*
>
> (தொல் :எச்சவியல் : 397)

எனும் தொல்காப்பிய நூற்பா பல சொற்றொகுதிகளைச் சுட்டியுரைக்கிறது. இவ்வாறு பல சொற்றொகுதிகளும், வடமொழிக் கலப்பும் நிலவியபோதிலும் தொல்காப்பியர் காலத்தில் தமிழே ஆட்சிமொழியாகத் திகழ்ந்தது என்பதற்குத் தொல்காப்பியத்துள் எடுத்தாண்டுள்ள சொற்களே சான்றாக நிற்கின்றன.

''அடிசில், அவை, அவையம், அறிவன், ஆக்கம், ஆசிரியர், ஆராய்ச்சி, ஆற்றல், இடுக்கண், இடும்பை, இரங்கல், உசாவுதல், உத்தி, ஊர்தி, காவலர், கொடை, கோட்டம், சார்பு, சிறை, சீர்மை, செய்தி, தகுதி, திங்கள், தெரிநிலை, தெரிவு, தொழில், பாசறை,

பொருண்மை, மரபு, மாண்பு, முதல்வன், முனைவர், மொழிபெயர்ப்பு, மொழிமாற்று, வலியுறுத்தல், வழக்காறு, வேண்டல், வேளாண்''

என்பன போன்ற பல சொற்களைத் தொல்காப்பியர் எடுத்தாண்டுள்ளதைக் கூர்ந்து நோக்கின் இவற்றுள் பல சொற்கள் இன்றும் ஆட்சிச் சொல்லுக்குரிய தகுதியோடு இலங்குவதையும், பயன்பாட்டில் இருப்பதையும் அறியலாம்.

**சங்க காலம்**

'தமிழின வரலாற்றின் பொற்காலம்' எனக் கருதப்படும் சங்க காலத்திலும் தமிழகத்தில் தமிழே ஆட்சிமொழியாகத் திகழ்ந்தது. சங்ககாலத்தில் தமிழகத்தை ஆண்ட சேர, சோழ, பாண்டிய வேந்தர்களால் தமிழ் வளர்க்கப்பட்டது.

''சங்கத் தனிப்பாடல்களின் தொகை 2381 என்ப. சங்கப் புலவர் 473 என்ப'' என முனைவர் வ. சுப. மாணிக்கனார் ஆய்ந்தளித்த குறிப்பொன்றே சங்க காலத்தில் தமிழ் பெற்றிருந்த ஏற்றத்தை எடுத்தியம்பப் போதிய சான்றாகும்.

''அகப்பட்டி, அகன்நகர், அடகு, அடங்கல், அடுக்கம், அண்ணல், அமளி, அயலார், அரங்கு, அரசியல், அல்லங்காடி, அறங்கூறு அவையம், ஆவணம், ஈனில், ஊக்குநர், எக்கி, எழினி, கட்டளை, கம்மியர், கழகம், கால்கோள், கிடங்கு, கூலம், கூலி, சான்றாண்மை, சான்றாளர், சான்று, சான்றோன், சிறுதொழில், சிறுபேராளர், சிறுபொறி, சீர்மிகு, சிருடை, சுருங்கை, செம்மொழி, செவிலி, செய்தொழில், சேமச்செப்பு, தகைமை, தண்டம், தன்தொழில், நகர், நாளங்காடி, நிதி, நிதியம், நுகர்வோர், பெருநகர், பேரணி, பேராயம், பேராளர், மண்டபம், மாட்சி, மின்ஒளி, முதல்வர், முன்றில், மூடை, வலவன், வழங்குநர், வான்கலம், வானஊர்தி, வினைஞர்''

என்பன போன்ற சொற்கள் சங்ககாலத் தமிழாட்சிக்குச் சான்று பகர்வனவாகும்.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் சங்க இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்ட சில சொற்கள் தொடர்ந்து இன்றும் எவ்விதப் பொருள் மாற்றமுமின்றி அன்றாட வாழ்விலும், ஆட்சியிலும் பயன்படுத்தப்பட்டு வரும் சிறப்பைக் காணும்போது, உயர்தனிச் செம்மொழியாம் தமிழ்மொழியின் பழைமை, முதுமை, தொன்மை இவற்றை எண்ணி எண்ணி இறும்பூதெய்தத் தோன்றுகிறது. இச்சிறப்பு உலகிலுள்ள அனைத்து மொழிகளுக்கும் கிட்டவில்லை.

## சங்கம் மருவிய காலம்

சங்கம் மருவிய காலத்தும் தமிழே ஆட்சிமொழியாக விளங்கிற்று.

''அகவை, அடுக்களை, அடைக்கலம், அணிகலன், அணு, அதிகாரம், அந்தி, அமைச்சர், அளவை, ஆய்வு, இடுகாடு, ஊதியம், ஊராண்மை, ஒற்றன், கண்காணிப்பு, கணக்கர், கணக்காயர், காலதர், குறுங்கண், சதுக்கம், சாரணர், செப்பம், தக்கார், தாளாளர், திறப்பாடு,நாழிகைவட்டில், பட்டிமண்டபம், பட்டினப்பாக்கம், பேரமைச்சர், பேரறிவாளர், பொய்வழக்கு, மேற்கோள், வளி, வாங்குநர்''

என்பன போன்ற பல சொற்கள் காப்பியங்களிலும் பதினெண்க் கீழ்க்கணக்கு நூல்களிலும் எடுத்தாளப்பட்டுள்ளமையே போதிய சான்றாகும்.

## முற்காலப் பல்லவர் காலம்

தமிழரிடையே ஒற்றுமையும் விழிப்புணர்வும் இல்லாமை காரணமாக ஆட்சி மாற்றங்கள் ஏற்பட்டன. சங்ககால உயர்நிலை அரசாட்சி வீழ்ச்சியுற்றது. களப்பிரரும் பல்லவர்களும், தமிழகத்தை ஆண்ட நிலை அமைந்தது. களப்பிரர் பாலிமொழியையும், பல்லவர்கள் பிராகிருத மொழியையும் ஆதரித்தனர். பல்லவர்களின் தலைநகரமான காஞ்சியில் 'கடிகா' என்னும் வடமொழிக் கல்லூரி இருந்தது. கல்லூரியின் பேரும் புகழும் வடநாடு முழுவதும் விரவிக்கிடந்தது. முற்காலப் பல்லவ மன்னர்கள் வடமொழிப் புலவர்களைத் தங்களது அவையில் அரசவைப் புலவர்களாகக் கொண்டு வடமொழியைத் தங்களது கண்போல் பேணிக்காத்தனர். இவர்கள் காலத்தில்தான் கோயில்கள் வேதமும், வைதீகப் புராண வரலாறுகளும் விளங்கும் இடங்களாயின. தமிழ்ப் புலவர்கள் வடநூற் கருத்துகளையும், இதிகாசப் புராணக் கருத்துகளையும் அமைத்து இலக்கியங்கள் இயற்றினர். இவர்கள் தமிழும் வடமொழியும் சரிபாதியாகக் கலந்து 'மணிப்பிரவாள' நடையில் நூல்கள் எழுதினர். பக்திப் பனுவல்களுக்கு உரை எழுந்த காலத்தில் வடமொழிக் கலப்பு அளவின்றிப் பெருகிற்று. இவர்கள் காலத்தில் தூய தமிழ்ச் சொற்களுக்கு நேர்ந்த மாற்றங்களில் சிலவற்றைக் காண்போம்.

| | | |
|---|---|---|
| அரசன் | - | ராஜன் |
| அவை | - | சபை |
| தண்டம் | - | தண்ட |
| திரு | - | ஸ்ரீ |
| படி | - | பிரதி |
| மண்டில | - | மண்டல |

அரசவை - ராஜ்யசபை

அரியணை - சிம்மாசனம்

தேர் - ரதம்

யானை - கஜம்

பல்லவர்கள் காலத்தில் ஏற்பட்ட வடமொழிக் கலப்பு தமிழர்களின் பண்பாட்டுக்கூறுகள் பலவற்றையும் சிதைத்து மாற்றியது.

''சங்க கால மன்னர்களின் பெயர்கள் இளஞ்சேட் சென்னி, நலங்கிள்ளி, நெடுஞ்செழியன், அறிவுடைநம்பி போன்றிருக்கவும் பிறகெழுந்த ஆட்சிக்காலத்தில் இராஜேந்திரசோழன், விஜயேந்திரன், சுந்தரபாண்டியன் போன்று மாறியிருப்பதையும் எண்ணுதல் தகுவது. அவ்வாறானால் மாந்தர் பெயர் தொடங்கி ஒவ்வொரு கூறும் மாற்றங்களுக்கு இலக்காகியிருந்தமை புலனாகும். தமிழை மறப்பது அல்லது இழப்பது என்பது ஒருபுறம்; பிறவற்றை ஏற்பது அல்லது போற்றுவது என்று ஒருபுறமும் ஒவ்வொரு கால கட்டத்திலும் நிகழ்ந்து வந்திருக்க வேண்டும்''

எனும் முனைவர் தமிழண்ணல் அவர்களின் மதிப்பீடு இங்கு எண்ணத்தக்கது.

பல்லவர்கள் காலத்தில் நிகழ்ந்த வடமொழிக் கலப்பு, தனிச் சொற்களாகவும், மந்திரங்கள் என்ற பெயரிலும் இன்றுவரை திருக்கோயில்களில் 'இறைநம்பிக்கை' என்ற போர்வையில் நிலவி வருகிறது. தமிழுக்கு நேர்ந்த இந்த இழிநிலைதான் பாவேந்தரை,

**உயிர் போன்ற உங்கள் தமிழ்**
**கடவுளுக்கே உவப்பாதல்**
**இல்லைபோலும்!**
**உயிர் போன்ற உங்கள் தமிழ்**
**உரைத்தக்கால் கடவுளதை**
**ஒப்பார்போலும்!**
**பயிரழிக்கும் விட்டிலெனத்**
**தமிழ்மொழியைப் படுத்தவந்த**
**வடமறைதான்**
**செயிர்தீர வாழ்த்துதற்கும்**
**தேவையினைச் சொல்லுதற்கும்**
**உதவும் போலும்!**

எனக் கொதித்தெழச் செய்தது. முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களை,

*அந்தநாள் வடமொழியின் மணிப்பிர வாள*
*ஆசையிலே தமிழ்மொழியைப் பாதி யாக்கிச்*
*சொந்தமொழி அடைகின்ற கேடு தன்னைச்*
*சொன்னாலும் கேட்காமல் ஆடி னார்கள்*

என்று சாடச் செய்தது.

பல்லவர் காலத்து மன்னர்களும், மக்களும் வடமொழிக் கலப்பை ஏற்று ஆதரவு தந்தமையால், வழக்கிலிருந்த பல தூய தமிழ்ச் சொற்கள் மறைந்தன. தமிழர் வடமொழிக் கலப்பால் இழந்த சொற்செல்வம் அளவிடற்கரியது. நீலாம்பிகை அம்மையார் தொகுத்தளித்த 'வடசொற்றமிழ் அகரவரிசை' தமிழர் இழந்த சொற்செல்வத்தின் அளவை அறிந்து கொள்ளத் துணைபுரிகிறது.

## பிற்காலச் சோழர் காலம்

பல்லவர்கள் காலத்திற்குப் பின் ஆட்சிக்கு வந்த பிற்காலச் சோழர்கள் காலத்தில் ஆட்சி-அரசு என்பதன் நிருவாக எல்லைகள் விரிவடைந்தன. அரசின் நிருவாகத்தை மேற்கொள்ள மண்டலம், நாடு, கூற்றம், ஊர் எனப் புதிய அமைப்புகள் உருவாக்கப்பட்டன. பணிகள் பெருகப் பெருக 'வாரியங்கள்' அமைக்கப்பட்டன. மன்னர்கள் வடமொழியால் பெயர்களைப் பெற்றிருந்த போதிலும் அவர்கள் தமிழுக்குரிய இடத்தை அளிக்கத் தவறவில்லை. சிற்றிலக்கியங்கள் பலவும், கம்பராமாயணமும், நீதிநூல்களும் வெளிவந்து மொழிவளம் பெருகிய காலமாகவே பிற்காலச் சோழர்கள் காலத்தைக் கருதலாம்.

> ''அக்கசாலை, அடுத்தூண், அடையோலை, அணுக்கர், அம்பலத்தார், உடன்கூட்டம், கைச்சாத்து, குடவோலை, குழு, தளவாய், நத்தம், நாட்டாண்மை, பண்டார வாரியம், பெருந்தனம், பேரங்காடி, விழுக்காடு, கூட்டுறவு, பாடிவீடு, வாலாயம்''

போன்ற சொற்கள் பிற்காலச் சோழர்கள் காலத்தில் வழங்கிய ஆட்சிச் சொற்களில் சிலவாகும்.

## பிற்காலப் பாண்டியர் காலம்

பிற்காலப் பாண்டியர் காலத்தில் சமண முனிவர்கள் பலர் வாழ்ந்தனர். இவர்கள் தமிழும் வடமொழியும் இரண்டறக் கலந்த மணிப்பிரவாள நடைப் படைப்புகளைத் தந்தனர். மணிப்பிரவாள நடை பீடு நடை போட்டது.

> ''அகப்பரிவாரம், ஆபத்து உதவிகள், உத்திரமந்திரி, எழுத்து மண்டபம், காணிக்கடன், சரஸ்வதி பண்டாரம், போகம், திருமாளிகை, திணைக்கள நாயகம், பள்ளிச்சந்தம், பிரமதேயம்''

எனத் தமிழிலும் வடமொழியிலுமாக இவர்கள் காலத்து ஆட்சிச் சொற்கள் இருந்தன.

சங்ககாலம் முதலாகப் பிற்காலப் பாண்டியர்காலம் வரை தமிழகத்தில் அமைந்த அரசுகள் பெரும்பான்மையும் தமிழகப் பண்பாட்டையும், தமிழ்மொழிச் சூழலையும் அடிப்படையாகக் கொண்டே அமைந்தன. மன்னர்கள் சிலர் வடமொழிக்கும், வடமொழிவாணர்களுக்கும் அளித்த ஆதரவால் மட்டுமே அவ்வப்போது வடமொழிக் கலப்பு மிகுதியானது என்பதையும் 'ஆட்சிமொழி' என்ற தகுதியோடு வடமொழி வரவில்லை என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும். மொழி விழிப்புணர்வு குறைந்தமையாலும், இறை, மதக் கருத்துகளுக்கு ஆட்பட்டு மக்கள் மயங்கியிருந்த சூழலாலும் நிகழ்ந்த வடமொழி ஊடுருவல் என்றே இதனைக் கருதலாம். இத்தகைய காலங்களிலும் தமிழ் - 'ஆட்சிமொழி' என்ற தகுதியை இழக்காமல் இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

## முகலாயர் காலம்

மேற்குறிப்பிட்ட காலங்களுக்குப் பிறகு, கி.பி. 1526 இல் தமிழகத்தின் மீது படையெடுத்துக் கால்கொண்ட முகலாயர், தில்லி சுல்தான்களின் ஆட்சி தமிழகத்தின் மொழி, பண்பாட்டில் நிகழ்த்திய தாக்குரவுகள் அளப்பரியன. இவர்கள் காலத்தில் அரபு, பாரசீக, இந்துத்தானிச் சொற்கள் ஆட்சிச் சொற்களாக வந்து சேர்ந்தன. அவற்றுள் சில:

> ''அசல், அமுல், அமானத்து, அயன், ஆப்காரி, இனாம், இருசால், கஜானா, தாக்கீது, தாக்கல், தாசில், பசலி, பாக்கி, மராமத்து, மாசூல், ரொக்கம், வசூல், வாரிசு, வாய்தா, ஜப்தி, ஜவாப், ஜமாபந்தி,ஜாமீன், அமீனா, கைதி, தாவா, ரத்து, முன்சீப்பு, இலாக்கா, தாலுக்கா, பிர்க்கா, மசோதா, மகஜர், மாஜி, ஜில்லா, கடுதாசி, கலாட்டா, சல்லீசு, தமாஷ், ஜரூர், கம்மி, குமாஸ்தா, பந்தோபஸ்து, வாபஸ், தஸ்தாவேஜி, பிராது, கவாந்து, ரோந்து, பஜார், பாரா, ஜல்தி, செலான், பட்டுவாடா, லத்தி, ஆஜர், தபா, நமூனா, அம்பாரம், ரகம், ரஸ்தா, ராஜிநாமா, சிபாரிசு, சீல், டாணா, மாமூல், சிரஸ்தார், டபேதார், மஸ்தூர், கிஸ்தி, டேவணி''

இவ்வாறு பல சொற்கள் தமிழில் ஊடுருவித் தமிழ்ப் பயன்பாட்டைக் குறைத்தன. இவற்றுள் சில சொற்கள் அவற்றிற்குப் பொருத்தமான தமிழ்ச் சொற்கள் இருந்தும், மக்கள் பேச்சு வழக்கில் இன்றும் வழங்கப்படுகின்றன.

## விசயநகரப் பேரரசுகள் காலம்

இந்தியப் பண்பாட்டையும், நாகரிகத்தையும் ஏறத்தாழ 300 ஆண்டுக்காலத்திற்குக் காப்பாற்றிய காலம் விசயநகரப் பேரரசுகள் காலமாகும். எனினும் இவர்கள் காலத்தில் சமக்கிருதம், தெலுங்கு, கன்னடம், மராத்தி ஆகிய மொழிச் சொற்கள் தமிழில் கலந்து தமிழ்ப் பயன்பாட்டைக் குறைத்தன.

> ''அப்பட்டம், ஆஸ்தி, எக்கச்சக்கம், சொகுசு, சோலி, விக்கிரையம், அக்கடா, கோசரம், ராத்ரீ, கிரயம், அசம்பாவிதம், ஊர்ஜிதம், கோஷ்டி, சம்பிரதாயம், சன்மானம், நியாயஸ்தலம், பாரதீனம், பிரவேசம், பூர்வாஜிதம், ரணம், வாஸ்தவம்''.

போன்றவை இக்காலத்தில் வழங்கிய சொற்களில் சிலவாகும்.

## ஐரோப்பியர்கள் காலம்

கி.பி. 1498 முதல் கி.பி. 1947 வரை இந்தியாவில் போர்த்துகீசியரும், டச்சுக்காரரும், ஆங்கிலேயரும், டேனிசுக்காரரும், பிரெஞ்சுக்காரரும் வாணிகச் சங்கங்களை அமைத்து வாணிகஞ்செய்யத் தொடங்கிக் காலப்போக்கில் நாடாளும் ஆசைக்கு அடிமையாகி இம்மண்ணின் பேரரசர்களானார்கள். இவர்களுள் ஏறத்தாழ 350 ஆண்டுக்காலம் இந்த நாட்டை ஆட்சி செய்தவர்கள் ஆங்கிலேயர்கள் மட்டுமே என்பது குறிப்பிடத்தக்கது.

> ''சாக்கு, துட்டு, கக்கூசு'', போன்ற டச்சுச் சொற்களும், ''கபே, பீரோ, லாந்தர், பாட்டில்'' போன்ற பிரெஞ்சுச் சொற்களும் ''அல்மாரா, ஆயா, இரசீது, கொறடா, சங்கடம், சாவி, சிப்பாய், சுதாரித்தல், துப்பாக்கி, மேஸ்திரி, வராந்தா, சன்னல், ஜாடி''

போன்ற போர்த்துகீசியச் சொற்களும் தமிழர்களின் பயன்பாட்டுச் சொற்களாகத் தமிழில் கலந்தன.

## ஆங்கிலேயர்கள் காலம்

இந்நாட்டை ஆளவந்த ஆங்கிலேயர் தங்கள் தாய்மொழியை இந்நாட்டு மக்கள் மீது திணித்தனர். அயலவரின் ஆட்சிக்கும் அயல்மொழித் தாக்கத்திற்கும் ஆளான மக்கள் தங்களது மொழியின் பழம்பெருமைகள் அனைத்தையும் மறந்தனர். 1835ஆம் ஆண்டு மெக்காலே பிரபு வெளியிட்ட ஆங்கில முறையிலான கல்வி பற்றிய வெள்ளையறிக்கைக்குப் பின் ஆங்கிலம் இந்நாட்டின் ஆட்சிமொழி யானது. 1837ஆம் ஆண்டு இந்தியாவின் நீதிமன்றங்களில் ஆட்சி மொழியாக இருந்த பாரசீக மொழி நீக்கப்பட்டு ஆங்கில மொழி அரியணை ஏறியது. 1844ஆம் ஆண்டு ஹார்டிங் பிரபு பிறப்பித்த சட்டத்தின்படி ஆங்கிலம் எழுதப் படிக்க, பேசத் தெரிந்தவர்களுக்கு

மட்டுமே அரசுப் பணியில் முன்னுரிமை அளிக்கப்பட்டது. பாரம்பரிய இந்தியக் கல்விமுறை அழிந்து, ஐரோப்பியக் கல்விமுறை காலூன்றியது. வேலை வாய்ப்புக் கிட்டும் என்ற வேட்கையிலும், வாணிகத் தொடர்பாலும் தமிழர்கள் கற்றுக்கொண்ட, பயன்படுத்திய மொழி ஆங்கிலம். ஆனால் இந்த எல்லைகளைக் கடந்து கல்லாதார் நாவிலும் நடம் பயிலும் வல்லமையை ஆங்கிலம் பெற்றுவிட்டது. ஆங்கில மொழிச் சொற்களைத் தமிழ் எனக் கருதிப் பயன்படுத்தும் அறியாமையும், தமிழில் பேசுவதையும் எழுதுவதையும் இழுக்கெனக் கருதும் தாழ்வு மனப்பான்மையும், விரும்பி வலிந்து ஏற்றுக் கொண்ட ஆங்கில மோகமும் ஆங்கிலப் பயன்பாட்டை மிகுதியாக்கக் காரணிகளாக அமைந்துவிட்டன.

''என்றும் தூய்மை எழிலோடு இலங்கும்
செந்தமிழ், கலப்பால் சிறப்பினை இழந்து
பொலிவும் வலிவும் பொருக்கென வீழ்ந்திட
என்புருவாகி நின்றமை எண்ணிட
அய்யகோ! கலப்பால் அரும்பெருஞ் செல்வம்
உய்ய வழியிழந்தோடி மறைந்ததே!
அயலவர் தொடர்பால் ஆங்கிலம், வடமொழி
உருதெலாம் சேர்ந்தே உருக்குலைத்தனவே''

என்ற 'மொழிக்கவலை' ஒவ்வொரு தமிழர் நெஞ்சிலும் உருவாகி உண்மையை உணரும் போதுதான் தமிழ் எழுச்சிபெறும்.

## தமிழை ஆட்சிமொழியாக்கத் தனிப்பட்டவர்களின் முயற்சிகள்

'தமிழ் ஆட்சிமொழிச் சட்டம்' தமிழ்நாடு சட்டமன்றத்தில் நிறைவேற்றப்படுவதற்கு முன்பாக, தனிப்பட்டவர்கள் அதற்காக மேற்கொண்ட தொண்டுகளையும், தமிழகத்தில் இருந்த அமைப்புகள் செய்த முயற்சிகளையும், விடுதலைப் போராட்ட காலச் சூழ்நிலையையும் கண்டறிதல் நல்லது.

## மயிலாடுதுறை வேதநாயகம் பிள்ளை

தமிழ்ப் புதின இலக்கியத்தின் முன்னோடியான மயிலாடுதுறை வேதநாயகம் பிள்ளை (1826-1889) தமிழகத்தின் முதல் நீதியரசர் மட்டுமல்லர்; அவர் தலைசிறந்த தமிழ்ப் பற்றாளர். தமிழக நீதிமன்றங்களில் தமிழே ஆட்சி மொழியாக இருக்க வேண்டுமென்று முதன் முதலில் அறிவித்தவர்.

அவர் தாம் எழுதிய 'பிரதாப முதலியார் சரித்திரம்' என்ற புதினத்தில்,

''இந்தத் தேசத்துப் பெரிய பிரபுக்கள், தனவான்கள், மிராசுதாரர்கள், ஜமீன்தாரர்கள், பரிவர்த்தகர்கள் முதலானவர்களுடைய அறியாமையை நினைக்கும்போது நமக்குப் பிரலாபமும், பெருமூச்சும் உண்டாகின்றன. அவர்களில் அநேகர் சுத்த நிரசூஷ ரகுகளாயிருக்கிறார்கள். தங்களுடைய கையெழுத்துகளை மட்டும் எழுதக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். 'சுப்பிரமணியன்' என்பதற்குச் 'சுக்கிரமணியன்' என்றும் 'சிதம்பரம்' என்பதற்குச் 'செலம்பரம்' என்றும் 'துரைசாமி' என்பதற்குத் 'தொரைசாமி' என்றும் 'பொன்னம்பலம்' என்பதற்குப் 'பொண்ணம்பளம்' என்றும் 'வைத்தியலிங்கம்' என்பதற்கு 'வயித்துலிங்கம்' என்றும் கையெழுத்து வைக்கிறார்கள். இந்த வித்துவசிரோமணிகளே ஜுரிகளாகவும், முனிசிபல் கமிஷனர்களாகவும், லோக்கல் போர்டு மெம்பர்களாகவும், பெஞ்சு மாஜிஸ்திரேட்டுகளாகவும், தேவாலய தர்மாலய விசாரணைக் கர்த்தர்களாகவும் நியமிக்கப்படுகிறார்கள். அவர்களுடைய அதிகார ஸ்தானங்களுக்குப் போகும்போது, பிரதிமைகளைப் போல நாற்காலியில் வீற்றிருக்கிறார்களே யல்லாது, அவர்களுடைய வேலை இன்னதென்பதைப் பரிச்சேதம் அறியார்கள். பிரதிமைகளுக்கும் இவர்களுக்கும் பேதம் என்னவென்றால் பிரதிமைகள் அசையாமலிருக்கின்றன. இவர்கள் நாற்காலிகளில் தூங்கி வழிந்து அசைந்து கொண்டிருக்கிறார்கள். தேச பாஷைகளில் தகுந்த வசன காவியங்களிருக்குமானால், இவ்வளவு நிர்ப்பாக்கியமான ஸ்திதியிலிருப்பார்களா? ஆதலால் இங்கிலீஷ், பிரான்சு முதலிய ராஜபாஷைகளைப் படிக்கிறவர்கள், தேச பாஷைகளையுந் தீர்க்கமாக உணர்ந்து இந்தத் தேசத்தைச் சூழ்ந்திருக்கிற அறியாமை என்னும் அந்தகாரம் நீங்கும்படி வசன காவியங்களென்னும் ஞான தீபங்களை ஏற்றுவார்களென்று நம்புகிறோம்.

தமிழ் படிக்காதவர்கள் தமிழ்நாட்டில் வசிக்க யோக்கியர்கள் அல்ல. அவர்கள் எந்த ஊர் பாஷைகளைப் படிக்கிறார்களோ, அந்த ஊரே அவர்களுக்குத் தகுந்த இடமாகையால் சுயபாஷையைப் படிக்காமல் இங்கிலீஷ் மட்டும் படிக்கிறவர்களை இங்கிலீஷ் தேசத்துக்கு அனுப்பிவிடுவோம். பிரான்சு மட்டும் படிக்கிறவர்களைப் பாரிசுப் பட்டணத்துக்கு அனுப்புவோம். லத்தீனுக்கும் சமஸ்கிருதத்துக்கும் சொந்த ஊர் இல்லாதபடியால் அந்தப் பாஷைகளைப் படிக்கிறவர்களை அநாமகரணத் தீவுக்கு அனுப்புவோம் என்றான்''

எனக் கதை மாந்தரைப் பேசவைப்பது, மணிப்பிரவாள நடையில் அமைந்த பகுதியாயினும், அவர் கொண்டிருந்த தமிழார்வத்தைப் புலப்படுத்துகிறது.

## மறைமலையடிகள்

பன்மொழியறிந்த பல்துறை ஆசிரியராய், தனித்தமிழ் இயக்கத் தந்தையாய் விளங்கியவர் மறைமலையடிகள்.

சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் தமிழாசிரியராய்த் திகழ்ந்த பரிதிமாற் கலைஞருடன் நட்புக் கொண்டவர். 'சூரிய நாராயண சாஸ்திரி' என்ற தன் பெயரைப் 'பரிதிமாற் கலைஞர்' என மாற்றிக் கொண்டவர் அத்தமிழாசிரியர். மணிப்பிரவாள நடையை 'முத்தும் பவழமும் கோத்த நடை' என வடமொழி ஆதரவாளர்கள் கூறிய காலத்தில் அந்நடையை 'முத்தும் (தமிழ்) மிளகாய்ப்பழமும் (வடமொழி) கோத்த நடை' என அவர்களை எள்ளிநகையாடி, தனித்தமிழ்ப் பற்றாளராய்த் திகழ்ந்தவர் பரிதிமாற் கலைஞர். இவர் பணியாற்றிய கிறித்துவக் கல்லூரியில் தமிழாசிரியராய்ப் பணியேற்று, இவருடன் நெருங்கிப் பழகியவர் மறைமலையடிகள். தம்முடைய எழுத்திலும், பேச்சிலும் பிறமொழி கலவாத் தமிழ் நடையை - 'தனித்தமிழ்' நடையை அறிமுகப்படுத்தித் தமிழ் மொழியின் தூய்மை காத்த பெருமை இவரையே சாரும்.

> ''வடசொற்களும் பிற சொற்களும் தமிழிற் கலத்தலால் நாடோறும் வழக்கில் உள்ள நிலம், நீர், நெருப்பு, சோறு, ஒளி, கோயில், குளம் முதலான எத்தனையோ பல தமிழ்ச் சொற்களும் வழங்காமல் போதலை உணர்ந்து பிற மொழிக் கலப்பைத் தமிழினின்றும் அறவே ஒழித்தற்கு முயலத் துவங்கினோம்''

என அடிகளாரே தனித்தமிழ் இயக்கத்திற்கான காரணம் காட்டியுள்ளார். மறைமலையடிகள் தொடங்கி வைத்த சொல்லாக்க வழிமுறைகள் இன்றும் புதிய சொல்லாக்க முயற்சிகளுக்கு வழிகாட்டி வருகின்றன. இவர் தம் நாட்குறிப்பில்

> ''பதிவஞ்சல், தொலைவரி, மீன்காட்சியகம், மெய்ப்பு, நூலஞ்சல், மணிப்பொறி, அச்சுக்கட்டை''

போன்ற பல புதிய சொற்களைப் படைத்தளித்துள்ளார் மேலும்,

| | | |
|---|---|---|
| ஒலியெழுதி | - | Gramophone |
| வட்டக்காட்சி | - | Circus |
| முதலுணா | - | Protein |
| கொழுப்புணா | - | Fats |

போன்ற புதுச்சொல்லாக்கங்களையும் உருவாக்கித் தந்தார். இவர் தோற்றுவித்த தனித்தமிழ் இயக்கம்தான் தமிழரிடையே மொழி விழிப்புணர்வைத் தூண்டியது என்பதே வரலாற்று உண்மை.

## தமிழ்த்தென்றல் திரு. வி. கலியாணசுந்தரனார்

தமிழறிஞர்களின் பேச்சும் எழுத்தும் புலவர்களுக்கும், கற்றறிந்தோர்க்கும் மட்டுமே புரியும் என்றிருந்த காலத்தில் தம் எழுத்தாலும், பேச்சாலும் காங்கிரசுப் பேரியக்கத்தில் மொழி உணர்வையும், தொழிலாளர்களிடையே மாபெரும் எழுச்சியையும் உண்டாக்கியவர் தமிழ்த்தென்றல் திரு.வி.க.

> ''சென்னை மாகாணச் சங்கச் சார்பில் தஞ்சை - திருச்சி மாநாடு (20.21.4.1918) தஞ்சையில் கூடியது.தலைமை பூண்டவர் பேற்றிரியட் ஆசிரியர் திவான்பகதூர் கருணாகரமேனன். அம்மாநாட்டில் பல தீர்மானங்கள் நிறைவேறின. அவைகளுள் ஒன்று தமிழைப் பற்றியது. அதை யான் வழிமொழிந்து பேசுகையில், இனிப் பொதுக்கூட்டங்களில் தமிழர்கள் தாய்மொழியிலேயே பேசுதல் வேண்டுமென்றும், அயல் மொழியில் பேசப்புகுந்தால் அவரைத் திருத்தும் பொறுப்பைப் பொதுமக்கள் ஏற்றல் வேண்டுமென்றும் வலியுறுத்தினேன். அதுபற்றித் 'தேசபக்தன்' வாயிலாகவும் கிளர்ச்சி செய்தேன். என் பேச்சும் எழுத்தும் தக்க பயனை விளைத்தன. தமிழில் பேசலாகாது என்று ஆங்கிலத்தில் நாவன்மை காட்டி வந்த பெரும் பெருந்தலைவர்கள் எல்லாரும் தமிழில் பேசப்புகுந்தனர். பொதுமக்கள் கிளர்ச்சியின் முன்னர் எந்தத் தலைவர் என்ன செய்தல் கூடும்? என் வாழ்வில் நிகழ்ந்த முதல் புரட்சி இஃது ஆகும். தமிழ் நாட்டுக் காங்கிரஸ் காரியக் கூட்டமும் தன் கடன்களையெல்லாம் தமிழிலேயே ஆற்றலாயிற்று''

எனத் திரு.வி.க. அவர்களே தாம் செய்த மொழிப் புரட்சியை எடுத்துரைக்கிறார். இவருடைய தமிழ்ப் பணிகளால் காங்கிரசுப் பேரியக்கத்தில் தமிழுணர்வு செழிக்கவும், விடுதலைப் போராட்ட காலத்தில் காங்கிரசாரின் கருத்துகள் வட்டாரமொழிகளில் பரவி அம்மொழிகள் ஏற்றம் பெறவும் அடித்தளம் அமைந்தது. இது மட்டுமன்றி

> ''தற்போதுள்ள ஆட்சிமுறையில் எல்லாக் காரியங்களும் ஆங்கிலத்தில் நடைபெறுகின்றன. அதனால் நம்மவர்கள் தொழிலின் பொருட்டு ஆங்கிலம் பயில அவாவுகின்றார்கள்''

என்றும்

> ''ஆங்கிலக் கல்விமுறை ஒரு பைசாசக் கல்விமுறையாகும். அதை அழிப்பதற்காக இன்று என் வாழ்க்கையை அர்ப்பணம் செய்திருக்கிறேன்''

என்றும் கூறி ஆங்கிலத்திற்கு அடிமையாகும் தமிழர்களை மீட்கும் தொண்டினைத் தம் வாழ்நாளெல்லாம் வற்றாது செய்தவர் தமிழ்த் தெனறல் திரு.வி.க.

திரு.வி.க. படைத்தளித்த தூய தமிழ்ச் சொற்கள் பல. 'தோழர்கள்', 'தொழிலியக்கம்', 'ஒருமைப்பாடு', 'வானப்பன்' (கடவுள்), 'காந்தியம்' 'தேசியம்', 'மார்க்சீயம்', 'கன்னிநூல்', 'காவியம்', 'சிற்பர்', 'இசைஞர்', 'இலக்கியர்', 'தத்துவர்' என்பன திரு.வி.க அவர்களின் சொல்லாக்கங்களுக்குச் சில சான்றுகள்.

## பாரதியார்

தம் கவிதைகளால் விடுதலை உணர்வை வீறுகொண்டு எழச் செய்த பாரதியார் சிறந்த மொழிப்பற்றாளராகவும், மொழி வளர்ச்சிக்கு வழிகூறிய சிந்தனையாளராகவும், சிறந்த மொழிபெயர்ப்பாளராகவும் திகழ்ந்தவர்.

''வேறு வேறு பாஷைகள் - கற்பாய் நீ
வீட்டு வார்த்தை கற்கிலாய் போ! போ! போ!''

என்று பிற மொழிக் கல்வியை வெறுத்தவர்.

''புத்தம் புதிய கலைகள் - பஞ்ச
  பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்;
மெத்த வளருது மேற்கே - அந்த
  மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை.
சொல்லவும் கூடுவதில்லை - அவை
  சொல்லுந்திறமை தமிழ்மொழிக் கில்லை
மெல்லத் தமிழினிச் சாகும் - அந்த
  மேற்கு மொழிகள் புவிமிசையோங்கும்''
என்றந்தப் பேதை உரைத்தான் - ஆ !
  இந்த வசையெனக்கெய்திட லாமோ !
சென்றிடுவீர் எட்டுத்திக்கும் - கலைச்
  செல்வங்கள் யாவுங் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர் !

★ ★ ★ ★

''தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
  பரவும் வகை செய்தல் வேண்டும்''

★ ★ ★ ★

''சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
  தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர் !
''பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
  தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்;
இறவாத புகழுடைய புதுநூல்கள்
  தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்;
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
  சொல்வதிலோர் மகிமை இல்லை;

*திறமான புலமையெனில் வெளிநாட்டோர்*
*அதை வணக்கஞ்செய்தல் வேண்டும்.''*

என்றெல்லாம் தமிழ் வளர்ச்சிக்குத் தடங்களைக் காட்டிய பெருமை பாரதியாருக்குண்டு. விடுதலை உணர்வைத் தூண்டுவதையே முதற்பணியாகக் கொண்டு கவிதைகள் எழுதியும் இதழ் நடத்தியும் வட்டாரமொழியென அக்காலத்தில் கூறப்பட்ட தமிழை வளர்த்த பெருமையும் இவருக்குண்டு. பாரதியார் நல்ல மொழி பெயர்ப்பாளராகவும் திகழ்ந்தவர். ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்கள் பல்கிப் பெருக வேண்டும் என அவாவியவர். 'பாரதியார் கட்டுரைகள்' என்ற நூலில் 'தமிழில் சாஸ்த்ரபரிபாஷை' என்ற பகுதியில்,

> ''மெம்பர்' என்பதற்குச் சரியான தமிழ்ச்சொல் எனக்கு அகப்பட வில்லை. இது ஆச்சரியத்திலும் ஆச்சரியம். 'அவயவி' சரியான வார்த்தையில்லை, 'அங்கத்தான்' கட்டிவராது. 'சபிகன்' சரியான பதந்தான். ஆனால் பொது மக்களுக்குத தெரியாது. யாரேனும் பண்டிதர்கள் நல்ல பதங்கள் கண்டு பிடித்துக் கொடுத்தால் புண்ணியமுண்டு. அரைமணி நேரம் யோசித்துப் பார்த்தேன். 'உறுப்பாளி' ஏதெல்லாமோ நினைத்தேன். ஒன்றும் மனதிற்குப் பொருந்தவில்லை, என்ன செய்வேன்? கடைசியாக 'மெம்பர்' என்று எழுதிவிட்டேன். இன்னும் ஆரஅமர யோசித்துப் பார்த்துச் சரியான பதங்கள் கண்டுபிடித்து மற்றொருமுறை சொல்கிறேன்''

எனக் குறிப்பிடுகின்றார். இக்குறிப்பிலிருந்து தமிழில் புதுச்சொற்கள் பலவாகி ஆங்கிலச் சொற்களை அகற்றும் நிலை வரவேண்டும் என்ற வேட்கை அவரிடம் இருந்ததை அறியமுடிகிறது. (பாரதியார் ஆக்கிய 'உறுப்பாளி' எனும் சொல்தான் இன்று 'உறுப்பினர்' ஆகி வழக்கத்தில் உள்ளது)

## மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர்

பாவாணர், தமிழை வடமொழியினின்றும் மீட்டெடுத்த அரிமா நெஞ்சர் - வேர்ச்சொல் வித்தகர். ''சொல்லாராய்ச்சித் துறையில் திரு. தேவநேயனார் ஒப்பற்ற தனித்திறமையுடையவர் என்றும், அவருக்கு ஒப்பாக இருப்பவர் அருமையாகும் என்றும் யாம் உண்மையாகவே கருதுகின்றோம்'' என மறைமலையடிகளாரால் மதித்துப் போற்றப் பெற்றவர் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர். ''தமிழே திரவிடத்தின் தாயும் ஆரியத்திற்கு மூலமும் எனும் உண்மையை உலகமறிய மேலையறிஞர் ஒப்ப நாட்டவே இறைவன் என்னைப் படைத்திருக்கின்றான்'' என்றும் ''மறைமலையடிகளும் யானும் ஒரு தனி வகையரேம், எம் வாழ்வைத் தமிழ் வாழ்வொடு ஒன்றுவித்துக் கொண்டோம். தமிழை வடமொழியினின்று மீட்கவே இறைவனாற்

படைக்கப்பட்டோம்'' என்றும் வாழ்வின் குறிக்கோள் இயம்பியவர் பாவாணர். தமிழ்கூறு நல்லுலகில் வடமொழிக் கலப்பால் தமிழன் இழந்த வரலாற்றுப் பெரும்புகழையும் தமிழன் மறந்த தமிழின் தொன்மைச் சிறப்பையும், தமிழன் இழந்த தமிழ்ச் சொற்கள் பலவற்றையும் மீட்டெடுத்துத் தந்த பெருமை பாவாணருக்கு மட்டுமே உரியது. 'ஒப்பியன் மொழி நூல்' 'சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்' 'தமிழ் இலக்கிய வரலாறு' 'தமிழ் வரலாறு' 'தமிழர் வரலாறு' 'திரவிடத்தாய்' 'பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும்' எனப் பல நூல்களைப் படைத்தளித்துத் தமிழின் பெருமையை உணர்த்தியவர். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியைத் தொகுத்தளித்து - அத்திட்ட இயக்குநராகவும் பணிபுரிந்தவர்.

> ''தமிழர் பல தமிழ்ச் சொற்களை வழங்காமைக்குக் காரணம், தம்மையும் தம் மொழியையும் பற்றி அவர்கள் கொண்டுள்ள தாழ்வுணர்ச்சியே. வடமொழி தேவமொழி என்றும், அம்மொழியையும் அதன் சொற்களையும் வழங்குவது இறைவனும் விரும்பும் ஏற்றம் என்றும், தவறான கருத்துகளைத் தமிழர் கொண்டதினின்றே, தமிழின் பெருமை குலையத் தொடங்கி விட்டது. ஆங்கிலம் அரசின் மொழி என்ற காரணத்தினாலேயே, தமிழர் அதைப் போற்றவும், தமிழைத் தூற்றவும் தலைப்பட்டாராயின், தேவர் பேசுவதாகவும் தேவதேவன் விரும்புவதாகவும் கருதப்பட்ட வடமொழியை அவர்கள் எத்துணைத் திருப்பற்றோடு போற்றியிருத்தல் வேண்டும்!''

எனத் தமிழர் மொழியுணர்வு இழந்த வரலாற்றைச் சுட்டும் பாவாணர் பல தூய தமிழ்ச் சொற்களைப் படைத்தளித்துள்ளார். அவற்றுள் சில:

| | | |
|---|---|---|
| இருக்கை | - | Seat |
| பிணை | - | Bail |
| வரையறை | - | Definition |
| களம் | - | Field |
| அணியம் | - | Readyness |
| உண்டுறைவகம் | - | Hotel |
| அறிவுரைக்குழு | - | Advisory Board |
| முகவாண்மைகள் | - | Agencies |
| நிகழ்ச்சிக் குறிப்பு | - | Agenda |
| பரிமாற்றப் பட்டி | - | Bill of Exchange |
| வளாகம் | - | Campus |

மொழிஞாயிறு தேவநேயப்பாவாணரின் தொண்டுகள் தமிழர் தமிழுணர்வு பெறவும், இழந்த சொற்களை மீட்கவும், புதுச்சொல்லாக்க

முயற்சிகள் தோன்றவும், பிறமொழித் தாக்கத்திலிருந்து தமிழைக் காக்க வேண்டும் என்ற தமிழ்ப் பாதுகாப்புணர்வு தோன்றவும் வழிகாட்டின எனில் அது மிகையன்று

## புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்

இந்த நூற்றாண்டின் 'புரட்சிக் கவிஞர்' எனப் போற்றப்படுபவர் பாவேந்தர் பாரதிதாசன்,

தமிழ் எனில் எம்முயிர்ப் பொருளாம் - இன்பத்
தமிழ் குன்றுமேல் தமிழ்நாடெங்கும் இருளாம்''

எனத் 'தமிழுயரும் நாளில் தமிழர் உயர்வர்; தமிழை இழந்த தமிழர் உய்யும் வழியில்லை' என்பதைத் தெளிவாக உணர்த்தியவர். பல்வேறு பிணைப்புகளிலிருந்தும், அடிமைத்தனங்களிலிருந்தும் தமிழும், தமிழரும் விடுதலையாக வேண்டுமெனக் கவிதையில் சூளுரைத்து,

''சலுகை போனால் போகட்டும் - என்
அலுவல் போனால் போகட்டும்
தலைமுறை ஒரு கோடி கண்ட என்
தமிழ் விடுதலை ஆகட்டும்''

என்றே வாழ்ந்தவர்.

தமிழ் உணர்வை ஓர் இயக்க உணர்வாக்கி - 'தமிழியக்கம்' உருவாக்கித் தமிழர்களுக்கு உணர்வூட்டினார். தொன்மொழியாம் தமிழ் பிறமொழிக் கலப்பால் நலிவதைக் கண்டு துறைதோறும் தமிழ் வளர்க்கும் ஆக்க நெறிகளைத் தம் 'தமிழியக்கம்' நூலில் தொகுத்துரைத்துத் தமிழர்களை அந்நெறியில் மொழிகாக்கத் தூண்டினார்.

''மணக்கவரும் தென்றலிலே
குளிரா இல்லை? தோப்பில்
நிழலா இல்லை?
தணிப்பரிதாம் துன்பமிது
தமிழகத்தின் தமிழ்த்தெருவில்
தமிழ்தான் இல்லை''

எனத் தமிழகத்தின் சூழ்நிலையைச் சுட்டிக்காட்டித் தமிழ்த் தொண்டாற்றத் தமிழர்களை அணியப்படுத்தினார்.

''தூயதான கோயிலெல்லாம் தமிழே வேண்டும்
அலுவலகத் துறைதோறும் தமிழே வேண்டும்
ஆயகலை அனைத்திலுமே தமிழே வேண்டும்
அடுக்களையில் அங்கணத்தில் தமிழே வேண்டும்
வாயில்தோறும் வாணிகத்துப் பலகை அச்சு
வாய்ப்பனைத்தும் எவ்விடத்தும் தமிழே வேண்டும்

தீயிட்டுப் பொசுக்கும் வகை செய்தல் வேண்டும்
செந்தமிழே அல்லாத பிற சொல் கண்டால்''

எனத் தமிழ் விளங்க வேண்டிய எல்லைகளை எடுத்துரைத்தது மட்டுமன்றிப் பிற மொழியைக் கலக்காமல் தமிழை எழுத வேண்டும் என்பதை,

''காட்சி என்றெழுது தம்பி - சிலர்
காஷி என்பார் அது தப்பாம்
அடிக்கடி உத்தியோகம் என்பர் - அதை
அலுவல் என்றுரைத்திடு தம்பி-
உடுத்திடும் வேட்டியை வேஷ்டி - என
உரைப்பதும் பெரும்பிழை - அன்றோ''

என எழுதியும் காட்டினார். 'ஏடெழுதுவார்', 'ஆளவந்தார்', 'தமிழியம்', 'பல்கலைக்கழகம்' - போன்றவை இவரின் சொல்லாக்கங்களில் சில. தமிழரின் குழந்தைகட்குத் தமிழ்ப் பெயரிடுதல் வேண்டுமெனக் கூறி இவர் படைத்தளித்த தமிழ்ப் பெயர்கள் பல. தமிழரின் வாழ்வு தமிழோடு இணைந்தது; தமிழின் உயர்வே தமிழர் உயர்வு, தமிழ்நாட்டின் உயர்வு என்பதை உணர்த்திய பெருமை புரட்சிக் கவிஞர் பாரதிதாசனுக்கே உரியது.

## பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார்

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் வெளியீடான 'கழக ஆங்கிலம் - தமிழ்க் கையகராதியின்' ஆசிரியர் கா. அப்பாத்துரையார், ஆட்சித் தமிழுக்கு அளவிடற்கரிய தொண்டு செய்தவர். புதுச்சொல் படைத்தும், சட்டச் சொற்கள் முதல் வட்டார வழக்குச் சொற்கள் வரை உள்ள சொற்களைப் புதுக்கியும் ஆட்சிச் சொற்களை அரும்பாடுபட்டு உருவாக்கித் தந்துள்ளார்.

| | | |
|---|---|---|
| Bonus | - | விருப்பூதியம், மிகையூதியம் |
| Cheque | - | காசோலை |
| Delegate | - | பேராள் |
| Expert | - | திறலாள் (வல்லுநர்) |
| Factory | - | தொழிலகம் |
| Passport | - | கடவுச்சீட்டு |
| Television | - | தொலைக்காட்சி |
| Vice-Chancellar | - | துணைவேந்தர் |
| Doctor | - | முனைவர் |

என்பன இவரின் சொல்லாக்கங்களில் சில.

## முனைவர் மு. வரதராசனார்

சங்க இலக்கியங்களில் பொதிந்துள்ள நுட்பமான உணர்வுகளையும், உண்மைகளையும் அனைவரும் புரிந்து கொள்ளுமாறு, தமக்கேயுரிய எளிய இனிய நடையில் நூல்கள் பல படைத்தவர் அறிஞர் மு.வ. அவர்கள். இதுமட்டுமன்றிப் பல புதினங்களை எழுதி நாளேடுகளில் வெளியிட்டு அக்காலத்து மக்களின் படிப்பாற்றலை வளர்த்த பெருமையும் இவருக்குண்டு. 1948-49ஆம் ஆண்டுகளிலேயே 'ஆட்சிமொழி' என்பதைப் பற்றி அறிஞர் மு.வ.,

> ''தமிழ் பல வளம் படைத்துப் பல மொழிக்கும் தாயாகும் பெருமையும் பெற்றுத் தொன்மைச் சிறப்புடையதாய் விளங்குவதாகப் பெருமை கொள்ளலாம். அதனால் அது வாழமுடியாது. மொழியின் உயிர் புலவரிடம் இல்லை - பொதுமக்களின் உள்ளத்தில்தான் உள்ளது. மக்களின் வாழ்க்கை அரசியலை அடிப்படையாகக் கொண்டது. ஆகையால் எந்த மொழி அரசியல் மொழியாக விளங்குமோ அந்தமொழிதான் மக்கள் மொழியாக விளங்கும். நேற்றுத் தோன்றிய கொச்சை மொழியாக இருந்தாலும் அரசியல் மொழியானால் ஓங்கிவாழ முடியும். உலகம் தோன்றிய நாளில் தோன்றிய பண்பட்ட மொழியர்க இருந்தாலும் அரசியல் மொழியாக விளங்க வில்லையானால் வாழ வழியில்லை. ஆகவே தமிழ்நாட்டின் ஆட்சி தமிழில் நடைபெற்றால்தான் தமிழன் தமிழைப் படிப்பான்''.

எனக் கூறிய கருத்து இங்குக் கருதத்தக்கது.

## ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனார்

'ஆட்சிமொழிக் காவலர்' என்ற சிறப்புப் பெயருக்குரிய கீ. இராமலிங்கனாரின் அரும்பணி ஆட்சிமொழி வரலாற்றில் சிறப்பிடம் பெறத்தக்கது. 1935 முதல் நகராட்சி ஆணையராகப் பதவி ஏற்றுப் பல்வேறு நகரங்களில் பணியாற்றினார். பாளையங்கோட்டை நகராட்சியில் தெருக்களுக்குத் தமிழ் நூற்களின் பெயர்களைச் சூட்டித் தமிழ்மணம் கமழச் செய்தார். முதற்கட்டமாகத் தென் மாவட்டங்களில் திருச்சியில் ஆட்சிமொழியாகத் தமிழைப் பயன்படுத்தும் முயற்சியை அரசு மேற்கொண்டது. 1951 இல் கீ. இராமலிங்கனார் திருச்சி நகராட்சியின் ஆணையராக மாறுதல் பெற்று ஆட்சிமொழித் திட்டத்தை முனைப்பாகச் செயற்படுத்தினார். 'நகராட்சி முறை', (1954) - 'தமிழில் ஆட்சிச் சொற்கள்' 'ஆட்சித் துறைத் தமிழ்', 'தமிழில் எழுதுவோம்' - எனும் நூல்களை எழுதி ஆட்சித் தமிழ் வளர்ச்சிக்குத் துணைபுரிந்தார். 1958 இல் தமிழக அரசால் தமிழ் ஆட்சிமொழித் தனிஅலுவலராக அமர்த்தப்பட்டார். ஆட்சிச் சொல்லகராதி, சிறப்பகராதி ஆகியவற்றின்

விரிவாக்கப்பணி, தமிழ் தெரியாத அலுவலர்களுக்குத் தமிழ் கற்பிக்கும் பணி, சட்டத் தமிழாக்கப்பணி, பாவாணரைத் தலைவராகக் கொண்ட தமிழ்ச் சொல்லாக்க மன்றத்தின் துணைத் தலைவர் பணி எனப் பல்வேறு பணிகளின் வழியாக ஆட்சித் தமிழை வளர்த்த பெருமை இவருக்குண்டு.

| | | |
|---|---|---|
| Assurance | - | காப்புறுதி |
| Auditor | - | தணிக்கையாளர் |
| Bus | - | பேருந்து |
| Collector | - | ஆட்சியர் |
| Commissioner | - | ஆணையர் |
| Governer | - | ஆளுநர் |
| Insurance | - | ஈட்டுறுதி |
| Ratification | - | பின்னேற்பு |
| Union | - | ஒன்றிப்பு (இப்போது ஒன்றியம்) |

என்பன கீ. இராமலிங்கனாரின் சொல்லாக்கங்களுக்குச் சான்றுகளாகத் திகழ்கின்றன.

## திரு. கோ. முத்துப்பிள்ளை

அரசுத்துறையில் துணைச் செயலராகப் பணியாற்றியவர் திரு.கோ. முத்துப்பிள்ளை. ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனாரைப் பின்பற்றி ஆட்சித் தமிழ் வளர்க்கும் தமிழ்த் தொண்டராய்த் திகழ்பவர். 'முத்தமிழ் ஆய்வு மன்றம்' என்ற அமைப்பை நிறுவி இன்றுவரையிலும் தமிழ்த் தொண்டில் தளராது ஈடுபட்டு வருபவர். ஆட்சித் தமிழ் வளரத் தம் பேச்சாலும் எழுத்தாலும், ஆக்கமும், ஊக்கமும் அளித்து வருபவர். மொழி பெயர்ப்பிலும், சொல்லாக்கத்திலும் புதுச்சொல்புனைந்தும், இலக்கியச் சொற்களை எடுத்துரைத்தும் ஏற்றமிகு ஆட்சிச் சொல் வித்தகராய் விளங்குவது இவரின் தனிச் சிறப்பாகும்.

| | | |
|---|---|---|
| Active Service | - | செயற்படுபணி |
| Aspiration | - | உயர்வுள்ளல் |
| Efficiency | - | திறப்பாடு |
| Initial | - | சுருக்கொப்பம் |
| Instruction | - | அறிவுறுத்தம் |
| Motel | - | உந்துணவகம் |
| Profession | - | செய்தொழில் |
| Proposal | - | கருத்துரு |

என இவருடைய சொல்லாக்கங்கள் நாளும் வளர்ந்து வருகின்றன.

## ஆட்சித்தமிழ் 



## அமைப்புகளின் முயற்சிகள்

தமிழகத்தில் தமிழ் ஆட்சிமொழியாவதற்குத் தமிழகத்தின் பல்வேறு தமிழ் அமைப்புகளின் பணிகளும் உறுதுணையாக அமைந்தன.

சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம், தென்னிந்தியத் தமிழ்ச்சங்கம், சென்னைத் தமிழ்ப் பாதுகாப்புக் கழகம், தமிழர் பேரவை, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னைத் தமிழர் நல்வாழ்க்கைக் கழகம், தமிழர் திருநாள் கலையறிவுக் கழகம், தமிழகப் புலவர்குழு, சென்னைத் தமிழறிஞர் கழகம் எனப் பல்வேறு அமைப்புகள் தமிழை ஆட்சிமொழியாக்கும் அரும்பணியில் தொண்டாற்றியுள்ளன. இவற்றுள் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் பணிகள் குறிப்பிடத்தக்கனவாய்த் திகழ்ந்தன.

பெரும்புலவர் இ.மு. சுப்பிரமணியப்பிள்ளை அவர்களின் பெருமுயற்சியால் உருவான அமைப்பே 'சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம்', இச்சங்கம் 1935 முதல் பல கலைச் சொல்லாக்க மாநாடுகளை நடத்தி 1938இல் 'கலைச்சொற்கள்' என்ற தலைப்பில் பல்துறைச் சொற்களைத் தொகுத்து வெளியிட்டது. 1940இல் அரசே கலைச் சொல்லாக்கக் குழுவை அமைத்தது. இக்குழுவின் பணி வடசொற்களுக்கு முதலிடம் அளிக்கும் பாங்கில் இருந்தமையால் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் அதனை எதிர்த்துக் குரல் கொடுத்தது. பிறகு அரசு 1941இல் இக்குழுவைப் புத்தாக்கம் செய்தது. இருப்பினும் இதன் பணிகளும் தமிழுக்கு ஆக்கம் தரும் வகையில் அமையவில்லை.

.எனவே இக்குழுவையும், இதன் செயற்பாடுகளையும் எதிர்த்துச் 'சென்னை மாகாணத்தமிழ்ச் சங்கமும்', 'தென்னிந்தியத் தமிழ்ச் சங்கமும், சென்னையில் மாநாட்டையும், கூட்டத்தையும் நடத்திக் கண்டனக்குரல் எழுப்பின. இதன் விளைவாக அரசு கலைச் சொற்குழுவை மாற்றியமைத்தது. இப்புதிய குழுவில் இ. மு. சுப்பிரமணியப் பிள்ளை, அ. முத்தையா, எஸ். ஜி. மணவாளராமானுஜம், சுவாமி புரந்தானந்தர் ஆகியோர் உறுப்பினர்களாக இடம் பெற்றனர். 11.7.1952இல் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் தமிழ் ஆட்சி மொழியாக வேண்டுமென்று ஆளுநருக்கும், தலைமை அமைச்சருக்கும் வேண்டுகோள் விடுத்தது. இவை மட்டுமன்றி சென்னையில் 18.10.1953இல் பி.டி. இராசன் தலைமையிலும்; 20.12.1953இல் சென்னையிலும், 11.4.1954இல் பெண்ணாடகத்திலும், 30.5.1954இல் தூத்துக்குடியிலும், 31.5.1954 இல் நெல்லையிலும் ஆட்சிமொழி மாநாடுகளை அ.கஜபதி நாயக்கர் தலைமையில் நடத்தியது. இம்மாநாடுகளில் தலைமை தாங்கித் தமிழை ஆட்சிமொழியாக்க முழக்கமிட்ட அ. கஜபதிநாயக்கர்தான், சட்டமன்ற உறுப்பினராக இருந்து, பல்லாண்டுகளாகச் சட்டமன்றத்தில் ஆட்சிமொழி விவாதத்திற்குக் கால்கோளிட்டு, அரசைக் கேள்விக் கணைகளால் திணறவைத்து ஆட்சிமொழிச் சட்டம் நிறைவேறப் பெருந் தொண்டாற்றியவர் என்பது குறிப்பிடத்தக்கது. (இவ்வியலின் பிற்பகுதியில் காண்க).

கலைச் சொல்லாக்க முயற்சியில் ஈடுபட்டதுமட்டுமன்றி, 30.1 1955இல் நெல்லையில், சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் பொதுக்கூட்டம் ஒன்றை நடத்தி அதில் 'ஆட்சிச் சொல்லகராதி'யை உருவாக்கித் 'தமிழ்நாட்டில் தமிழிலே ஆட்சி நடைபெறுவதற்கு அரசு ஆவன செய்ய வேண்டுமெனத்' தீர்மானமும் நிறைவேற்றியது. இதன்பிறகு திருநெல்வேலியில் முன்னாள் நீதியரசர் தா. கோமதிநாயகம் பிள்ளை தலைமையில் 'ஆட்சிச் சொல் குழு' அமைக்கப்பட்டது. இதன் உட்குழுவினராக இ.மு. சுப்பிரமணியப் பிள்ளையும், அருளப்பனும் அமைந்து அரும்பணியாற்றினர். சென்னை அரசு ஒவ்வொரு நிலையிலும் இச்சங்கத்திற்குத் துணைபுரிந்தது. இச்சங்கம் உருவாக்கிய ஆட்சிச் சொல்லகராதி 5.12.1955இல் வெளியிடப்பட்டது. இவ்வகராதியில் இடம் பெற்ற சொற்களுக்குத் தக்க திருத்தங்களைத் தருவோருக்குப் பரிசு வழங்கப்படும் எனவும் அறிவிக்கப்பட்டது.

இ.மு. சுப்பிரமணியப்பிள்ளை இதன்பிறகு சென்னைக்கு வந்து 30.1.1956இல் 'ஆட்சிச்சொல் கழகம்' அமைத்தார். இக்கழகத்தின் வேண்டுகோளின்படி மாவட்ட ஆட்சித் தலைவர்களுக்கு ஆட்சிச் சொல்லகராதியின் இரு படிகள் அனுப்பப்பட்டுத் திருத்தங்கள் வேண்டப்பெற்றன. இவ்வாறு பல்வகையானும் முயன்று செப்பமுற அமைக்கப்பெற்ற ஆட்சிச் சொல்லகராதி 21.12.1956இல் இராஜாஜி மண்டபத்தில் அரசிடம் ஒப்படைக்கப்பட்டது. இவ்வகராதியை அரசின் ஆட்சிமொழிக்குழு ஆராய்ந்து அச்சிட்டுப் பல துறைகளுக்கும் அனுப்பியது.

இவ்வாறு இ.மு. சுப்பிரமணியப்பிள்ளையின் பெரு முயற்சியால், சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் இடைவிடாப் பணிகளால் உருவாக்கி அளிக்கப் பெற்ற ஆட்சிச் சொல்லகராதியே, அரசின் ஆட்சிச் சொல்லகராதிக்கு அடித்தளமாக அமைந்தது.

சென்னைத் தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தின் தூண்டுதலால் மதுரை மாவட்ட அலுவலகங்கள் 1939ஆம் ஆண்டிலேயே தமிழில் செயற்பட்டன.

தென்னிந்தியத் தமிழ்ச் சங்கம் 'ஸ்ரீ' என்பதற்குப் பதிலாகத் திரு என்னும் சொல்லைப் பயன்படுத்துமாறு வேண்டுகோள் விடுத்தது.

இத்தகைய பணிகள் ஒருபுறமிருக்கத் தமிழ்நாடு சட்டமன்றத்தில் தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் நிறைவேற்றப்படுவதற்கு இரண்டு திங்கள்களுக்கு முன்பாக, 7.10.1956இல் குழித்தலையில் பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் தலைமையில் நடைபெற்ற 'தமிழ் ஆட்சிமொழி மாநாடு' குறிப்பிடத்தக்கது. அம்மாநாட்டின் அழைப்பிதழையும் பின்வரும் பக்கத்தில் காணலாம்.

(குழித்தலை கழக உயர்நிலைப்பள்ளி)

# தமிழ் ஆட்சிமொழி மாநாடு

7-10-56 ஞாயிறு அன்று காலை 9 மணி முதல்

தலைவர் புரட்சிக்கவி பாரதிதாசன் M.L.A.

திறப்பாளர் யோகி சுத்தானந்த பாரதி

கஜபதி நாயக்கர் M.L.C

கி.ஆ.பெ.

சொற்பொழிவுகள்

அடிகளார் — சி. இலக்குவனார்

ப. சோதிமுத்து

அ. இரத்தினசபாபதி — ஞா. தேவநேயப்பாவாணர்

மா. இராசமாணிக்கம் — கி. இராமலிங்கம்

டாரசன் — மே. சி. சிதம்பரனார்

"தமிழ்க் கதிர்" அ. சிவலிங்கம்

மணி - அரங்கநாதன் குழு

இசை - P.S கலைமணி குழு

நாடகம் உண்டு



இவண்...

மீ.சு. இளமுருகுபொற்செல்வி.

குழித்தலை.

இதன்வழித் 'தமிழ் ஆட்சிமொழிச் சட்டம்' நிறைவேற்றப்படும் வரையில் தமிழர்கள் ஓயாது பல்வேறு வகையில் குரலெழுப்பிக் கொண்டே இருந்தனர் என்பதையும், பாவேந்தர் போன்றவர்களின் தொண்டுகளால் வீழ்ச்சியுற்ற தமிழகத்தில் எழுச்சி தோன்றியது என்பதையும் நாம் உணரலாம்.

இப்பணிகளோடு மேற்குறிப்பிட்ட பல்வேறு அமைப்புகள் நடத்திய மாநாடுகளும், கூட்டங்களும் அவற்றின் தீர்மானங்களும், வெளியீடுகளும் தமிழ் ஆட்சிமொழியாவதற்குரிய சூழலையும், உணர்வையும், அரசின் கவனத்தை ஈர்க்கும் அரும் பணியோடு இணைத்து உருவாக்கின என்றே கூறலாம்.

## விடுதலைப் போராட்ட காலச் சூழ்நிலை

இந்தியாவை அடிமைப்படுத்தி ஆட்சிபுரிந்த வெள்ளையர் காலத்தில் முன்பே கூறிய கல்வி முறையாலும் சட்டத்தாலும் ஆங்கிலம் செல்வாக்குப் பெற்றது. 'எங்கும் எதிலும் ஆங்கிலம்' என்ற நிலை ஏற்பட்டது. ஆட்சித் துறைகள், கல்வி, நீதிமன்றம் என அங்கிங்கெனாதபடி எங்கும் ஆங்கிலமே நிலை நிறுத்தப்பட்டது. கற்றவர்களிடத்திலும் தமிழ்மொழிப் பற்று தேய்பிறையாகி, ஆங்கில மோகம் வளர்பிறையாய் வளர்ந்தது.

தமிழ் மொழிக்கேற்பட்ட இந்த அடிமைச் சூழ்நிலை வெள்ளையரை எதிர்த்து விடுதலைப் போர் தொடங்கியபோதுதான் மாறத் தொடங்கியது. இந்திய விடுதலைப் போரில் ஈடுபட்ட பலரும் தமிழின் மறுமலர்ச்சிக்குப் பாடுபட்டனர். இவர்களின் முயற்சியால்தான் தமிழ்மொழி சமய வேலியைக் கடந்து சமுதாயப் பெரு வெளிக்கு வந்தது எனில் அது மிகையன்று.

ஆங்கிலத் தாக்குரவால் தமிழர்கள் கொண்ட ஆங்கில மோகத்தால் பயன்பாடு குறைந்து 'வட்டாரமொழி' எனக் கருதப்பட்ட தமிழ், இந்திய விடுதலைக்குப் பாடுபட்டவர்களால் பெருவழக்கில் எழுத்து மொழியாகவும் பேச்சு மொழியாகவும் ஏற்றம் பெற்றது. விடுதலைப் போரில் ஈடுபட்ட எழுத்தாளர்கள், தமிழகத்தின் புலவர்கள் என்ற இருவகையினரும் இப்பணியைச் செய்து முடித்தனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பாதியிலே தமிழகத்தில் ஒவ்வொரு துறையிலேயும் தமிழ் மொழி உரிமையிழந்து நின்றது. இசையரங்கில் தெலுங்கு; இறைவன் கோயிலில் வடமொழி; அரசியலில் ஆங்கிலம் எனத் துறைதோறும் வேற்று மொழிகள் ஆதிக்கம் பெற்றமையால் தமிழ்மொழி அடுப்பங்கரையளவில் சிறைப்பட்டிருந்தது. முன்பே குறிப்பிட்டதுபோல வடமொழியின் ஊடுருவலால் 'மணிப்பிரவாளம்' என்ற புதுக்கலப்பு மொழியொன்றும் தோன்றியது. அரசியலில் தமிழர் ஆங்கிலேயருக்கு அடிமைப்பட்டிருந்தனராதலால்

தமிழ் மொழியின் உரிமை காக்கப் போராடுவது புலவர் பெருமக்களின் பொறுப்பாக இருந்தது.

அந்தப் பொறுப்பினை ஏற்றுப் பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த புலவர் பெருமக்களிலே சிலர், தமிழ் மொழியை வளர்ப்பதில் மட்டுமன்றி, அம்மொழியைப் பிற மொழிகளின் ஆதிக்கங்களிலிருந்து விடுவிப்பதிலேயும் கவனம் செலுத்தினர் அவர்களில இராமலிங்க சுவாமிகள், மயிலாடுதுறை வேதநாயகனார், 'மனோன்மணீயம்' சுந்தரனார், பரிதிமாற் கலைஞர், டாக்டர் உ. வே. சாமிநாதையர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

வள்ளலார் பெருமான் தம் காலத்தில் வாழ்ந்த காஞ்சி காமகோடி பீடாதிபதியான சங்கராச்சாரிய சுவாமிகளைத் தாம் சந்திக்க நேர்ந்தபோது, ''மொழிகளுக்கெல்லாம் தாய்மொழி சமக்கிருதமே'' என்று ஆச்சாரிய சுவாமிகள் கூற, அதனை மறுக்காமல், ''ஆயின், தமிழ் தந்தை மொழி'' என்று கூறித் தம் தாய்மொழி ஆரியத்திற்கு நிகரானதென்ற கருத்தினை வலியுறுத்தினார்.

இத்தகைய தமிழுணர்வு வெளிப்பாடுகள் ஒருபுறம் நிகழ, மறுபுறம் டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களால் 1887 இல் சீவகசிந்தாமணியையும், 1889 இல் 'பத்துப்பாட்டை'யும் பதிப்பித்து வெளியிடும் பணியும் நிகழ்ந்தது.

இத்தகைய சூழலில் 1885 ஆம் ஆண்டு திசம்பர் 28இல் மும்பை நகரில் 'இந்தியத் தேசியக் காங்கிரசு மகாசபை' தோன்றியது. ஆயினும் அன்னியமொழியில் கல்வி பயின்று பட்டம் பெற்றவர்கள் மட்டுமே கூடி, பொது மக்களோடு தொடர்பின்றி நடத்தும் எந்த ஒரு இயக்கத்தாலும் நாட்டு மொழி வளர்ச்சியோ, இலக்கியப் படைப்போ ஏற்படாவென்பதற்குக் காங்கிரசு மகாசபையின் முதல் இருபதாண்டுக் கால வரலாறு தக்க சான்றானது.

தமிழ் மொழி, மக்களை வளர்த்ததோடு, மக்கள் மடியிலே தவழ்ந்து தானும் வளர்ந்து வந்திருக்கிறது. உலகத்திலுள்ள ஒவ்வொரு மொழியின் நிலையும் இதுதான். 1905ஆம் ஆண்டுக்குப் பிறகு காங்கிரசு மகாசபையும் அது நடத்தி வந்த இந்திய விடுதலை இயக்கமும் சமுதாயத்தின் அடித்தளத்திலுள்ள மக்களின் சொத்துகளாகிவிட்டன. அதன் பின்னர் தாய்மொழிப் புலமையுடைய வ.உ. சிதம்பரனார், சி. சுப்பிரமணிய பாரதியார், சுயில் சிவா, திரு.வி.க., வ.வே.சு. அய்யர் போன்றவர்கள் விடுதலை இயக்கத்தின் முன்னணித் தலைவர்களானார்கள். இதனால், தமிழ் மொழியின் வரலாற்றிலே முற்போக்கான ஒரு திருப்பம் ஏற்பட்டது. நாட்டுப் பற்றுடைய தமிழர்கள் பழைய இலக்கியங்களைப் புதிய பார்வையிலே பார்த்தனர். அத்துடனன்றி நாட்டுப்பற்று தமிழை வளர்த்தது; தமிழ் நாட்டுணர்வை வளர்த்தது, இதனால் மொழித் துறையிலே ஒரு புதிய மறுமலர்ச்சி தோன்றியது.

குமரி முதல் இமயம் வரையில் 1906 முதல் 1908 வரை கிளர்ந்தெழுந்த 'தேச விடுதலைப் புரட்சி' என்னும் உந்து சக்தியே தம்மைக் கவிஞனாக்கியது என்கிறார் பாரதியார். இவ்வாறே பலர் கவிஞர்களாகவும், பேச்சாளர்களாகவும் மாறினர்.

பாரதியாரின் தேசபக்திப் பாடல்களால் விடுதலை உணர்வு கிளர்ந்தெழுந்தது. தமிழின் புகழும் உயர்ந்தெழுந்தது. 'இந்தியா' எனும் வார இதழ் நடத்தி விடுதலை உணர்வு வளர வழிவகுத்த பாரதியார், தமது நண்பர் பரலி. சு. நெல்லையப்பருக்கு எழுதிய கடிதமொன்றில்

> ''தமிழ், தமிழ், தமிழ் என்று எப்போதும் தமிழை வளர்ப்பதே கடமையாகக் கொள்க. ஆனால், புதிய புதிய செய்தி, புதிய புதிய யோசனை, புதிய புதிய உண்மை, புதிய புதிய இன்பம் தமிழில் ஏறிக்கொண்டே போக வேண்டும்'',

> ''தம்பி! நான் ஏது செய்வேனடா! தமிழைவிட இன்னொரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும்போது எனக்கு வருத்தமுண்டாகின்றது''

என்று குறிப்பிட்டுள்ளார்.

பாரதியார் காலத்திலேயே வாழ்ந்து, அவரோடு தோழமை பூண்டு, அவரைப்போலவே தமிழ்மொழிக்குத் தொண்டு செய்தோர் பலராவர். அவர்களிலே சுப்பிரமணிய சிவா தலையாயவர் ஆவார். இவர், நாட்டின் விடுதலைப் போரில் இரண்டறக் கலந்து, பிரிட்டிசு ஏகாதிபத்திய மென்னும் நச்சு மரத்தை ஒழிக்க அரும்பாடுபட்டார். நீதிபதி பின்ஹே என்னும் ஆங்கிலேயரால் சிவா பத்தாண்டு சிறைத் தண்டனை அளிக்கப் பெற்றார். சிறையிலும் சிறைமீண்ட பின்னரும் பல நூல்கள் எழுதினார். நாடகங்கள் இயற்றினார். ''ஞானபாநு'' என்னும் பெயரில் திங்களிதழ் நடத்தினார். ஆயிரக்கணக்கான அரசியல் - இலக்கிய - சமய மேடைகளில் பேசியும் கவிதைகள் புனைந்தும் தன் தாய்மொழியான தமிழை வளர்க்கும் பணியில் பங்கு கொண்டார். சிறைவாசத்தின்போது தொழுநோய்க்கு இரையானார். நோயின் கொடுமையைத் தாங்க இயலாமல் 1925 இல் மரணமெய்தினார்.

> ''தமிழ்ப் பண்டிதர்களே ! தமிழ் மகா ஜனங்களே! ஜாக்கிரதை, ஜாக்கிரதை! உங்களுடைய பாஷையைக் காப்பாற்றுங்கள். ஒரு ஜன சமூகத்திற்கு உயிர் அதன் பாஷைதான். தமிழ்ப் பாஷை அழிந்துவிட்டால், தமிழர்களின் சிறப்பும் சீரும் அழிந்துவிடும். தமிழ்ப் பாஷையில் தேவையான பதங்கள் இல்லையென்று வாய் கூசாமல் கூறுகின்ற பாரத புத்திரர்களுக்கு அப்பதங்களை யாராய்ந்து கண்டுபிடித்துக் கற்றுக் கொடுங்கள். சரியான பதங்கள் இல்லையேல், தமிழ் வாணியின் கிருபை கொண்டு இன்னும் அநேக காரணப் பெயர்களை யாக்கிக் கொடுங்கள்''.

''உங்கள் நா தமிழே பேசுக; நீங்கள் கையிலேந்தும் இறகு தமிழே எழுதுக; உங்களுடைய ஹிருதயம் தமிழையே நாடுக; உங்களையெல்லாம் தமிழ் மாது தயையுடன் ரட்சித்திடுக''

எனத் தாம் நடத்திய திங்கள் ஏடான 'ஞானபாநு'வில் எழுதினார் சுப்பிரமணிய சிவா. சிறையில் இருந்த காலத்திலும், வெளியே வாழ்ந்த காலத்திலுமாக 30-க்கும் மேற்பட்ட நூல்கள் எழுதித் தமிழுக்கு வளம் சேர்த்த பெருமையும் இவருக்குண்டு.

'தென்னாட்டுத் திலகர்' எனப்போற்றப் பெற்ற விடுதலைப் போராட்ட வீரர் செக்கிழுத்த செம்மல் வ.உ.சிதம்பரனார் ஆற்றிய தமிழ்ப் பணிகள் பலவாகும்.

தமிழ் - ஆங்கிலம் ஆகிய இரு மொழிப் புலமையும், சங்க இலக்கியங்கள், ஐம்பெருங் காப்பியங்கள், புராண - இதிகாசங்கள், நீதி நூல்கள், வேதாந்த நூல்கள் ஆகியவற்றில் அறிவாற்றலும் பெற்றுப் பெருஞ் சிறப்புடன் விளங்கிய நிலையில்தான் வ.உ.சி. நாற்பதாண்டு சிறைத் தண்டனை பெற்றார். விடுதலைப் போரில் ஈடுபட்டுச் சிறை சென்ற பெருந்தலைவர்களிலே வேறெவரும் இத்தகுதிகளைப் பெற்றிருக்கவில்லை. திலகர் காலகட்டத்திலுஞ் சரி; காந்தியடிகள் காலகட்டத்திலுஞ் சரி; விடுதலைப் போரில் கலந்து சிறை செல்லத் தமிழ்ப் புலவர்களிலே மிகப் பலர் முன் வரவில்லை. ஒரு சிலரே அந்தப் பேற்றினைத் தமிழ் மொழிக்குத் தேடித் தந்தனர். அவர்களிலே முதல்வர் வ.உ. சிதம்பரனார்.

'எனது தனிப்பாடற்றிரட்டு', 'சுயசரிதை', 'மெய்யறிவு', 'மெய்யறம்', 'வள்ளியம்மை சரித்திரம்', 'திருக்குறள் விருத்தியுரை' போன்ற நூல்களை எழுதித் தமிழுக்கு வளம் சேர்த்தவர் வ.உ.சி.

'தேசபக்தன்', 'பாலபாரதி' எனும் இதழ்களை நடத்தி விடுதலைப் போருக்குத் துணை புரிந்தவர் வ.வெ.சு. ஐயர். இவர் தம் சிறைவாசத்தின்போது கம்பராமாயணத்தை ஆழ்ந்து படித்து ஆராய்ச்சி செய்து, **'Study of Kamban'** என்னும் பெயரில் ஆங்கிலத்தில் ஒரு நூல் எழுதினார். அதில் வால்மீகியின் வடமொழி இராமாயணத்தோடும் துளசிதாசரின் இந்தி மொழி இராமாயணத்தோடும் கம்ப இராமாயணத்தை ஒப்பு நோக்கிக் காப்பிய உலகிலே கம்பனுக்குள்ள தனிச்சிறப்புகளை எடுத்துக் காட்டித் தமிழ் மொழிக்குப் பெருமை தேடினார்.

பரலி சு. நெல்லையப்பர், தமிழிலே பெரும்புலமையுடையவர்; சிறந்த கவிஞர்; பாரதியார் நடத்திய வார இதழான ''இந்தியா''விலும் சிவா நடத்திய திங்கள் ஏடான ''ஞானபாநு''விலும், வ.வெ.சு. ஐயர் நடத்திய ''பால பாரதி''யிலும், திரு.வி.க.வை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த ''தேசபக்தன்'', ''நவசக்தி'' ஆகிய நாளேடுகளிலும் கவிதைகளும் கட்டுரைகளும் எழுதித் தமிழ் வளர்க்கும் பணியிலே பங்கு பெற்றுள்ளார்.

தாமே ''லோகோபகாரி'' என்ற வார இதழை நடத்திப் பத்திரிகைத் துறையிலே தமிழ்மொழி வளம் பெறவும் வாழ்வு பெறவும் நேரடியாகத் தொண்டாற்றியுள்ளார். பாரதியாரின் ''இந்தியா''வில் துணையாசிரியராக இருந்தும் தொண்டாற்றியுள்ளார்.

விடுதலைப் போரில் ஈடுபட்ட கவிஞர்கள், பேச்சாளர்களால் தமிழ்ப் பயன்பாடு மிக்கோங்கியது. நாளேடுகள், சொற்பொழிவுகள், கவிதைகள், நாடகங்கள், திரைப்படங்கள் எனத் தமிழின் கலைத்துறைகள் ஒவ்வொன்றிலும் புத்தொளி பாய்ந்தது. தமிழ் மக்கள் விடுதலைப்போரைப் புரிந்து கொள்ளவும், அதில் ஈடுபாடு காட்டவும் இத்தகைய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன எனினும் ஆங்கிலத்தின் நிழலில் வளரமுடியாச் செடிபோல் நின்றிருந்த தமிழ் இம்முயற்சிகளால் தழைத்தோங்கியது.

1924 திசம்பர் 26இல் 39ஆவது காங்கிரசு மகாசபை வடக்கிலுள்ள பெல்காம் நகரில் கூடியது. காந்தியடிகள் அந்த மகா சபையின் தலைமையை ஏற்றார். அவர் தமது தலைமையுரையிலே மொழி தொடர்பாகப் பின் வரும் கருத்துகளை ஐயத்திற்கிடமின்றி அழுத்தந்திருத்தமாக வலியுறுத்தினார்.

1. மாநில அரசுகளை மொழி அடிப்படையில் திருத்தி அமைக்க வேண்டும். திருத்தி அமைக்கப்பட்ட மாநிலங்கள் பூரண சுயாட்சியுடையவையாக இருக்க வேண்டும்.
2. அந்தந்த மாநில மொழியிலேயே அதனதன் சட்டமன்றம் நடைபெற வேண்டும்.
3. மாநிலந்தோறும் உள்ள நீதிமன்றங்களும் மாநில மொழியிலேயே நடைபெற வேண்டும்.
4. இந்தியா முழுவதற்குமான சுப்ரீம் உயர்நீதி மன்றம் இந்துத்தானியில் நடைபெறவேண்டும்.
5. சர்வதேச நடவடிக்கைகளுக்காக மட்டும் ஆங்கிலத்தை உபயோகித்துக் கொள்ளலாம்.

காந்தியடிகள் தெரிவித்த இந்தக் கோரிக்கைகள் பெல்காம் காங்கிரசில் தீர்மானங்களாகவும் நிறைவேற்றப்பட்டுப் பிரிட்டிசு அரசின் பார்வைக்கு அனுப்பப்பட்டன என்பதும் குறிப்பிடத்தக்க ஒரு வரலாற்று நிகழ்வாகும். இருப்பினும் தமிழ் நாட்டின் காங்கிரசுக் குழுக்கள் இதில் வேகங்காட்டாமல் இருந்தது கண்டு, அப்போது தமிழ்நாடு காங்கிரசின் பெருந்தலைவர்களில் ஒருவராக விளங்கிய தமிழ்ப் பெரியார் திரு. வி. கலியாணசுந்தரனார் மனம் வருந்தினார். ஒவ்வொரு மாநிலத்திலும் அந்தந்த மாநில மொழிக்கெனத் தனித்தனியே 'வித்யாபீடங்கள்' தோன்றிவரும் நிலையிலே, அப்படி ஒரு அமைப்பு தமிழகத்தில் ஏற்படாதது கண்டு நிலைகுலைந்து நெஞ்சங் குமுறினார்.

அந்தக் குமுறலை அவருடைய வாக்கினாற் காண்போம் :

> ''தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கூட்டத்தார் நிகழ்ச்சி முறைகளைத் தமிழிலேயே நடத்தல் வேண்டும்; மாறாக நடப்பாராயின், நாட்டார் அவரைத் தமிழ் வழியில் நடத்த முயலவேண்டும்''.
>
> ''தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கூட்டத்தார் காங்கிரஸ் தீர்மானப்படி ஆங்காங்கே நாட்டுக் கல்லூரி அமைக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். முதலாவது சென்னையில் இரண்டு தமிழ்ச் சாலைகள் அமைக்குமாறு அவரை வேண்டுகிறோம். ஒன்றில் தமிழ் மொழி போதிக்கப்படல் வேண்டும்; மற்றொன்றில் மேல்நாட்டுப் பொருள் நூல், பூத பௌதிக நூல் முதலியன தமிழ் நாட்டவர்க்குப் பயன்படும் பொருட்டு, அவைகளைத் தமிழில் மொழி பெயர்த்துப் போதித்தல் வேண்டும்''

'நாட்டுக் கல்லூரி' என்று திரு. வி. க. குறிப்பிடுவது வடக்கில் 'வித்யாபீடம்' என்ற பெயரில் அழைக்கப் பெற்றாற் போன்று தாய்மொழிக்கு முதலிடம் தந்து கல்வி பயிற்றுவிக்கும் கல்விச் சாலையேயாம். இதுமட்டுமன்றி 'மாணவர்க்கு' என்ற தம்முடைய கட்டுரையில்

> ''ஆங்கிலக் கல்வி காரணமாக நமது ஆண்மையை இழந்துவிட்டோம்; நமது அறிவு குன்றிவிட்டது. இக்கல்வி முறை காரணமாக நாம் பேடிகளாகிவிட்டோம். சுதந்திரம் என்ற தென்றலிலே உலவ நாம் விரும்புகிறோம். ஆனால் ஆங்கிலக் கல்வி முறை அடிமைத் தனத்தைத்தான் உண்டாக்கிவிட்டது. இதனால் நமது சமுதாயம் ஆண்மையை இழந்துகொண்டு வருகிறது

என எச்சரிக்கை செய்து மக்கள் ஆங்கில மோகத்தை வெறுக்கத் தூண்டினார்.

இவ்வகையில் விடுதலை உணர்வுக்கு ஆட்பட்ட தமிழகத்தில், விடுதலைப் போராட்ட வீரர்களின் வரலாற்றை எடுத்துரைக்கும் இலக்கியங்களும் தோன்றின.

வீரபாண்டிய கட்டபொம்மன் வரலாற்றைக் கூறுவதற்கு மட்டுமே 'கலியுகப் பெருங்காவியம்'. (நமச்சிவாயப் புலவர்), 'கட்டபொம்மன் கதைப்பாடல்' (நா. வானமாமலை வெளியீடு), 'கட்டபொம்மன் கும்மி' (மங்கை வாழ்கவி), 'இராமநாதபுரம் பேட்டி விருத்தம்' (இராமநாதபுரம் இராமலிங்க விலாசத்தில் கட்டபொம்மன் ஜாக்சன் துரையைப் பேட்டிகண்ட நிகழ்ச்சியைப் பற்றியது), 'கட்டபொம்மு சண்டைக் கும்மி' (சின்னு நாய்க்கர்), 'வீரபாண்டியம்', (மதுரை ஜெகவீரபாண்டியனார்) - எனப் பல நூல்கள் தோன்றின. மருதுபாண்டியர் வீர வரலாற்றைக்

கூறுவதற்குச் 'சிவகங்கை சரித்திரக் கும்மி' (சாந்துப் புலவர்) வெளிவந்தது. இன்றும் ஏட்டில் வாரா இலக்கியங்கள் எத்தனையோ! வெள்ளையர்களின் சட்டங்களால் கற்கப்படவும், பேசப்படவும் உரிமையிழந்திருந்த தமிழ், விடுதலைப் போரின் இலக்கியங்களில் தன்னை உயிர்ப்பித்துக் கொண்டது.

கவிதை இலக்கியமாய் மட்டுமன்றித் தமிழ் உரைநடை எனும் பட்டு விரிப்பில் பவனிவரத் தொடங்கியதும் இக்காலத்தில்தான். பாரதியார், சிவா, வ.உ.சி., வ.வே.சு. ஐயர்; திரு.வி.க., பரலி சு. நெல்லையப்பர் ஆகியோர் மட்டுமன்றி வெளிநாட்டுப் பாதிரியார்களாலும் தமிழில் உரைநடை வளர்ச்சி பெற்றது.

இவ்வாறு விடுதலைப் போராட்ட காலச் சூழலில் ஆங்கில மோகம் அகலவும், தமிழ் வளரவும், தமிழில் உரைநடை போன்ற புதிய வடிவங்கள் உருவாகவும் வாய்ப்பு ஏற்பட்டது. தமிழகம் மொழியுணர்வோடு கலந்த விடுதலை உணர்வைப் பெற்று வீறு கொண்டது.

## சட்டமன்ற விவாதங்களும் - தமிழ் ஆட்சிமொழிச் சட்ட நிறைவேற்றமும்

இந்திய அரசியல் சட்டத்திற்கிணங்க 1919ஆம் ஆண்டில் மாண்ட்போர்டு அறிக்கையின்படி இந்தியாவில் இரட்டை ஆட்சிமுறை நிறுவப்பட்டது. இந்தியர்கள் முதன் முதலாக அமைச்சர்களாகும் நிலையும் ஏற்பட்டது. 1921ஆம் ஆண்டில்தான் மக்களின் குரல் ஆட்சி செய்கின்றவர்களுக்குக் கேட்கும் ஒரு வடிவம் ஏற்படுத்தப்பட்டது. புதிய சட்டமன்றங்கள் பொறுப்பெடுக்க முற்பட்டன.

மொழிவழி மாநிலங்கள் பிரிக்கப்படுவதற்கு முன்னர் 'இராஜதானி' (Madras Presidency) என்ற பெயரில் விரிந்த ஒரு பெரும் நிலப் பகுதி இருந்தது. இந்த 'இராஜதானத்தில்' தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஒரியா ஆகிய மொழிகள் பேசும் மக்கள் இருந்தனர். வடக்கே ஒரிசா, ஐதராபாத் பகுதிகளும் தெற்கே திருநெல்வேலியும், மேற்கே குடகு, கனரா, கள்ளிக்கோட்டை முதலிய மேற்குக் கடற்கரைப் பகுதிகளும் இதன் எல்லைகளாக இருந்தன. நாடு விடுதலை அடையும் வரை இச்சட்ட மன்றத்தின் நடவடிக்கைகளும், அரசின் நிருவாகமும் ஆங்கிலத்திலேயே நடைபெற்றன. ஆங்கிலமொழி அறியாத இலட்சக்கணக்கான மக்களும் அவர்களின் பிரதிநிதிகளும் ஊமைகளாய் நிருவாகத்தில் பங்கு கொண்டனர்.

தாய்மொழிப் படிப்பில்லாத மக்களின்மீது, ஆங்கில மொழியைக் கொண்டு ஆங்கிலேயர்களும் ஆங்கிலம் படித்த இந்தியர்களும் ஆட்சி செய்ததும், ஆட்சி செய்வதற்கு வசதியாகப் பல சட்டங்களை இயற்றியதும் பெரிய விந்தைதான்.

சென்னைச் சட்டமன்ற வரலாற்றில் ஏராளமான சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. அவையெல்லாம் ஆங்கிலத்தில் ஆக்கப்பட்டு, விவாதிக்கப்பட்டு, முடிவெடுக்கப்பட்டு, சட்டமாக ஆனபின் மக்களின் நலனுக்காக நிருவகிக்கப்பட்டிருக்கின்றன. இந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் ஆங்கிலத்தில்தான் நடந்திருக்கின்றன.

1921ஆம் ஆண்டு முதல் சட்டமன்ற விவாதங்களைப் பார்வையிடும்போது, 1. மொழிவாரி மாநிலங்கள் அமைத்தல், 2. மொழி விழிப்புணர்வூட்டல், 3. தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் நிறைவேற்றல் - என முப்பொருண்மைகள் முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளதை அறிய முடிகிறது.

1919 முதல் 1937 வரை இரட்டையாட்சி முறை தொடர்ந்தது. சட்டமன்றத்தில் ஆங்கிலத்தில் பேசவேண்டும் என்ற கட்டாயம் இருந்தது. ஆங்கிலத்தில் பேசினால்தான் புரிந்துகொள்ள முடியும் என்ற நிலைமை இருந்தது. வட்டார மொழியில் பேசினாலும், சட்டமன்ற நடவடிக்கைக் குறிப்புகளில் பதிய வேண்டும் என்றால் ஆங்கில மொழி பெயர்ப்பு கொடுத்தாக வேண்டும் என்ற நிலையும் இருந்தது.

அக்காலத்துச் சட்டமன்ற உறுப்பினர்களிடையே 'தங்களுடைய மொழியில் பேசும் நாள் என்று வருமோ' என்ற ஏக்கமே நிலவியிருந்தது. 28.3.1921 இல் சட்டமன்றத்தில் 'வேளாண்மை' தொடர்பான விவாதத்தில் தமிழில் பேசிய திரு. பி.சி. முத்துச் செட்டியார் என்ற சட்டமன்ற உறுப்பினர்,

> ''... அவை எல்லாவற்றையும் சேர்த்து நான் பதில் சொல்ல வேண்டியவனாயிருக்கிறேன். தற்போதைய இங்கிலீஷ் பாஷையில் நான் அப்பியாசமில்லாதவனாய் இருக்கிறபடியால், இங்கு நடக்கும் நடவடிக்கைகளை எல்லோரும் அறியும்படியாய், சுய பாஷையில் எப்பொழுது பேசும்படி ஏற்படுமோ தெரியவில்லை''

எனக் கூறுவதில் இந்த ஏக்கத்தை உணரலாம்.

இத்தகைய ஏக்கம் நிறைந்த சட்டமன்றத்தில் தமிழிலும் மற்ற தென்னக மொழிகளான மலையாளம், தெலுங்கு, கன்னடம், ஒரியா ஆகிய மொழிகளிலும் ஆற்றப்பட்ட சொற்பொழிவுகளும் மிகவும் குறைவு. உறுப்பினர்கள் வெட்கப்பட்டுக் கொண்டு, தமக்கே தெரிந்த சில கருத்துகளை எடுத்துச் சொன்னது போலத்தான் ஒவ்வொரு சொற்பொழிவும் அமைந்திருந்தது.

தமிழில் பேசும் தலைவர்களில் 1921ஆம் ஆண்டிலிருந்து 1937ஆம் ஆண்டு வரை சிலர் தொடர்ந்தும், சிலர் அவ்வப்பொழுதும் சட்டமன்ற உறுப்பினர்களாக இருந்திருக்கிறார்கள். சட்டமன்ற நடவடிக்கைகளும் நிருவாகமும் தமிழில் நடைபெற வேண்டுமென்று பல

நேரங்களில் கேள்வி மூலமும், தனித் தீர்மானங்கள் இயற்றுவதன் மூலமும் தெரிவிக்க முன் வந்திருக்கிறார்கள். அத்தகைய தீர்மானங்களும் ஆங்கிலத்திலேயே விவாதிக்கப்பட்டுள்ளன.

இக்கால கட்டத்தில் இங்கிலாந்திலிருந்து இந்தியாவிற்கு வரும் அதிகாரிகள் இந்திய மொழிகளைக் கற்றுக் கொள்ள அரசின் ஊக்கத் தொகையும் அளிக்கப்பட்டு வந்தது. இதை எதிர்த்து 31.3.1921 இல் திரு. கே. எஸ். வெங்கடராம ஐயர் என்ற உறுப்பினர் வெட்டுத் தீர்மானம் கொண்டுவந்தார். அதில்,

> ''இங்கிலாந்திலிருந்து இந்தியாவிற்கு வரும் அதிகாரிகள், எந்தவிதத் தூண்டுதலோ ஊக்கத் தொகையோ இல்லாமல் இந்திய மொழிகளைக் கற்றுக் கொள்ள வேண்டும்.... இந்திய மொழிகளைக் கற்றுக் கொள்வது அதிகாரிகளின் கடமை எனவே எந்தவித ஊக்கத்தொகையும் அளிக்கக்கூடாது''

எனக் குறிப்பிட்டார். இந்த வெட்டுத் தீர்மானம் தோல்வியடைந்தது. இதைத் தொடர்ந்து 4.8.1921 இல் இராவ் பகதூர் சி. வெங்கடா ரெட்டி என்ற உறுப்பினர்

> ''சட்டமன்ற நடவடிக்கைகளை வட்டார மொழிகளில் மொழி பெயர்த்து, சுருக்கமாக அதன் சாராம்சத்தை உறுப்பினர்களுக்கு மாவட்ட 'கெஜட்'டுகளுடன் விநியோகிக்க வேண்டும்''

என ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார். இத்தீர்மானத்தைத் திரு. சி. எஸ். வெங்கடரமண ஐயர் வழிமொழிந்தும், திரு. கே. சீனிவாச ஐயங்கார், திவான் பகதூர் கேசவப்பிள்ளை ஆகியோர் ஆதரித்தும், திவான் பகதூர் கிருஷ்ணன் நாயர் எதிர்த்தும் பேசினர். சட்டமன்ற வாக்கெடுப்பில் இத்தீர்மானமும் தோல்வி அடைந்தது.

திரு. டி. சிவசங்கரன் பிள்ளை என்ற உறுப்பினர் 19.1.1922 இல் கிராமத்து மக்கள் பயனடையும் வகையில் அரசின் பலவகைச் சட்டப்புத்தகங்களையும் வட்டாரமொழியில் மொழி பெயர்த்தல் தொடர்பாகச் சட்டமன்றத்தில் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார். திரு. அரங்கநாத முதலியார், இத்தீர்மானத்தை வழிமொழிந்து பேசினார். திரு. டி.ஏ. இராமலிங்க செட்டியார் இத்தீர்மானத்தை ஆதரித்தும் திரு. கே. சீனிவாச அய்யங்கார் எதிர்த்தும் பேசினர். சட்டமன்ற வாக்கெடுப்பில் இத்தீர்மானத்தை 48 உறுப்பினர்கள் ஆதரித்தனர் 22 உறுப்பினர்கள் எதிர்த்தனர். ஆனால் இதற்கு அடுத்த நாளே - 20.1.1922 இல் டாக்டர் கில்பர்ஸ்லேடர்

> ''சென்னை மாகாணத்தில் உள்ள மொழிகளுக்குப் பொதுவான எழுத்தைத் தயாரிக்கவும், அப்படிப்பட்ட எழுத்து அவசியமானதா? அதற்கு வழிவகை என்ன என்பதை ஆராய்ந்து சொல்ல ஒரு குழுவை ஏற்படுத்த அரசைக் கேட்டுக் கொள்வது''

என்ற தீர்மானத்தைக் கொண்டு வந்தார், பல்வேறு விவாதங்களுக்குப் பிறகு இத்தீர்மானம் தோல்வியடைந்தது.

திரு. கே இரகுசந்திரபல்லால் என்ற உறுப்பினர் 5.2.1925இல் கொண்டுவந்த தீர்மானம் குறிப்பிடத்தக்கது. அவர்,

> ''தாலுக்கா மற்றும் ஜில்லா போர்டு கூட்டங்களிலும், நகர மன்றக் கவுன்சில் கூட்டங்களிலும் வட்டாரமொழிகளையே பயன்படுத்துவதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்ய இச்சட்டமன்றம் தன் பரிந்துரையை அளிக்கக் கோருகிறது''

என அத்தீர்மானத்தில் முன்மொழிந்தார். இத்தீர்மானத்தின்மீது திரு. ஏ. அரங்கநாத முதலியார்,

> ''என்னுடைய மாவட்டத்தை எடுத்துக் கொண்டால் அங்கிருக்கும் தாலுக்கா மற்றும் ஜில்லா போர்டு தலைவர்கள் பலருக்கு அவர்களுடைய வட்டாரமொழி மட்டும்தான் தெரியும். நடைமுறையில் அலுவலகக் கடிதப் போக்குவரத்தும் அங்குள்ள பதிவேடுகளும் ஆங்கிலத்திலேயே இருப்பதால், அத்தலைவர்கள் அலுவலகத்திலுள்ள எழுத்தர்களின் கைப்பாவையாகும் நிலைமை இருக்கிறது. ஆகவே, மாவட்ட அளவிலே நடைமுறையில் உள்ள கடிதப் போக்குவரத்து, கூட்ட நடவடிக்கைகள் வட்டாரமொழியிலே இருப்பதுதான் உசிதமானது. இருப்பினும், இப்பொழுது இருக்கின்ற விதிகளின்படி, இம்மாறுதல் சாத்தியமா என்பது எனக்குத் தெளிவாகத் தெரியவில்லை''

என்றார். இதற்குப் பதிலளித்த மாண்புமிகு திரு. பனகல் அரசர்,

> ''1921ஆம் ஆண்டில் போடப்பட்ட அரசு ஆணையின்படி ஊராட்சி மன்றங்கள் தங்கள் நடவடிக்கைகளை ஆங்கிலத்திலோ தங்கள் மாவட்டத்திலுள்ள வட்டார மொழியிலோ நடத்தலாம்' என்றுள்ளது. அந்த ஆணையின்படி, பல ஊராட்சி மன்றங்கள் தங்களுடைய அலுவல்களை வட்டார மொழிகளிலேயே நடத்தி வருகின்றன''

என்றார், இந்த விளக்கத்திற்குப் பிறகு தீர்மானம் திரும்பப் பெறப்பட்டது.

தனியாக ஆந்திர மாநிலம் உருவாக்கப்பட வேண்டும் என்ற இயக்கம் 1910ஆம் ஆண்டிலிருந்தே இருக்கிறது. சட்டமன்றத்தில் 14.3.1927இல் திரு. பி. ஆஞ்சநேயலு என்ற உறுப்பினர்

> ''இம்மாநிலத்தில் தெலுங்கு மொழி பேசுகின்ற பகுதிகளை இணைத்துச் சட்டமன்ற நிருவாக மற்றும் நீதி நிருவாக வசதிகளுக்காகத் தனி மாநிலமாக்கி, ஆந்திரமாநிலம் என்று பெயர் சூட்டவும், தீர்மானத்தைக் கவர்னர் ஜெனரல் பெருமானுக்கு அனுப்பிவைக்கும் பரிந்துரையை இச்சட்டமன்றம் செய்யவும்''

ஒரு தீர்மானத்தைக் கொண்டுவந்தார். இத்தீர்மானத்தை முன்மொழிந்து அவர் பேசிய கருத்துகள் மொழிவாரி மாநிலங்கள் அமையாவிடில் ஏற்படும் விளைவுகளை நன்கு விளக்கி நின்றன:

''ஆங்கிலேயர்கள் எப்படி நம் நாட்டிற்குள் நுழைந்தார்கள் என்று நமக்கும் தெரியும். அதை ஒரு விபத்து என்றே சொல்லலாம். நம்மீது போர் தொடுப்பதற்காக அவர்கள் வரவில்லை. வணிகம் செய்ய வந்தார்கள். வணிகம் செய்ய ஏதாவது ஓர் இடம் தேவையாக இருந்தது. இப்படிப்பட்ட வரலாற்றின் பின்னணியில் ஏற்பட்டதுதான் மாநிலங்கள். இதற்கு முன்னேற்பாடோ முனைப்பான திட்டமோ இருந்ததில்லை. ஆகவே, இப்போதைய மாநிலங்கள் எந்தவித அடிப்படையாலும், கொள்கையின் தேவைகளினாலும் ஏற்படுத்தப்பட்டதல்ல. ஒரு மாவட்டத்தைத் தொடர்ந்து வேறொரு மாவட்டம் என்று மேலும் மேலும் நிலப் பகுதிகளைச் சேர்த்து மாநிலங்களாக ஏற்படுத்தி விட்டார்கள். நிருவாகக் காரணங்களுக்காக இம்முறையைத் தவிர வேறு வகையில் மாநிலங்கள் அமைப்பை ஏற்படுத்தியிருக்க முடியாது. ஆகவே, எதிர்காலத்தில் இந்திய நாட்டிற்குச் சுதந்திரம் வந்தாலும் வராவிட்டாலும் மொழி வழி மாநிலங்கள் அமைக்கப்பட்டு இந்தநாடு அமெரிக்கா நாட்டைப் போன்று அமைப்பைப் பெறவேண்டும்.... தமிழ் மற்றும் தெலுங்கு மொழி பேசுபவர்களுக்காகப் புதிய மாநிலங்கள் தோற்றுவிக்கப்பட்டால், நாம் நம்முடைய பழைய கால வரலாற்றை நினைப்பதற்கும், நம்முடைய கலை, கலாச்சாரம் மற்றும் நம்மை ஆண்டு பெருமை படைத்த மன்னர்களை நினைவு கூர்ந்து பெருமை அடைவதற்கும் வழிகோலும்''

எனப் பேசினார். ஆங்கிலேயருக்கு அடிமையான நாட்டுநிலையையும், கலை, பண்பாட்டைப் பேணிக்காக்க வேண்டிய பொறுப்பையும் உணர்த்தும் வகையில் அவர் பேச்சு அமைந்திருந்தது. இத்தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய திரு. பிஸ்வநாத் தாஸ் மகாசாயோ என்ற உறுப்பினரும் (14.3.1927),

''1917ஆம் ஆண்டு கூடிய காங்கிரஸ் மாநாடு, மொழிவழி மாகாணங்கள் அமைக்கப்பட வேண்டும் என்ற கருத்தைக் கொள்கை அளவில் ஒப்புக் கொண்டது. ஒரியா மொழிபேசுகின்ற மக்கள் தனி மாநிலக் கோரிக்கையை 1901ஆம் ஆண்டே எழுப்பினர். அதற்காகக் காங்கிரஸ் கட்சியையும் அவர்கள் வற்புறுத்தி வந்தனர். தங்களுடைய கோரிக்கை காங்கிரஸ் கட்சியினால் ஒப்புக் கொள்ளப்படவில்லை என்று தெரிந்தவுடன் 1905ஆம் ஆண்டு சென்னையில் கூடிய காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகினார்கள். நிதிவசதி காரணங்களுக்காக மொழிவழி

மாநிலங்கள் ஏற்படுவது இயலாது என்று ஆளுங்கட்சித் தரப்பிலிருந்து சொல்லப்பட்டது.... சென்னை கோட்டை யிலிருந்து வெளியாகிற கெஜட்டில் வருகிற பிரசுரங்கள் அறிக்கைகள், மசோதாக்கள் என்று பல தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் மற்றும் ஒரியா ஆகிய மொழிகளில் பிரசுரிக்கப்படுகின்றன. என்னுடைய மாவட்ட கெஜட் ஆங்கிலம், தெலுங்கு மற்றும் ஒரியா ஆகிய மொழிகளில் வெளிவருகிறது. இவையெல்லாம் வீண்செலவு இல்லையா? ஆகவே, நல்லரசு அமைய வேண்டுமானால் மாநிலங்கள் மொழிவழியாகத்தான் பிரிக்கப்பட வேண்டும். அத்துடன் மட்டுமல்லாது அரசாங்க நடவடிக்கையும், மக்களால் பேசக்கூடிய மொழியிலேயே அமையவேண்டும். மாநிலங்களை இந்த முறையில் பார்க்க வேண்டும் என்று நாம் சொல்வது குறுகிய எண்ணத்தாலோ அல்லது சாதி அடிப்படையாலோ அல்ல''

என ஆழமாகக் கருத்துகளை எடுத்துரைத்தார். இத்தீர்மானத்தைத் திரு. சி. இராமசோமயாஜுலு, திரு. அப்துல் ஹமீது கான் ஆகிய உறுப்பினர்கள் ஆதரித்துப் பேசினர்.

திரு. எஸ். சத்தியமூர்த்தி 9.10.1928இல் சட்ட மன்றத்தில், பாரதியின் கவிதைகளை அரசு பறிமுதல் செய்ததற்காகக் கொண்டு வந்த ஒத்திவைப்புத் தீர்மானமும், அதைத் தொடர்ந்து அவர் ஆற்றிய ஆங்கிலச் சொற்பொழிவும் சிறப்பான ஒன்றாகும். அவருடைய பேச்சு வன்மையால் ஆங்கிலேயர்களைத் தவிர மற்ற உறுப்பினர்கள் அவையை ஒத்தி வைக்க வேண்டுமென்று ஆதரவாக வாக்கு அளித்தது ஒன்றே, தமிழ் மொழியிடத்தும், தமிழ் மொழியில் இயற்றப்பட்ட கவிதைகளிடத்தும் மக்களிடம் இருந்த பற்றும், விடுதலை விழிப்புணர்ச்சியும் எந்த அளவிற்கு இருந்தன என்பதற்கு எடுத்துக்காட்டாகும். 26.11.1928இல் சென்னைப் பல்கலைக் கழகத் திருத்தச் சட்ட முன்வடிவு மீது ஒரு சிறிய திருத்தத்தைக் கொண்டுவந்து பேசிய பேச்சும் மொழி விழிப்புணர்வூட்டிய வரலாற்று நிகழ்ச்சியாகும். ஆங்கிலேயர்கள் இந்திய மொழிகளை 'வெர்னாகுலர் லாங்குவேஜஸ்' என்றே குறிப்பிட்டு வந்தனர். இந்த நடைமுறையில் உள்ள இழிவை இந்தியர்கள் உணராதிருந்தனர். இச்சூழலில்

''வெர்னாகுலர் என்பதும் 'இந்தியன்' என்பதும் ஒரே அர்த்தம் உடையதாகும். ஆனால் 'வெர்னாகுலர்' என்ற வார்த்தையைப் பல்கலைக் கழகச் சட்டத்திலிருந்து அகற்றிவிட வேண்டும் என்பது என் திருத்தமாகும். 'வெர்னாகுலர்' என்பது 'அடிமைகளின் மொழி' என்று பொருள்படும். இந்த முறையில் நம்மொழிகளை நாமே அவமானப்படுத்தக்கூடாது. ஆங்கிலேயர்கள் வேண்டு மென்றால் 'எங்களுடைய வெர்னாகுலர் ஆங்கிலமொழி' என்று சொல்லிக் கொள்ளலாம். ஆனால், வெர்னாகுலர் என்ற

சொல்லைத் தன் தாய் மொழியைக் குறிப்பதற்காகப் பயன்படுத்துவதில்லை. ஆந்திரப் பல்கலைக் கழகச் சட்டத்திலும் என் தலையீட்டால், 'வெர்னாகுலர்' என்ற வார்த்தை தள்ளப்பட்டு 'இந்தியன்' என்ற வார்த்தை கையாளப்பட்டுள்ளது. என்னுடைய திருத்தத்தை ஏற்க முடியாது என்று அமைச்சர் ஒரு வேளை மறுக்கலாம். ஏனென்றால் சமஸ்கிருதமொழியைச் சேர்க்க வேண்டியிருக்கும். ஆகவே என்னுடைய திருத்தத்தை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்''

எனத் திரு. எஸ் சத்தியமூர்த்தி திருத்தத் தீர்மானம்கொண்டு வந்தார். இத்தீர்மானம் திரு. சி.வி. வெங்கடரமண அய்யங்காரால் வழிமொழியப்பட்டு, அமைச்சர் டாக்டர் பி. சுப்பராயன் அவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, அவையில் நிறைவேற்றப்பட்டது.

திரு. பி. சிவராவ் என்ற உறுப்பினர் 8.8.1929-இல் கருநாடக மாநிலம் அமைக்கப்பட வேண்டும் என்ற தீர்மானத்தைச் சட்டமன்றத்தில் கொண்டுவந்தார். இத்தீர்மானத்தின் மீது பேசிய திரு. விஸ்வநாத்தாஸ் மகாசாயோ,

''மாநில சுயாட்சி என்பதும், தாங்களாகவே ஆண்டு கொள்கிறோம் என்பதும் அர்த்தமுள்ளதாகும், எப்பொழுது என்றால், ஒரே மொழி பேசுகின்ற மக்கள் தங்களுக்காகத் தனிச்சட்டமன்றத்தை ஏற்படுத்தித் தங்களுடைய வட்டார மொழியின் துணை கொண்டு விவாதங்களை நடத்தும் போதுதான் மாநில சுயாட்சி முழுமை பெறுகிற து''

எனக் கூறியது குறிப்பிடத் தக்கது.

இவ்வாறு தொடர்ந்து வரும் மொழிவாரி மாநில விவாத வரலாற்றில், திரு. கே. கோடிரெட்டி என்ற உறுப்பினர் 17.3.1931 இல் மொழிவாரி மாநிலங்கள் அமைக்கப்படுவதன் அவசியத்தை வலியுறுத்தி ஒரு வெட்டுத் தீர்மானம் கொண்டுவந்தார். இத்தீர்மானத்தின்போது பேசுகையில்,

''.... சாதாரண கிராம மக்கள் நிருவாகத்தில் பங்கேற்க வேண்டுமென்றால் ஆங்கிலமொழியின் மூலமாக இக்காரியத்தைச் சாதிக்க முடியாது. சட்ட மன்றங்களிலும், நிருவாகத்திலும், நீதித்துறையிலும் வட்டார மொழிகளைப் பயன்படுத்துவதன் மூலமாகவும், அரசாங்க ஆணைகளை மக்கள் புரிந்து கொள்ளக் கூடிய மொழியில் இடுவதன் மூலமாகவுமே மக்களாட்சியின் உண்மையான உணர்வை ஏற்படுத்தியவர்களாவோம். ஆகவே மொழிவாரி மாகாணங்கள் உடனடியாக ஏற்படுத்துவதை நான் வலியுறுத்துகிறேன்''

என ஆட்சிமொழிக்கும் மக்களுக்கும் உள்ள உறவைத் தெளிவுபடுத்தினார். தொடர்ந்து இராவ்சாகிப் டி. கிருஷ்ணமூர்த்தி இத்தீர்மானத்தை ஆதரித்துப் பேசினார். திரு. பி.சி. முத்துச் செட்டியார் பேசுகையில்,

> ''.... தமிழிலும் தெலுங்கு இங்கிலிஷ் பாஷையிலும் அஜெண்டா, கொஸ்சன், ரிசல்யூஷன் பிரிண்டாக வேண்டுமென்றும் ஒவ்வொரு ஸ்பீச்சுகளின் முடிவை இரண்டு வார்த்தையில் ரொம்ப சுருக்கமாயும் சங்கிரகமாயும் ஹவுசில் சொல்வதற்கு ஒரு டிரான்ஸ்லேட்டரை (மொழி பெயர்ப்பாளரை) அல்லது செக்ரடரியை அனுமதி செய்ய வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறேன்''.

எனக் கூறினார். வாக்கெடுப்பில் இத்தீர்மானமும் தோல்வி அடைந்தது.

மேற்காணும் விவாதங்களால் ஆங்கிலேயர் பலமொழி மக்களின் பிரதிநிதிகளை - சட்டமன்ற உறுப்பினர்களை ஓரிடத்தில் அமர்த்தி உறுப்பினர்கள் தங்கள் கருத்துகளை எடுத்துரைக்க வழியற்ற நிலையில் ஆங்கில மேலாதிக்கத்துடன் இந்தியர்களைக் கொண்டே ஓர் ஆட்சிமுறையை நடத்தினர் என்பதை அறியலாம். மேலும் மொழிவாரி மாநிலங்கள் அமையவேண்டும் என்ற உணர்வு 'சென்னை இராஜதானி'யில் இணைந்திருந்த எல்லா மொழியினரிடத்தும் மேலோங்கி வளர்ந்திருந்தது என்பதையும் அறியலாம். சட்டமன்ற உறுப்பினர்களின் வாதங்கள் ''ஒரு நாட்டின் மக்களாட்சி, கலை, பண்பாடு, நாகரிகம், வரலாறு ஆகியவை போற்றிக் காக்கப்படவும், பின்பற்றப்படவும் அந்நாட்டின் மொழியே ஆட்சிமொழியாக இருக்க வேண்டும்'' என்ற அடிப்படையைத் தெளிவுபடுத்துவதையும் நாம் அறியலாம்.

திருமதி. கே. அலமேலு மங்கத்தாயாரம்மாள் என்ற உறுப்பினர் 13.3.1936 இல் ஒரு வெட்டுத் தீர்மானத்தைக் கொண்டுவந்து சட்டமன்றத்தில்,

> ''.... தமிழிலே எழுதக்கூடிய சுருக்கெழுத்தாளர்கள் இல்லாத குறையினால், உறுப்பினர்கள் பேசமுடிவதில்லை. இம்மாநிலத்தில் பிரதான மொழி தமிழாகும். தமிழிலே பேசப்படுவதை ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பது கடினமாக இருப்பதாலும், அப்படியே மொழி பெயர்க்கப்பட்டாலும், மொழி பெயர்ப்பில் தவறுகள் நேர்ந்துவிட்டால் செய்தித் தாளில் செய்திகள் திரிந்துவிட வாய்ப்பாகிவிடும். ஆகவே, தமிழ்ச் சுருக்கெழுத்தாளர்கள் கட்டாயமாக நியமிக்கப்பட வேண்டும்''

என வலியுறுத்தினார். இதற்கு நிதித்துறை உறுப்பினர் மாண்புமிகு சர். ஹோப்டன் ஸ்டோக்ஸ்,

''.... சட்ட மன்றத்திற்குப் புதியதாக உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட உள்ளார்கள். அவர்களில் பலர் தமிழிலேயே பேச விருப்பப்பட்டால் தேவையான எண்ணிக்கையில் சுருக்கெழுத்தாளர்களை நியமிக்க நான் தயாராயுள்ளேன்''

எனப் பதிலுரைக்க, இவ்வெட்டுத் தீர்மானம் திரும்பப் பெறப்பட்டது.

இவற்றிற்குப் பின், சட்டமன்ற விவாதங்களில், இந்தி கட்டாயப் பாடமாக்கப்பட்டதையும் - அதை எதிர்த்துத் தமிழகமே இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போர் நடத்திய வரலாற்றையும் ஆளுங்கட்சியினரும், எதிர்க்கட்சியினரும் சட்டமன்றத்தில் பதிவு செய்துள்ளனர்.

''1937 இல்தான் காங்கிரஸ் மந்திரிசபை முதன்முதலாகச் சென்னை மாநிலத்தில் பதவி ஏற்றுக் கொண்டது. இந்தப் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சி நேரிடையாகப் பங்கு கொண்டதால் சுயராஜ்யக் கட்சி மறைந்து ஒழிந்தது. காங்கிரஸ் அமைச்சரவை இராஜாஜி அவர்களை முதல்வராகக் கொண்டு அமைக்கப்பட்டது. இராஜாஜி தமிழக முதல்வரானதும் இந்தியைப் 'பள்ளிக் கூடங்களில் கட்டாயப் பாடமாக்கினார். 'இந்தி கட்டாயம்' என்ற சட்டம் பிறந்தவுடன் அதனை முன்னாலே அறிந்து எதிர்ப்புணர்ச்சியைக் காட்டி வந்த தமிழ்ப் பற்றுடையோரும் புலவர் பெருமக்களும் வீறிட்டெழுந்தனர். கிளர்ச்சிகள் நடத்தினர். இந்தி வேண்டாமென்று முடிவுகள் எடுத்து அரசுக்கு அனுப்பினர். செந்தீயென எழும் தங்கள் கண்டனங்களைச் செய்தித் தாள்களின் வாயிலாக வெளியிட்டுக் குவித்தனர். தமிழகத்தின் நகரங்கள், பட்டி தொட்டிகள், சிற்றூர்கள் எங்கணும் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி! எதிர்ப்பு கண்ட இராஜாஜி மேலும் வன்மையாக இந்தியைத் திணிக்கத் தொடங்கினார்''.

என அக்காலச் சூழ்நிலையை மாண்புமிகு முதல்வர் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் தம் 'நெஞ்சுக்கு நீதி' நூலில் பொருத்தமாகப் பதிவு செய்திருப்பது இங்குக் கருதத்தக்கது.

''நீதிக் கட்சியின் உதவியோடு சென்னை மாநிலத்தில் முதலமைச்சராக ஆட்சி நடத்திய டாக்டர் சுப்பராயன், 1938 இல் இராஜாஜி மந்திரி சபையில் கல்வி அமைச்சராக இருந்தார். இவரது அறையில்தான் 1938 பிப்ரவரி 25ஆம் நாள் தமிழ்நாட்டில் இந்தியைக் கட்டாயப் பாடமாக்க வேண்டுமென்ற முடிவு எடுக்கப்பட்டது. அடுத்த இரண்டு நாட்களுக்கெல்லாம் பிப்ரவரி 27 இல் காஞ்சிபுரத்தில் கான்பகதூர் கலிபுல்லா சாகிப் எம்.எல்.ஏ. அவர்களால் இந்தி எதிர்ப்பிற்கான கொடி உயர்த்தப்பட்டது. இந்த மாநாட்டில்தான் சோமசுந்தர பாரதியார் இந்தியை எதிர்த்துக் குரல் கொடுத்தார். புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் படத்தைப் பெரியார்

திறந்து வைத்ததும் இந்த மாநாட்டில்தான். 'பொது மக்கள் பணத்தைக் கொண்ட சர்க்கார் வரவு செலவுத் திட்டத்தில் அவசியமற்ற இந்தி மொழிக்காகப் பணம் செலவழிக்கக்கூடாது' என்று இந்த மாநாட்டில் ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது. தீர்மானத்தை ஆதரித்துத் தமிழவேள் உமாமகேசுவரம் பிள்ளையும், சிதம்பரம் என். தண்டபாணியும் முழக்கமிட்டனர். தீர்மானத்தைக் கொண்டுவந்தவர் யார் தெரியுமா? அவர்தான் பேரறிஞர் அண்ணா! அன்றைக்குச் சி.என். அண்ணாதுரை, எம்.ஏ''.,

என்றும்,

''இந்தி எதிர்ப்பில் பல்லாவரத்தார் பழத் தமிழ்ப் பேச்சாளர் பண்புமிக்க மறைமலையடிகளாரும் குதித்திட்டார். ''அந்தோ! வடமொழி வந்து தமிழைப் பெரிதும் வீழச் செய்துவிட்டதே! அதைக் குற்றுயிராக்கி விட்டதே ஆங்கிலம்! இனி இந்தி வந்தால் தமிழ் அழிதல் திண்ணமே அய்யகோ! என் செய்குவோம்'' என்று ஏங்கிய மறைமலையடிகளாருக்கு இந்தி எதிர்ப்பு இயக்கம் பெரும் ஆறுதலை அளித்தது. 1938ஆம் ஆண்டு சூன் திங்கள் 3ஆம் நாள் சைதாப்பேட்டையில் கூடிய இந்தி எதிர்ப்பு மாநாட்டிற்கு மறைமலையடிகள் தலைமை தாங்கினார். ஆம்! நான் பிறந்த சூன் திங்கள் 3ஆம் நாளில் தமிழ் காக்க இந்தி எதிர்ப்பு முதல் போருக்கு மக்களைத் திரட்டி எழுப்பும் மாநாட்டில் மறைமலையடிகள் தலைமை தாங்கினார் என்பதை எண்ணி இறும்பூது எய்துகிறேன்.

என்றும் மாண்புமிகு முதல்வர் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் அளிக்கும் காலப் பதிவுகளை நெஞ்சில் சுமந்து கொண்டு சட்டமன்ற நடவடிக்கைகளைக் காண்போம்.

சட்டமன்றத்தில் திரு. சி. இராஜகோபாலாச்சாரியார் 1938-39ஆம் ஆண்டிற்கான வரவு - செலவுத் திட்ட விவாதத்தின்மீது 30.3.1938இல் பதிலளித்துப் பேசியதில் சில பகுதிகளை இங்குக் காண்போம் :

''.... இந்துஸ்தானத்தில் இருப்பவர்களுடைய மொழி இந்துஸ்தானி. இந்துஸ்தானி இந்திய மக்களுடைய மொழியுமாகும். இதற்காக நாம் மிகவும் பெருமைப்பட வேண்டும். தமிழ் மக்களும் இந்துஸ்தானத்தில் ஒரு பகுதியில் வாழ்வதால், இந்துஸ்தானி மொழிக்கு ஆதரவு தரவேண்டும். வட இந்தியாவில் உருது மொழிக்கும் இந்தி மொழிக்கும் முரண்பாடு இருப்பதாகச் சிலர் சொல்லுகிறார்கள். இருமொழி பேசுபவர்களும் சண்டையிட்டுக் கொள்வது உண்மையே. அப்படிப்பட்ட மொழிச் சண்டையைத் தென்னகத்திலும் உண்டாக்க வேண்டும் என்று சிலர் விரும்புகிறார்கள். இம்முயற்சி ஆபத்தான ஒன்றாகும். இதனால்

உயிர்ச்சேதம் ஏற்படலாம். ஒரு சில தேவையற்ற சந்தர்ப்பங்களை வடநாட்டினரும் தென்னாட்டினரும் சந்திக்க வேண்டிய சூழ்நிலையில் இருக்கிறோம். வடநாட்டுச் சண்டையைத் தென்னாட்டிற்குக் கொண்டு வருவதால் இங்குள்ள மக்களுக்கும், நம் நாட்டிற்கும் பெரும் அநீதி இழைத்தவர்களாக நாம் ஆவோம். ஆகவே வட நாட்டில் நிகழ்ந்து கொண்டிருக்கும் உருது மற்றும் இந்தி மொழிகளிலான சண்டையைத் தென்னிந்தியாவிலும் இடம் மாற்றி நிகழ்த்தி வருவது மிகவும் துரதிர்ஷ்டமாகும். இது அபாயகரமானதும், தேவையில்லாததுமாகும்''

இதற்குப் பின், காஞ்சிபுரத்தில் இந்தி எதிர்ப்புப் போர்க்கொடி உயர்த்திய திரு. கான்பகதூர் கலிபுல்லா சாகிப் போன்ற உறுப்பினர்கள் சட்டமன்றத்தில் கட்டாய இந்தியை எதிர்த்துக் கடுமையாக வாதிட்டுள்ளனர். இருப்பினும் முதலமைச்சராயிருந்த திரு. சி. இராஜகோபாலாச்சாரி 21.3.1938 இல் கல்வி மானியக் கோரிக்கை மீது ஆற்றிய உரையில்,

''இந்துஸ்தானியைப் பொறுத்தவரையில் திரு.கலிபுல்லா அவர்கள் மிகவும் காட்டமாகத் தாக்கிப் பேசினார். கட்டாயமாகப் பள்ளிகளிலே இந்துஸ்தானி மொழியைப் புகுத்துவது தவறு என்று அவர் சொன்னார்... இந்துஸ்தானி ஏற்கனவே நம் நாட்டில் பெரும் பகுதியில் பொது மொழியாக இருக்கிறது; ஆகவே நம் மாணவர்கள் அம்மொழியைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்றுதான் நான் சொல்லுகிறேன். தென்னிந்திய மக்களும், படித்தவர்களும் இந்துஸ்தானி மொழியைக் கற்றுக் கொள்ளக்கூடாது என்றும், தென்னிந்தியா மொழியைப் பொறுத்தமட்டில் தனித்தே இருக்க வேண்டும் என்றும் அவர் (திரு. கலிபுல்லா) சொல்வாரேயானால், அவர் கூற்றிலிருந்து நான் மாறுபட்டேயாக வேண்டும்''

எனக் கூறி இந்தியைக் கட்டாயப்பாடமாக்குவதில் தீவிரமாகவும் பின்வாங்கா நெஞ்சராகவும் இருந்தார்.

இந்நிகழ்வுகளுக்கிடையில் 31.3.1938 இல் திரு. கே.பி. மல்லிகார்ஜுனுடு என்ற உறுப்பினர் சட்டமன்றத்தில் மொழிவாரி மாகாணத்தை ஏற்படுத்த வேண்டும் என்ற தீர்மானத்தை முன் மொழிந்தார். இத்தீர்மானத்தைத் திரு. வி.வி. ஜோகையபந்துலு வழி மொழிந்தார்; டாக்டர் சர். கே.வி. ரெட்டிநாயுடு, திரு. ஏ. அரங்கசாமி ஐயங்கார் ஆகியோர் ஆதரித்துப் பேசினர். திரு. ஏ. அரங்கசாமி ஐயங்கார் பேசுகையில்,

''.... மக்களுடைய தாய்மொழியில் சட்டமன்றத்தையும் நிருவாகத்தையும் நடத்தினாலொழிய, நம்முடைய மக்களுக்குப்

பொறுப்பான அரசாங்கம் இல்லையென்ற நிலை ஏற்பட்டு விடும்'

என்றும், திரு. டி. பிரகாசம் என்ற உறுப்பினர்

''இன்று மாநில சுயாட்சி என்றெல்லாம் பேசுகிறார்கள். அப்படிச் சொல்லிவிட்டுக் கோடிக்கணக்கான மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நாம், அவர்களுடைய கருத்துக்களை எடுத்துவைக்காமல் கவர்ச்சியான ஆங்கில மொழியில் இந்த அவையில் பேசுவதுதான் இன்று நாம் செய்து கொண்டிருக்கும் காரியம். ஆகவே நாம் நடத்துகிற நிகழ்ச்சிகளை மக்கள் புரிந்து கொள்ளவில்லை என்றால் நம்மைப் பதவி நீக்கம் செய்துவிடச் சொல்வார்கள். ஆகவே ஆட்சிமொழியாகவும், பள்ளி, கல்லூரிகளில் பயிற்சி மொழியாகவும் வட்டார மொழிகளே இருக்க வேண்டும் என்பதை நாம் உணர வேண்டும்''

என்றும் வலியுறுத்தி ஆதரித்துப் பேசினர். இந்தத் தீர்மானம் அவையின் முடிவுக்கு விடப்பட்டு ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது.

இதன் பிறகு மீண்டும் இந்தி எதிர்ப்புப் போர்ச் சூழலைச் சட்டமன்றம் சந்தித்த வரலாற்றை,

''சட்டமன்றத்திலே பேசிய இராஜாஜி 'இந்தியை எதிர்ப்பவர்கள் யார்? இரண்டே இரண்டுபேர்தான்! ஒருவர் ராமசாமி நாயக்கர் மற்றொருவர் பசுமலைபாரதியார்' என்றார். எதிர்வரிசையில் அமர்ந்திருந்த பன்னீர்செல்வம் உடன் எழுந்து, ''எதிர்ப்பவர் இருவர், ஆனால் இந்தியைக் கொண்டு வருபவர் நீங்கள் ஒருவர்தான். ஆகவே பெரும்பான்மை எதிர்ப்பின் பக்கம்தான்'' என்று பதில் கூறினார். அந்தப் பதில் உரைகேட்டுத் தமிழகமே பன்னீர்செல்வத்தைப் பாராட்டி மகிழ்ந்தது.

கட்டாய இந்தியை எதிர்த்துத் தமிழகமே போர்க்கோலம் பூண்டது. அந்தத் தமிழ் காக்கும் போர் முனையில் தலைப்பிலேதான் தாளமுத்து, நடராசன் என்ற இரு தமிழ்க் காளையர் சிறைச் சாலையில் பிணமாயினர்.

தமிழகம் கட்டாய இந்தியை எதிர்த்து நிற்பதை திரு. ஏ.டி. பன்னீர்செல்வமும், திரு. குமார ராசாமுத்தையா செட்டியாரும் 24.2.38 இல் சட்ட மன்றத்தில் எடுத்துரைத்து அரசுக்கு உணர்த்தினர்

என மாண்புமிகு முதல்வர் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் தம் 'நெஞ்சுக்கு நீதி' நூலில் குறிப்பிட்டுள்ளார்.

தொடர்ந்து மொழிச் சிக்கலைத் தீர்க்கவும், சட்டமன்றத்தில் பயன்படுத்த வேண்டிய மொழியைப் பற்றியும் பல்வேறு வாதங்கள் சட்டமன்றத்தில் நடைபெற்றன. இவற்றுள் கல்வியமைச்சராக இருந்த

திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார் பயிற்று மொழியாக வட்டார மொழிகளே இருக்க வேண்டும் எனச் சட்டம் கொண்டுவந்து 3.9.46, 30.10.47 ஆகிய நாள்களில் ஆற்றிய உரைகள் கவனத்தில் கொள்ளத்தக்கன.

''.... நாம் ஏன் வட்டார மொழிகளே பயிற்று மொழியாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறோம். இந்நாட்டு மக்கள் படிப்பறிவு பெற வேண்டும். ஒரு சிலர் மட்டும் கல்வி கற்பது இந்நாட்டிற்குப் போதாது. நூற்றைம்பது ஆண்டுகளுக்குப் பின்னர் இன்று நாம் என்ன காணுகிறோம்? இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும் ஆயிரத்தில் ஒருவருக்குக்கூடச் சரியான முறையில் ஆங்கிலம் பேசத் தெரியாது. கல்வியின் மூலம் உயர்ந்த அறிவைப் பெற்றவர்களை விரல் விட்டு எண்ணி விடலாம். சாதாரண மனிதர்கள் ஆங்கிலக் கல்விக்குப் பிறகும் உயர்தர அறிவை இன்னும் பெறவில்லை என்பதை நாம் அறிவோம். பல்லாண்டுகளாக மக்கள் அழுத்தி வைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் முன்னேற வேண்டும். ஆகவே மக்கள் கல்வியறிவு பெற வேண்டுமானால், வட்டார மொழிகளில்தான் அக்கல்வியறிவைப் பெற முடியும்.... எதிர்காலச் சந்ததியைக் கருத்தில் கொண்டே வட்டார மொழிதான் பயிற்றுமொழியாக இருக்க வேண்டும் என்ற உத்தரவை அரசு வழங்கியிருக்கிறது.... கல்வித் திட்டத்தை பொறுத்தமட்டில், நாம் எதிர்காலத்தைக் கவனத்தில் கொண்டும் இத்திட்டங்கள் சமூகத்திற்கும் நாட்டிற்கும் எந்த வகையில் பயன்படப் போகின்றது என்பதைத்தான் நாம் பார்க்க வேண்டும். இந்த மாகாணத்தின் எதிர்காலம் எப்படியிருக்கப் போகிறது? வங்காளத்தில் வங்காளிதான் ஆட்சிமொழி; ஐக்கிய மாகாணத்திலும், மத்திய மாகாணத்திலும் இந்தி மொழிதான் ஆட்சிமொழியாக உள்ளது. விரைவிலேயே இம்மாகாணம் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்று பேசப்படுகின்ற மொழியின் அடிப்படையில்தான் புதிய மாநிலங்களாகப் பிரியப் போகின்றது. அப்பொழுது, நீதிமன்றங்களிலும் கல்லூரிகளிலும் அரசு நிர்வாகத்திலும் அந்த அந்த வட்டார மொழிகளையே பயன்படுத்துவார்கள்...''

இக்காலத்தில் தலைமையமைச்சராய் இருந்த திரு. ஓ.பி இராமசாமி ரெட்டியார் அவர்கள் தமிழில் ஆற்றிய உரையில்,

''.... இப்பொழுது ஆகஸ்ட்டு 15ஆம் நாளுக்குப் பிறகு இந்த மாகாணத்தின் அரசாங்கத்தை மாகாண பாஷையில்தான் நடத்த வேண்டும். இனிமேல் அப்படித்தான் நடத்த வேண்டும் என்பதை நான் எச்சரிக்கை செய்திருப்பதை ஞாபகப்படுத்துகிறேன் இனி இங்கிலீஷ் பாஷையில் அரசாங்கத்தை நடத்த முடியாது

என்பதையும் சொல்ல விரும்புகிறேன். அரசாங்கத்தை மாகாண பாஷையில் நடத்த வேண்டுமென்று கிளர்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதை உணர வேண்டும். அதற்கு அனுகூலமாகவே 'நானும் இப்பொழுது பிரதமராக வந்திருக்கிறேன் என்பதை அங்கத்தினாகளுக்கு ஞாபகமூட்டுகிறேன்''

எனக் குறிப்பிட்டார்.

1947ஆம் ஆண்டு இந்தியா விடுதலை அடைந்ததும் நமக்கென ஆட்சி ஒன்றை அமைக்கவும், நம் நாட்டின் ஆட்சிமொழியைத் திட்டமிடவும் 'இந்திய அரசமைப்புப் பேரவை' ஒன்று நிறுவப்பட்டது. இராஜேந்திர பிரசாத் அதன் தலைவராக இருந்தார். 1950ஆம் ஆண்டில் இப்பேரவை இந்திய அரசமைப்புச் சட்டத்தை இயற்றியது. ஆட்சிமொழி பற்றிய இப்பேரவையின் முடிவுகள் இந்திய அரசமைப்புச் சட்டத்தின் பகுதி XVIIஇல் 'ஆட்சி மொழி' எனும் தலைப்பின்கீழ் இடம் பெற்றுள்ளன.

இந்திய அரசமைப்புச் சட்டத்தின் 433(1) பிரிவின்படி தேவநாகரி எழுத்து வடிவம் கொண்ட இந்தியே இந்திய நாட்டின் ஆட்சிமொழியாகவும், பிரிவுக்கூறு 343(2)இன்படி இந்திய அரசமைப்பின் தொடக்கத்திலிருந்து 15 ஆண்டுக் கால அளவுக்கு ஆங்கிலம் இந்தியாவில் ஆட்சிமொழியாகவும், பிரிவுக்கூறு 343(3)இன்படி ஆங்கிலம் 1965 ஆம் ஆண்டிற்குப் பிறகும் தொடர்ந்து நீடிக்க வழி வகுப்பதற்கும் நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் அளித்தது. இதற்கொப்ப இந்தி மொழியே மைய அரசின் ஆட்சிமொழியானது.

மாநில அரசுகளைப் பொறுத்தமட்டில் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் 345, 346, 347 ஆகிய பிரிவுக் கூறுகளின் அடிப்படையில் அம்மாநிலத்தின் பெரும்பான்மையான மக்கள் பேசும் மொழியை ஆட்சி மொழியாக்கிக் கொள்ள வழிவகை செய்துள்ளது.

இந்திய அரசமைப்புச் சட்டப்படி ஆட்சிமொழி என்பது ஒரு மாநிலத்தின் சட்டப் பேரவையால் ஏற்றுக் கொள்ளப்பட்ட மொழியாகும்.

தொடர்ந்து தமிழக சட்டமன்ற விவாதங்களைக் காண்போம். திரு. வி. வி. இராமசாமி என்ற உறுப்பினர் 26.11.1952 இல்

1) திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் பரீட்சார்த்தமாக அரசாங்க வேலைகள் தமிழில் நடக்க வேண்டுமென்று அரசு ஆணையிட்டதா?
2) பரீட்சார்த்தமாக நடைமுறையில் இருந்ததை மற்ற தமிழ் மாவட்டங்களுக்கும் விரிவுபடுத்தப்படுமா?

என இரண்டு கேள்விகளைக் கேட்டார்.

> ''அரசாங்க நடவடிக்கைகளைத் திருச்சி மாவட்டத்தில் பரீட்சார்த்தமாக நடத்தி வருவது உண்மைதான். அந்தத் திட்டத்தை மற்ற மாவட்டங்களுக்கு விரிவுபடுத்த வேண்டுமென்று பரிசீலித்ததில், தற்சமயம் அப்படிச் செய்யத் தேவையில்லை என்று தீர்மானித்துள்ளது''.

என முதலமைச்சர் திரு. சி. இராசகோபாலாச்சாரியார் பதிலளித்தார். திரு. வி. வி. இராமசாமி அவர்கள் தொடர்ந்து 'என்ன காரணத்தினால் தள்ளிப் போடப்பட்டது'? என்று கேட்டதற்கு ''இப்படிப்பட்ட மாற்றங்கள் மெதுவாகத்தான் செய்ய வேண்டும்'' என்று முதலமைச்சர் பதிலளித்தார். மீண்டும் திரு. வி. வி. இராமசாமி ''பரீட்சார்த்தமாக நடைபெற்று வரும் இந்த முயற்சியில் கஷ்டங்கள் இருந்தாலும், வட்டார மொழியில் நிருவாகத்தை நடத்துவது என்ற கொள்கையை விட்டுவிடாமல் தொடர்ந்து செயற்படுத்த முதலமைச்சர் உறுதி அளிப்பாரா?'' என்றார். இதற்கு முதலமைச்சர் ''இந்த உலகத்தில் பல சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டியிருக்கிறது. மொழியையும் சீர்திருத்த வேண்டும். நிருவாகத்தைச் சீர்படுத்தி நடத்தி வருதல் வேண்டும். ஒன்றைச் சீர்திருத்தம் செய்யும் பொழுது அதன்பால் பற்றுவைத்து, மற்றவற்றை மறந்து விடக்கூடாது. ஆகவே, மொழிச் சீர்திருத்தம்தான் நம் பயணத்தின் எல்லைக்கோடு என்று நாம் நினைக்கக் கூடாது'' என்றார்.

'சட்டமன்றத்தில் மொழி பெயர்ப்பாளர்கள் நியமிக்கப்பட வேண்டும்' என்று 4.12.1952இல் சி.வி.கே. ராவ் ஒரு தீர்மானம் கொண்டுவந்தார் அதன் மீது பேசிய திரு. பி. இராமமூர்த்தி,

> ''... ஐந்து வருஷங்களுக்கு மேலாக நம்நாடு சுதந்திரம் அடைந்திருக்கிறது. இந்த ஐந்து வருஷங்களாகியும் நாம் இன்னும் இந்த அந்நிய பாஷையை வைத்துக் கொண்டு, அந்நிய பாஷையில் பேசவேண்டிய நிர்ப்பந்தம் இருப்பது வேடிக்கையிலும் வேடிக்கையாக இருக்கிறது. உலகின் வேறு எந்த நாட்டிலும் சுதந்திரம் வந்த பிறகு இப்படிப்பட்ட ஒரு காட்சியை நாம் காண முடியாது''

என்றார். திரு. வி.ஆர். கிருஷ்ண ஐயர் இத்தீர்மானத்தின்மீது பேசும்போது,

> ''... இம்மாகாணத்தில் வாழ்கிற இலட்சோபலட்சம் மக்களின் தினசரி சமூக, பொருளாதார, அரசியல் வாழ்க்கையைப் பாதிக்கிற விஷயங்களைப் பற்றி விவாதிக்கவும், முடிவுகள் எடுக்கவும் இங்கே நாம் அவர்களுடைய பிரதிநிதிகளாகக் கூடியுள்ளோம். வயது வந்தோருக்கு வாக்குரிமை கொடுத்திருப்பதனால், படிக்காத, பாமர மக்களுடைய பிரதிநிதிகளாக நாம் உள்ளோம். தேர்தலில் நிற்க வேண்டும் என்றால், ஆங்கிலம் தெரிய வேண்டும் என்ற கட்டுப்பாடு இல்லை, ஆங்கிலம் இந்த நாட்டு

மொழியில்லை. இந்த நாட்டிலும் அம் மொழி வேரூன்றவில்லை. அப்படி இருக்கிற மொழியை நாம் இந்நாட்டிலிருந்து வெளியேற்ற வேண்டும்.... ஆங்கிலேயர்களை விரட்டிய பின்பும், தொடர்ந்து அவர்கள் விட்டுச் சென்ற மொழியைப் பயன்படுத்துவது மிகவும் அவமானம் தரக்கூடிய ஒன்றாகும்''

எனக் கூறியது குறிப்பிடத் தக்கது. இந்தத் தீர்மானத்தை திரு. பி.ஜி. கருத்திருமனும், திரு. கே. வினாயகமும் எதிர்த்தனர் என்பது சட்டமன்றப் பதிவுகள் காட்டும் உண்மை. திரு. பி.ஜி. கருத்திருமன் கருத்துகளை மறுக்கும் வகையில் பேசிய திரு. ப. ஜீவானந்தம்,

''.... இந்நாட்டிலே நூற்றுக்கு இருபது பேர்களுக்கு மேல் ஆங்கிலம் படித்தவர்கள் இல்லை. அப்படியிருந்தும்கூட இன்றைய தினம் ஆங்கிலம் பொது மொழியாகக் கருதப் படுவதைக் கண்டு வெட்கப்படாமல் இருக்க முடியாது. 150, 200 ஆண்டுகளாக ஆதிக்க மொழியாக இருந்த ஆங்கிலம் இன்றும் ஆதிக்கப் பொதுமொழியாக இருப்பது நமது சாபக்கேடு.... முக்கியமாக மொழிவாரி மாகாணப் பிரிவினை அவசியம்....''

என வலிமையான கருத்துகளை எடுத்து வைத்தார். இத்தீர்மானத்தை ஆதரித்து திரு. ஏ. கோவிந்தசாமி நாயக்கரும், திரு. டி. விஸ்வநாதனும் பேசினர். திரு. எஸ். சோமயாஜீலு என்ற உறுப்பினர் எதிர்த்துப் பேசினார். இத்தீர்மானத்தின்மீது 63 உறுப்பினர்கள் பேசியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. இறுதியாகக் கல்வியமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம்,

''.... ஆங்கிலத்தை அடியோடு அகற்றிவிட வேண்டும் என்றால் புதிய சட்டம் இயற்றுவதன் மூலம்தான் செய்ய முடியும். மொழி வழி மாகாணங்கள் பிரிப்பதனால்தான் சிக்கல்கள் பல ஒழியும் என்றார்கள். நானும் அதை ஒப்புக் கொள்கிறேன் அப்படிப்பட்ட மொழிவாரி மாகாணங்கள் உருவாவதற்கு நாம் எல்லோரும் ஒன்றாகத் திரண்டு உழைப்போமாக. புதிய மாகாணங்கள் அமைவதற்கு நாங்கள் தடைக் கற்களாக இருக்க மாட்டோம் நாங்களும் அதை விரும்புகிறோம்....''

எனக் கருத்துரைத்து வாதத்தை முடித்துவைத்தார்.

இதற்குப்பின் திரு. டி. விஸ்வநாதன் 14.7.1953இல் ஆந்திர மாகாண மசோதா மீது உரை நிகழ்த்த, அவரைத் தொடர்ந்து திரு ம.பொ.சி. அவர்களும் உரை நிகழ்த்தினார். ஆந்திர மாநிலம் புதிதாக உருவானது. 30.7.1953 இல் இதற்காகச் சட்டமன்றப் பிரிவுபசாரக் கூட்டம் நடந்தது.

ஆந்திர மாநிலம் பிரிந்த பிறகு தமிழகச் சட்டமன்றத்தில் நடந்த ஆட்சிமொழி தொடர்பான விவாதங்களைக் காண்போம் :

திரு. வி. ஆர். கிருஷ்ண ஐயர் (23.12.1953) :

''மாவட்ட அளவிலேயும் அங்கேயுள்ள நீதிமன்றங்களிலும் வட்டார மொழிகளில் நடவடிக்கைகள் அமையுமா?''

முதலமைச்சர் திரு. சி. இராசகோபாலாச்சாரியார் :

பரீட்சார்த்தமாக 1948ஆம் ஆண்டு எல்லா அரசாங்க நடவடிக்கையும் கடிதப்போக்குவரத்தும் ஒன்றிரண்டு மாவட்டங்களில் அமுல் நடத்த வேண்டும் என்று ஆணையிடப்பட்டது. ஆனால் அரசுடன் கடிதப்போக்குவரத்து ஆங்கிலத்திலேயே தொடரும். உள்ளாட்சித்துறை அலுவலகங்களிலும் இச்செயல்முறை நடைமுறையில் இருக்க ஆணையிடப்பட்டது. ஆனால் நீதிமன்றங்களில் அமுல் படுத்தப்படவில்லை. ஒவ்வோர் ஆண்டும் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் குறித்துத் திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவர் அரசுக்கு அறிக்கை அனுப்பி வைக்கிறார்''

திரு. ஏ. கோவிந்தசாமி நாயக்கர் :

''அண்மையில் சர்வ கட்சிகளும், சட்டசபை அங்கத்தினர்களும், தமிழ் ஆட்சிமுறை மாநாடு நடத்தி, தமிழ் ஆட்சிமொழியாக ஆகவேண்டுமென்ற தீர்மானம் சர்க்காருக்கு அனுப்பப் பட்டிருக்கிறது. அப்படியானால் இத்தீர்மானத்தின்படி நடவடிக்கை எடுக்கப்படுமா?''

சட்டமன்றத் தலைவர் :

''அப்படித் தமிழ் ஆட்சிமொழியாக வேண்டுமென்றால் சட்டமாக இயற்றப்பட வேண்டும்''.

இத்தகைய வாதங்களுக்குப் பிறகு, திரு. எம். கல்யாணசுந்தரம் 11.12.1954இல் சென்னைச் சட்டமன்ற விதிகள் மீது

''சென்னைச் சட்டமன்ற நடவடிக்கைகளில் ஆங்கிலம், தமிழ், மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளில் உறுப்பினர்கள் பேச இயலவில்லை என்றால், அப்படிப்பட்ட உறுப்பினர் தம்முடைய தாய்மொழியில் பேச அவைத்தலைவர் அனுமதி அளிக்கலாம்''

என ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்தார். இதற்குத் திரு. சி. சுப்பிரமணியம்,

''உறுப்பினர்களுக்குத் தெரிந்த மொழியிலேயே, சட்டமன்றத்தில் நடவடிக்கைகள் அமைய வேண்டும் என்பதில் எவ்விதக் கருத்துவேறுபாடும் இருக்க முடியாது. மலையாளம், கன்னடம் பேசுகின்ற உறுப்பினர் நண்பர்கள் தொடர்ந்து சட்டமன்றத்தில் இருப்பதனால் மூன்று மொழிகளையும் பயன்படுத்துவதால் மிகவும் சிக்கலிற்கு, அநாவசியச் செலவு செய்ய வேண்டிய

> கட்டாயத்திற்கு உள்ளாக்கப்படுவோம். மொழிவாரி மாகாணங்கள் பிரிக்கப்பட்டால் இந்தப் பிரச்சினைக்கு ஒரு முடிவு கட்ட முடியும். அந்நாள் விரைவிலேயே வரும் என்று எதிர்பார்க்கிறேன். திருத்தத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

எனப் பதிலுரைக்கத் திருத்தத் தீர்மானம் திரும்பப் பெறப்பட்டது.

திரு. அ. கஜபதி நாயக்கர் 17 3.1955 இல் சட்டமன்றத்தில் ''சட்டமன்றத்தில் தமிழிலும், ஆங்கிலத்திலும் பதிவு செய்யப்பட்ட பேச்சுகள் எத்தனை?'' என ஒரு கேள்வியைக் கேட்டார். நிதியமைச்சர் சி. சுப்பிரமணியம் இக்கேள்விக்கு,

> ''சென்ற வரவு - செலவுத் திட்ட அறிக்கைக்குப் பிறகு இந்தக் கவுன்சில் கூடுகின்ற ஆகஸ்ட்டு 1954 வரை, 332 ஆங்கிலப் பேச்சுகளும் 34 தமிழ்ப் பேச்சுகளும் சட்டமன்ற நிருபர்களால் பதிவு செய்யப்பட்டன. இதே சமயத்தில் சட்டமன்றக் கீழவையில் 596 ஆங்கிலப் பேச்சுகளும் 515 தமிழ்ப் பேச்சுகளும் பதிவு செய்யப்பட்டன. ...ஆங்கிலத்தில் பதிவு செய்ய 12 நிருபர்களும், 4 தமிழ் நிருபர்களும், மலையாளத்தில் பதிவு செய்ய 1 நிருபரும் உள்ளார்கள். தமிழில் பேசுவோர் அதிகமாக இருப்பதனால் தமிழ்ச் சுருக்கெழுத்தாளர்களை அதிகமாக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன''.

எனப் பதில் உரைத்தார், திரு அ. கஜபதிநாயக்கர் மீண்டும் 19 3.1955இல்

> ''செங்கற்பட்டு, தென்னார்க்காடு, வடார்க்காடு ஆகிய மாவட்டங்களில் இருக்கும் அலுவலகங்களிலும், இவைகளுக்கு இடையேயும், இவைகளுக்கும் சென்னை வாழ் செக்ரடேரியட்டுக்கும் நடக்கும் கடிதப் போக்குவரத்துகள் இப்போது நடைபெறும் ஆங்கிலத்தில் இருப்பதைத் தவிர்த்து, தமிழ் மொழியில் நடத்த வேண்டும்''

என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளும் தீர்மானத்தைக் கொண்டு வந்தார்.

இத்தீர்மானத்தை முன்மொழிந்து அவர் ஆற்றிய பேருரை தமிழர்களின் பன்னெடுங்கால மொழியுணர்வை, மொழி வளர்ச்சிக் கருத்துகளை வெளிப்படுத்துவதாகவே அமைந்தது.

> ''இதை ஏன் கொண்டு வந்தேனென்றால் இதற்கு முன்னதாகத் தமிழ் மொழியை ஆட்சி மொழியாக்க வேண்டுமென்று ஒரு சட்டம் கொண்டு வந்தேன். அது இந்தச் சபையில் இருக்கிறது. நமது மாகாண கவர்னர் பெருமான் அவர்களால் அதிகச் செலவாகும் என்று அதை விவாதிக்க உத்திரவு அளிக்கவில்லை.... அப்படி அந்த மசோதா ஏற்கனவே இருக்கும்போது, இந்தத் தீர்மானம்

எதற்கு என்று கேட்கலாம். அதை அப்படியே சும்மாவிட்டு விடாமல் மேலும் மேலும் தமிழை வளர்க்கும் முயற்சியில் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறேன். தீர்மானம் என்ன சொல்லுகிறது? இப்போது திருச்சியிலே நமது அரசாங்கம் அங்கு நடக்கும் நடவடிக்கைகள் எல்லாம் தமிழில் நடக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்திருக்கிறது. இந்த ஏற்பாட்டை அடிப்படையாகக் கொண்டதே இந்தத் தீர்மானமும். . .. ஒரு மாவட்டத்திற்குள்ளேயே (திருச்சி) நடந்தால் அது நாட்டுப்புற மொழியாகத்தான் இருக்கும். அப்படியல்லாமல் செக்ரடேரியட்டிற்கும் சம்பந்தம் வைத்துக் கொண்டால் அது நாட்டுமொழியாக அமையும். அப்போது ஒரு மதிப்பையும் பெறும்.... திருச்சிக்கும் சென்னையில் உள்ள செக்ரடேரி யட்டிற்கும் தமிழில் போக்குவரத்து நடந்தால் அப்போது நடவடிக்கைகள் நன்றாக இருக்கும். காரணம் அப்போது பொறுப்பு ஏற்படும். உண்மையில் தமிழ் மொழி வளரும். நமது இந்தியப் பேரரசை எடுத்துக் கொண்டால், இந்தியையே அரசியல் மொழியாக ஆக்க வேண்டுமென்பதற்காக எந்தெந்த விதங்களில் வளர்ந்து வரச் செய்கிறார்கள். நம்முடைய நாட்டில் எடுத்துக் கொண்டால் தமிழ் மொழியை வளர்ப்பதற்கு எந்தவிதமான திட்டமும் கிடையாது, சட்டமும் கிடையாது. திருச்சியில் இன்று நடைபெறும் விதம், குண்டுச் சட்டியில் குதிரை ஓட்டிக் கொள்வதுபோல்தான் இருக்கிறது. அப்படி எத்தனை நாளைக்கு ஓட்ட முடியும்? என்றைக்கு இருந்தாலும் வெளியே கொண்டு வரத்தானே வேண்டும்? அப்போது ஏன் உடனடியாக சென்னைக்கு இப்போதே கொண்டு வரக்கூடாது? .... எல்லா நடவடிக்கைகளையும் இன்று ஆங்கிலத்திலே அச்சடித்துக் கொடுத்துவிடப்படுகிறது. ஆனால் பேசுவதெல்லாம் தமிழ்மொழி. என்ன பொருத்தம்? தமிழில் அச்சடித்துக் கொடுத்தால்தான் தமிழ் ஆர்வம் பிறக்கும். அப்பொழுது அம்மொழி பழக்கத்திற்கு வரும்.... முதலில் சிறிதளவு செலவிலே இதை ஆரம்பிக்கலாமே! செங்கற்பட்டு, தென்னார்க்காடு, வடார்க்காடு சென்னை நகரத்திலுள்ள செக்ரடேரியட்டு ஆகியவற்றிற்கு மட்டும் சிறிய செலவிலே ஒவ்வொரு மாவட்டத்திற்கும் இரண்டு தமிழ்த் தட்டெழுத்தாளர்கள், இரண்டு தமிழ்ச் சுருக்கெழுத்தாளர்களை நியமித்து, ஒரு சிறிய அலுவலகம் நடத்தினால், அதன்மூலம் நாட்டிலே எவ்வளவோ தமிழ்ப்பற்று வளரும்; தமிழ் மொழியும் ஆட்சி மொழியாக வளரும். சும்மா செலவு ஆகிறது என்று மட்டும் சொல்லிக் கொண்டிருந்தால் பிரயோஜனம் இல்லை. பணம் எதற்காக இருக்கிறது? இந்த மாதிரியான நல்ல முறைக்குப் பயன்படத்தானே இருக்கிறது.... நமது நாட்டிலே இன்னும் 10

ஆண்டுகளுக்குள் எல்லா நடவடிக்கைகளும் தமிழிலே இருக்க வேண்டும். இந்தி மொழி ஆட்சிமொழியாக வரவேண்டு மென்றிருக்கிறது. ஆகவே பிற்காலத்தில் வரக்கூடியதைப் பற்றி இப்போதே தயாரித்துக் கொள்ள வேண்டாமா?.... இதைச் செய்வதால் தமிழ்மொழி உயரும், தமிழ் மக்கள் சிறப்படைவார்கள்; தமிழ்நாடு முன்னேறும்; அதற்கு அரசியலார் உதவி செய்ய வேண்டுமென்று மீண்டும் கேட்டுக் கொள்கிறேன்''.

இத்தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய திரு. ஏ. சுப்பிரமணியம், பாரதியார் கவிதையை எடுத்துக் கூறித் தமிழுணர்வூட்டியும்,

''அடுத்த தேர்தல் நடக்க இருக்கிறது. தேர்தலிலே தமிழை ஆட்சி மொழியாகக் கொண்டுவருவோம் என்று சொல்ல வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிடக் கூடாது. இப்போது கொண்டு வந்தால்தான் வாக்காளர்கள் அதிகமான வோட்டுகள் அளித்து நம்மைத் தேர்ந்தெடுப்பார்கள். ஆகவே ஆட்சியிலுள்ள அரசாங்கம் முந்திக் கொள்ள வேண்டும்''

என அரசைத் தூண்டியும் ஆதரவைத் தெரிவித்தார். அடுத்துப் பேசிய டாக்டர் ஏ. சீனிவாசன்,

''சில மாதங்களுக்கு முன் நான் நாகபுரிக்குச் சென்றிருந்தபோது, அங்குள்ள முதல் மந்திரி பண்டிட் சுக்லா அவர்களைச் சந்தித்தேன் அவர் என்னுடன் மாநாடு நடக்கும் ஹாலுக்கு வெளியே ஆங்கிலத்தில் பேசிக் கொண்டிருந்தார். ஆனால் மேடைக்கு வந்தவுடன் இந்தியில் உரைக்க ஆரம்பித்தார். எனக்கு ஒன்றும் புரியவில்லை பொறுத்துக் கொண்டிருந்தேன். அது ஒரு அகில இந்திய மாநாடு (All India Conference). அந்த மாநாடு முடிந்த பிறகு நான், பண்டிட் சுக்லா அவர்களைப் பார்த்து, 'I do not understand a word of what you spoke' என்று கேட்டேன். அதற்கு அவர் 'Yes, it does not matter' என்று கூறினார். அப்போதுதான் எனக்குக் கொஞ்சம் ஆவேசம் பிறந்தது. அவர்கள் மட்டும் இந்தியைப் பரப்ப வேண்டும் என்று இப்படிப் புரளி பண்ணும்போது நாம் மட்டும் ஏன் தமிழ் பேசுவதற்குப் புரளி பண்ணக்கூடாது என்று தோன்றிற்று''

எனத் தமக்கு நேர்ந்த அனுபவத்தையே எடுத்துக் கூறித் தீர்மானத்தை ஆதரித்தார். தொடர்ந்து பேசிய கே. பாஷ்யம் என்ற உறுப்பினர் 'கடிதப் போக்குவரத்தில் இலக்கணத் தமிழைப் பயன்படுத்தாமல் நாடோடித் தமிழைப் பயன்படுத்த வேண்டும்' என்ற திருத்தத்தையும் கூறித் தீர்மானத்தை ஆதரித்தார். அடுத்ததாகப் பேசிய திரு. டி.எம். நாராயணசாமிப் பிள்ளை

''.... சுதந்திரம் அடைந்தாலும் 10, 12 ஜில்லாக்களுக்கு அல்லது எல்லா ஜில்லாக்களுக்குமே தமிழை ஏற்படுத்தினாலும் மக்களுடைய வாழ்வு உயர்வடைய வேண்டுமானால் ஆங்கிலம் துணையாக இருந்தால்தான் உதவியாக இருக்கும். அப்பொழுதுதான் தமிழ் மொழியானது இந்தியாவுக்கு மட்டுமல்லாமல் உலகத்திற்கே தெரியும்படியான மொழியாக விளங்கமுடியும்''.

எனக் கருத்துரைத்தார். தொடர்ந்து பேசிய திரு. என். அண்ணாமலைப் பிள்ளை என்ற உறுப்பினர்,

''.... மொத்த ஜில்லாக்களிலும் தமிழ் மொழியை ஆட்சி மொழியாகக் கொண்டு வருவதற்கு வற்புறுத்த வேண்டு மென்பதைத் தவிர, இம்மாதிரியாக இரண்டு ஜில்லாக்களுக்கும், மூன்று ஜில்லாக்களுக்குமாகக் கொண்டு வருவதில் பிரயோஜனம் இல்லை. ஆகையால் அவருடைய தீர்மானத்தைக் கட்டாயம் வாபஸ் வாங்கிக் கொள்ள வேண்டும்''

என்றார், தொடர்ந்து திரு. வி. கே. ஜான் என்ற உறுப்பினரும்,

''.... தமிழே ஆட்சிமொழி என்பதற்கான மசோதாவை அரசாங்கம் கொண்டு வரவேண்டுமென்று நான் விரும்புகிறேன். அப்படிச் செய்யாமல் அவையில் எங்களுக்குப் புரியாத நிலையில், தமிழிலே பேசுவது சரியல்ல. .... தமிழை ஆட்சிமொழியாகக் கொண்டு வருவதற்குச் சட்டமன்றத்தில் மசோதா ஒன்றைத் தாக்கல் செய்யுங்கள். அந்த மசோதாவை ஆதரிக்க நான் தயாராக இருக்கிறேன்''.

என்றார். இத்தகைய நீண்ட விவாதத்திற்குப் பிறகு இத்தீர்மானத்தின்மீது 26.3.1955இல் திரு. எம். பக்தவத்சலம் விரிவானதோர் உரை நிகழ்த்தினார். அவ்வுரை ''சுதந்திரம் பெற்றபின், ஆட்சிமொழியை எப்படி அமைப்பது என்பதுதான் பிரச்சினை; இந்தத் தீர்மானத்தை அப்படியே அமுலாக்குவது சாத்தியமா என்பதைப் பார்க்க வேண்டும்; ஜில்லாக்களுக்கும் செக்ரடேரியட்டுக்கும் இடையே கடிதப் போக்குவரத்துகள் செய்வதென்றால் இது பொது மக்களைப் பொறுத்த விஷயமல்ல; திருச்சிராப்பள்ளி நடைமுறையை முதலில் பார்க்க வேண்டும்; திருச்சியை முதலில் சரி செய்துகொள்ள வேண்டும்'', என்னும் கருத்துப்பட அமைந்தது மட்டுமன்றி, தீர்மானத்தைத் திரும்பப் பெறுமாறும் திரு. அ. கஜபதி நாயக்கரைக் கேட்டுக் கொண்டது. உடனே திரு. அ. கஜபதி நாயக்கர் பதிலுரையில்

''... தமிழ் ஆட்சிமொழியாக இருந்தால் எல்லா நடவடிக்கைகளும் தமிழ்மொழியிலே நடைபெறும். அதற்காகத்தான் இப்பொழுது மூன்று ஜில்லாக்களுக்கும் சென்னை வாழ் செக்ரடேரியட்டிற்கும்

தொடர்பு ஏற்படுத்த வேண்டுமென்று இந்தத் தீர்மானத்தின் மூலமாகக் கேட்கிறேன். ஆட்சி மொழியாக வேண்டும் என்பதுதான் எல்லோருடைய அவா.

ஒரு ஆணும் ஒரு பெண்ணும் மணம் செய்து கொண்டால்தான் குடும்ப வாழ்க்கை நடத்துவதாக அர்த்தம். அதுபோல் ஒரு இராஜ்யத்தை ஆண் என்றும் மொழியைப் பெண் என்றும் வைத்துக் கொண்டு இராஜ்ஜியத்திற்கும் மொழிக்கும் தொடர்பு ஏற்பட்டால்தான் ஆட்சி ஒழுங்காக நடைபெற முடியும். தமிழ் ஆட்சிமொழியாக வேண்டுமென்று மசோதா கொண்டு வந்தபோது, நான் ஒருவனே தனியாளாய்ப் பேசினேன். யாரும் அதற்கு ஆதரவு கொடுக்கவில்லை... இப்பொழுது நாடோடித் தமிழ் வேண்டும் என்று சொல்கிறார்கள். நான் ஆங்கிலம்தான் படித்து உத்தியோகம் வகித்தேன். தமிழ் ஓரளவுதான் படித்திருக்கிறேன். ஆனால் தமிழில் உள்ள ஆர்வத்தினால் இப்பொழுது நன்கு தமிழைப் படித்தும், அதைப் பற்றிப் பேசியும் வருகிறேன். நான் இப்பொழுது என்ன சொல்லுகிறேன் என்றால் சட்டம் செய்யாது இந்தக் காலத்தில் திட்டம் ஒன்றும் செய்துவிட முடியாது. அது என்றைக்கும் இழுக்கு உண்டாக்கும். ஏற்கனவே திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் நடவடிக்கைகள் தமிழில் இருக்க வேண்டும் என்று திட்டம் செய்திருக்கிறார்கள். அது ஒழுங்காக நடக்கிறதா என்பதுதான் இப்பொழுதுள்ள கேள்வி. திருச்சியில் திட்டமாக அங்கு என்ன வேலைகள் நடந்து இருக்கின்றன? திட்டம் வகுக்க வேண்டுமென்று கனம் ஓ.பி. இராமசாமி ரெட்டியார் அவர்கள் சொன்னார்களே, அதற்கெல்லாம் என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன? கனம் மந்திரி அவர்கள் மனதில் கை வைத்துச் சொல்வார்களா? அப்படியிருந்தால் 100 ஆண்டுகள் ஆனாலும் தமிழ் வராது. திருச்சிராப்பள்ளியை எடுத்துக் கொண்டால், அங்கே ஒரு கலெக்டர் ஒரு குமாஸ்தாவைப் பார்த்துப் பரிகாசமாக 'வாங்க ஓட்டக்கூத்தரே' என்று அழைப்பார். மற்றொருமுறை 'வாருங்கள் புகழேந்திப் புலவரே' என்று அழைப்பார்; பரிகாசமாகப் பேசுவார். இப்படி நிகழ்ந்தால் தமிழ்மொழி எப்படி வளரும்? இந்த மாதிரியாகத்தான் தமிழைத் தமிழரல்லாதார் அவமானப்படுத்துகிறார்கள். ...திருச்சியில் ஐந்து ஆண்டுகளாகப் பரிசீலனை செய்த திட்டம் இன்னும் சரியாக நடைபெறுவதாகத் தெரியவில்லை. அங்கேயும், 'சபடேஜ்' **(Sabotage)** செய்து வைத்திருக்கிறார்கள். நல்ல தமிழன் இதைக் கண்டு சும்மா இருப்பானா? .... தமிழை உண்மையாக நாட்டு மொழியாகச் செய்ய வேண்டுமானால், சென்னை வாழ் செக்ரடேரியட்டில் அது புகுத்தப்பட வேண்டும்.

... உங்கள் இஷ்டம்போல் ஒரு காலவரை ஏற்படுத்துங்கள் என்றுதான் கேட்கிறேன். எத்தனை ஆண்டுகள் ஆகும் என்று கால அளவு சொல்லுங்கள் என்றுதான் கேட்கிறேன் .... சமீபத்தில் ஆந்திர தேசத்தில் ஒவ்வொரு ஆபிசருக்கும் ஓர் அகராதியைக் கொடுத்து, அதிலுள்ள சொற்களைப் பயன்படுத்திக் கொண்டு வருகிறார்கள். அவர்கள் அவ்விதம் செய்யும்போது, நாம் ஏன் செய்யக்கூடாது? அந்த அளவுக்கு நம்மனம் மாறவேண்டும் அதற்கான முயற்சிகள் செய்ய வேண்டும் . .. அதிகாரத்தில் இருக்கிறவர்கள் உறுதியாகச் செய்யமுடியும். அப்படிக் கனம் மந்திரியார் அவர்கள் ஓர் உறுதியளித்தால் நான் வாபஸ் வாங்கிக் கொள்கிறேன்''

எனக் கூறினார். இதன்பிறகு ஆளுநர் உரைமீது நடைபெற்ற விவாதங்களிலும் திரு. சி. கந்தசாமி, திரு. பி. அரங்கசாமி ரெட்டியார், திரு. ப. ஜீவானந்தம் ஆகியோர் தமிழ் ஆட்சி மொழியாவதைப் பற்றிக் கருத்துரைத்தனர். இவர்கள் இந்தியின் ஆதிக்கம் மேலோங்கி வருவதைச் சுட்டிக்காட்டினர். திரு. ப. ஜீவானந்தம்,

''நான் இந்த இராஜ்யத்தின் ஆட்சிமொழி தமிழாகத்தான் இருக்க வேண்டும் என்று கருதுகிறேன். தமிழ் மட்டுமல்ல, கன்னடியர்களும், மலையாளிகளும் நம் இராஜ்யத்துடன் இருக்கும் வரையில் கன்னடமும், மலையாளமும்கூட நம் இராஜ்ய ஆட்சிமொழியாகவே இருக்க வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன்''

எனக் கூறியதும் குறிப்பிடத்தக்கது. மொழிவழி மாநிலங்கள் அமைக்கப்படா நிலையில், இத்தகைய கருத்துகளை உறுப்பினர்கள் கொண்டிருந்தனர் எனக் கருத முடிகிறது. ஆளுநர் உரைமீது நடைபெற்ற விவாதத்தில் 5.8.1955இல் பேசிய நிதியமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம்

''நம்முடைய கொள்கை இதுதான், வட்டாரமொழியை மாநில ஆட்சிமொழியாக ஆக்க வேண்டும். ஒருசில கழகங்களைச் சார்ந்தவர்கள், தமிழ் மொழியை மாநில ஆட்சிமொழியாக உடனே பிரகடனம் செய்ய வேண்டும் என்கிறார்கள். இன்றைய நிலையில் கன்னடம், மலையாளம், தமிழ் ஆகிய மூன்று மொழிகளையும் ஆட்சி மொழியாக ஆக்க வேண்டும் என்ற கருத்தை நண்பர் ஜீவானந்தம்தான் குறிப்பிட்டார். இப்படிப்பட்ட மாற்றத்தைச் செய்வதற்கு இது ஏற்ற சமயம்தான். ஏனென்றால் மாநிலச் சீரமைப்புக் கமிஷன் நியமிக்கப்பட்டிருக்கிறது. மொழியின் அடிப்படையில் மாநிலங்கள் அமைக்கப்படலாம் அல்லது வேறு ஏதாவது அடிப்படையையும் பின்பற்றலாம். செப்டம்பர் மாதம் முப்பதாம் தேதிக்குள்ளாக இக்கமிஷன் தன் அறிக்கையைத்

தாக்கல் செய்யும். அதன்மீது முடிவுகளும் எடுக்கப்படலாம். இப்படிப்பட்ட சூழ்நிலையில் மூன்று மொழிகளை நிருவாக மொழிகளாக அறிவிப்பது எப்படிப் பொருத்தமுடையதாகும்? ஆகவே பொறுத்திருந்து பார்க்கலாம். நிருவாகத்திற்காகவும் நம்முடைய மொழிகளைத் தயார்படுத்த வேண்டும். அதற்காக வேண்டிய ஏற்பாட்டை நாங்கள் செய்து வருகிறோம்''

என விளக்கமளித்தார்.

மாநிலங்களுடைய கருத்தை அறிய வெளியிடப்பட்ட மத்திய அரசாங்க மொழிகளில் தயாரித்த வினாத்தாளை 28.9.1955இல் மாண்புமிகு திரு. எம். பக்தவச்சலம் சட்டமன்றத்தில் வைத்தார். இதன்மீதான விவாதம் தொடர்ந்து மன்றத்தில் நடைபெற்றது. மொழிக் கமிஷன் வெளியிட்டுள்ள வினாத்தாள் பற்றி வந்த தீர்மானத்தின் மீது சில திருத்தங்களைத் திரு. முகம்மது சாசாகான் அவர்கள் கொண்டு வந்தார். இத்திருத்தங்களை திரு. அ. கஜபதி நாயக்கர் வழிமொழிந்தார். அவர் ஆங்கிலத்தில் பேசமுற்பட்டபோது, ஓர் உறுப்பினர் அவரைத் தமிழில் பேசும்படி சொன்னார். தொடர்ந்து அவர் பேசும்பொழுது ''ஆங்கிலத்தில் பேசினால்தான் புரியக்கூடியவர்களுக்கு எட்டும்'' என்று சொல்லி, தான் 1954ஆம் ஆண்டிலேயே தமிழை ஆட்சிமொழியாகக் கொண்டு வந்த தீர்மானத்தை நினைவு கூர்ந்து கருத்துகளை எடுத்து வைத்தார். அப்பொழுது,

''.... நாட்டிற்கு ஒரு பொதுவான மொழி தேவை என்பது சரித்திர சாபக் கேடு என்றே நான் கருதுகிறேன் ஆங்கிலேயர்கள் நம்மை அடிமைப்படுத்தியும், மற்ற வழிகளிலும் ஆண்டார்கள். அவர்களுடைய மொழியை நம்மீது திணித்தார்கள். 'ஆங்கிலம் படித்தால் உனக்கு வேலையுண்டு', என்ற வற்புறுத்தல் இருந்ததனால் ஆங்கிலம் தொடர்ந்து நம்நாட்டில் ஒட்டிக் கொண்டது. ஆங்கிலம் பொது மொழியாக இருந்ததில்லை. அரசாங்கம் நடத்துவதற்கு வசதியான மொழியாகப் பயன்பட்டது. அல்லது தன்னலத்தையே குறிக்கோளாகக் கொண்ட அறிவாளிகள் என்று கருதப்பட்டவர்களால் ஆங்கிலம் கையாளப்பட்டது. என்னுடைய கருத்து என்னவென்றால், எவ்விதமான பொது மொழியும் இந்த நாட்டிற்குத் தேவையில்லை. ஆகவே இந்தியையும் சேர்த்து எல்லா மாநில மொழிகளும் ஒரே ரீதியாகக் கருதப்பட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்''

என்று தெளிவுபடக் கூறினார். தொடர்ந்து திரு. கே. பாஷ்யம் ''நாட்டின் நலத்தைக் கருத்தில் கொண்டு, இந்தி, ஆங்கிலம் விட்டுச் சென்ற இடத்தை நிரப்ப வேண்டும்' என்றார். இதற்கு டாக்டர் ஏ. இலட்சுமணசாமி முதலியார்

> ''.... நாட்டின் ஒருமைப்பாட்டை, பேசுகின்ற மொழி எப்பொழுதும் ஏற்படுத்தாது .... பள்ளிப் பருவத்திலிருந்து தாய்மொழியைக் கைவிட்டு, வட்டார மொழியை விடுத்து, இந்தியைக் கற்க வேண்டுமென்று எவரேனும் சொன்னால் நாம் அதை முழு மூச்சாக எதிர்க்க வேண்டும்''

என மறுமொழி அளித்தார். திரு. எம். பி. கோவிந்தமேனனும் 'தமிழ் ஆட்சிமொழியாக எங்கும் பரவி நிலைக்க வேண்டும்' என்பதே தம் ஆசை எனக் கருத்துரைத்தார். பிறகு சட்டமன்றக் கீழவையில் 'மொழிக் கமிஷன்' வினாத்தாளைத் திரு. சி. சுப்பிரமணியம் (கல்வியமைச்சர்) 29.9.1955இல் அறிமுகப்படுத்த அதன்மீது திரு.ப. ஜீவானந்தம், திரு. முத்தையா செட்டியார், திரு. எம். கல்யாண சுந்தரம், திரு. பி. அரங்கசாமி ரெட்டியார், திரு. பி.பி.கே. இராசா சிதம்பரம், திரு. பி. ஜி. கருத்திருமன், திரு. எம். பி. சுப்பிரமணியம், திரு. பி. இராமமூர்த்தி ஆகியோர் தங்களுடைய கருத்துகளைத் தெரிவித்தனர். பெரும்பாலோர் தமிழ் ஆட்சி மொழியாவதை ஆதரித்து, இந்தி ஓர் ஆதிக்க மொழியாகிவிடக் கூடாது என்ற அடிப்படையிலேயே கருத்துகளை எடுத்துரைத்தனர்.இதற்குப் பிறகு 26.11.1955-இல் திரு. அ. கஜபதி நாயக்கர்

> ''எல்லா மாவட்ட அலுவலகத்திலும் இருந்துவரும் கடிதப் போக்குவரத்து மற்றும் நடைமுறைக்குப் பயன்படுத்தும் ஆங்கில மொழியை அகற்றிவிட்டுத் தமிழ்மொழியைப் பயன்படுத்த அரசைக் கோருதல்''

எனும் தனி நபர் தீர்மானத்தைக் கொண்டு வந்தார். இத்தீர்மானத்தைத் திரு. ஏ. சுப்பிரமணியம், திரு. என். அண்ணாமலைப் பிள்ளை ஆகியோர் தொடர்ந்து ஆதரித்துப் பேசினர்.

தமிழ் ஆட்சி மொழியாவதற்குத் திரு.அ. கஜபதி நாயக்கர் சட்ட மன்றத்தில் மேற்கொண்ட முயற்சிகள் ஒரு புறம் தொடர்ந்து கொண்டிருக்க, தமிழகத்தின் நிலைமாறுதலும் ஒருபுறம் நிகழ்கிறது. 1953இல் ஆந்திரம் பிரிந்த பிறகு, 1956இல் கருநாடகம், கேரளம் ஆகிய மாநிலங்களும் மொழி வாரி மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டன. 1.11.1956 முதல் தமிழ்நாடு மொழி வழி மாநிலமாகச் செயற்படத் தொடங்கியது.

மொழிவழி மாநிலமாகத் தமிழ்நாடு அமைக்கப்பட்ட பிறகு 27.12.1956இல் ஆட்சிமொழிச் சட்ட முன்வடிவை அந்நாள் கல்வியமைச்சரான திரு. சி. சுப்பிரமணியம் சட்டமன்றத்தில் முன் மொழிந்தார். முன்மொழிவுரையில் அவர்,

> ''... ஒரு பூ மலர்கின்றது. அது மலர்கின்ற நிகழ்ச்சி நம் எல்லோருக்கும் மகிழ்வைக் கொடுக்கிறது. அம்மலர்ச்சி ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சி அல்ல; செடி வளர்ந்து, பிறகு அரும்பு விட்டு போதாகி அது மலர்கிறது. அது மலர்வதோடு நின்றுவிடுவதில்லை,

அதில் காய் ஏற்பட்டு, அது பழுத்து மக்களுக்கும் உதவுகிறது. அதே மாதிரிதான் தமிழ் மலர்கிறது என்றால், அது ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சி அல்ல. நம் நாட்டிலே இந்த ஐம்பது, அறுபது வருஷ காலமாக நடந்த நிகழ்ச்சிகளின் ஒரு பலனாக, இன்றைக்கு ஒரு செடியிலே ஒரு பூ மலர்கிறது. இதிலும் நல்லகாயும் கனியும் ஏற்பட்டு மக்களுக்குப் பயனளிக்கக்கூடிய முறையிலே இது இன்னும் நன்றாக வளர்ச்சி அடையும் என்பதில் எனக்கு எந்த விதமான சந்தேகமும் கிடையாது. ஆகையினால் நம்முடைய அரசாங்க மொழி தமிழாக இருக்கும் என்று பிரகடனம் செய்வதிலே நாம் ஒரு பெரிய முன்னேற்றப் பாதையிலே ஓர் அடியை எடுத்து வைத்திருக்கிறோம்.''

எனக் குறிப்பிட்டு, தமிழ்த் திட்டத்தைச் செயற்படுத்துவதில் ஆட்சிச் சொல்லகராதியின் முக்கியத்துவம் குறித்தும், தமிழ்த் தட்டச்சுகளின் தேவை குறித்தும், விதி, விதித் தொகுப்பு ஆகியவற்றை மொழி பெயர்ப்பது குறித்தும் சிறந்ததோர் உரையாற்றினார்.

இச்சட்ட முன்வடிவை சட்டமன்ற உறுப்பினர்கள் அனைவரும் கட்சிப் பாகுபாடின்றி வாழ்த்தி, வரவேற்றுத் தங்கள் கருத்துகளைக் கூறினர். திரு. பி. இராமமூர்த்தி 'தமிழ் ஆட்சிமொழி யாவதுடன் பயிற்று மொழியாக வேண்டும்' என்றார். திரு. பி. அரங்கசாமி ரெட்டியார் 'தமிழ்த் தட்டச்சும் சுருக்கெழுத்தும் ஆட்சிமொழிச் செயலாக்கத்திற்கு இன்றியமையாத் தேவை' எனக் குறிப்பிட்டார். திரு. உ. முத்து ராமலிங்கத் தேவர், 'ஆட்சிக்குத் தேவையான தமிழ்ச் சொற்கள் பாண்டித்துரைத் தேவரால் 'செந்தமிழ்ச் செல்வி'யிலும், உமாமகேசுவரன் பிள்ளையால் கரந்தைத் தமிழ்ச் சங்கத்திலும் தொகுக்கப்பட்டுள்ளன; அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்' என்றார். திரு. சோமையாஜீலு 'சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம் ஆகிய நூல்களில் இருந்து நிருவாகத்திற்குத் தேவையான சொற்களைத் தொகுத்து ஓர் அகராதியாக்கி, அரசு அலுவலர்களுக்கு வழங்க வேண்டும்' என்று கூறினார். திரு. கே. விநாயகம் 'இத்திட்டத்தை வட்ட நிலையில் (தாலுக்கா) கொண்டு வருவது சரியல்லவென்றும், மாவட்ட நிலையில் கொண்டு வரவேண்டும் என்றும், இத்திட்டத்தைச் செயற்படுத்தி முடிக்க ஒரு கால வரம்பு கொண்டு வர வேண்டும்' என்றும் சட்டத்திருத்தம் கொண்டு வந்தார். ஆயினும் அவரது சட்டத் திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட வில்லை. திரு. பி.டி. இராசன் 'ஏகமனதாக இந்த மசோதாவை நிறைவேற்ற வேண்டுமென்று உறுப்பினர்களைக் கேட்டுக் கொண்டார். செட்டி நாட்டரசர் திரு முத்தையா செட்டியார் 'டாக்டர் நோய் தீர்க்க வருவதுபோல், இந்தச் சமயத்தில் இந்தச் சட்டம் வந்திருப்பது மிகவும் பொருத்தம்' என்றார். திரு. பி. ஜி. கருத்திருமன் 'இதுவரை புட்டிப்பால் குடித்த குழந்தைக்குத் தாய்ப்பால்

கொடுத்ததுபோல்' இந்த மசோதா கொண்டு வந்ததற்காகப் பாராட்டினார். திரு. எஸ். சுயம்பிரகாசம் தமிழை ஆட்சி மொழியாக்கியதற்காக அரசுக்கு நன்றி தெரிவித்தார். திரு. ஆர். சண்முக இராஜேஸ்வர சேதுபதி இத்திட்டத்தை வெற்றி பெறச் செய்ய வழிகளைக் கூறினார். திரு. கே. எஸ். இலட்சுமிபதி நாயக்கர், திரு. ஏ. சாம்பசிவம், திரு. சி. கந்தசாமி, திரு. ஜி. நாராயணசாமி நாயுடு, திரு. வி. பாலகிருஷ்ணன், திரு. ஆர். கிருஷ்ணசாமி நாயுடு, திரு. இ. எல். இராகவமுதலியார், திரு. ஏ. ஆர். ஏ. எம். சொக்கலிங்கம் செட்டியார், திரு. எம். பழனியாண்டி, திரு. எம்.பி. பெரியசாமி, திரு. எஸ். இராமசாமி நாயுடு, திரு. வி. செல்லதுரை, திரு. ஜி. கோவிந்தன், திரு. ஏ. கோவிந்தசாமி நாயக்கர், திரு. ப. ஜீவானந்தம், திரு. எம். கல்யாணசுந்தரம், திரு. ஆர். வி. சுவாமிநாதன் ஆகியோர் தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தை வரவேற்றும், அதை வளர்க்கும் வழிமுறைகளை எடுத்துரைத்தும் இச்சட்டத்திற்கு ஆதரவைத் தெரிவித்தனர்.

இவ்வரலாற்றுச் சிறப்புமிக்க சட்டமுன்வடிவை அவையின் முன்வைத்தபோதே கல்வியமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம்

> ''என்னுடைய விருப்பம் என்னவென்றால், ஏதோ சாதாரண மசோதாவைக் கவனிக்கும்பொழுது இருப்பதைப் போல், சபையில் பத்து அல்லது இருபது அங்கத்தினர்கள் இருக்கக்கூடிய நிலைமை இல்லாமல், சபையின் எல்லா அங்கத்தினர்களும் இதை ஒரு விழாப்போல் கருதி, கடைசிவரையில் இருந்து தமிழ் அன்னையின் முடிசூட்டு விழாவில் எல்லோரும் பங்கெடுத்துக் கொண்டு, இந்த மசோதாவை நிறைவேற்றிவிட்டு இது நாம் கடைசியிலே செய்த ஒரு மகத்தான காரியம் என்ற பெருமையுடன் எல்லோரும் இந்தச் சபையிலிருந்து கலைவோமாக''

எனக் கேட்டுக் கொண்டதற்கிணங்க அவையின் உறுப்பினர்கள் அனைவரும் இச்சட்டத்தை நிறைவேற்றுவதில் பங்கேற்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. இறுதியில் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள்,

> ''சட்டசபையின் சார்பாக, தமிழ் மக்கள் சார்பாக, இந்த மசோதாவைத் தமிழ் அன்னையின் மலரடியில் சமர்ப்பிக்கிறேன். தமிழனாய்ப் பிறந்த பிறவிப் பயனை நான் பெற்றுவிட்டதாகவே கருதுகிறேன். இந்த மசோதாவை இங்கு பிரேரேபித்து, இதைச் சட்டமாக்குவதற்கு நான் ஒரு கருவியாக அமைந்ததைப் பற்றி உண்மையிலேயே பெருமைப்படுகிறேன்...
>
> வாழ்க தமிழ் ! வாழ்க தமிழ் ! வாழ்க தமிழ் !''

என முழங்க, உறுப்பினர்கள் அனைவரும் 'வாழ்க தமிழ்' என முழங்க, தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் ஒரு மனதாக நிறைவேற்றப்பட்டது. 27.12.1956இல் நிறைவேற்றப்பட்ட தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் 19.1.1957இல் ஆளுநரின் இசைவைப் பெற்றது. 1957ஆம் ஆண்டு

சனவரித் திங்கள் 23ஆம் நாளன்று தமிழ்நாடு அரசிதழில் வெளியிடப் பெற்றது. தமிழ்நாடு ஆட்சிமொழிச் சட்ட நகல் இணைப்பு -1இல் தரப்பட்டுள்ளது. இதன்படித் தமிழ்நாட்டில் தமிழ் மட்டுமே ஆட்சி மொழியாகும்.

ஆட்சிமொழிச் சட்டம் நிறைவேறிய பிறகு 1957-இல் ஆட்சிமொழிக் குழுவை அரசு ஏற்படுத்தியது.

ஆட்சிமொழிக் குழுவின் தலைவராக என். வெங்கடேசுவரன் பொறுப்பேற்றார்.

ஆட்சி மொழிக் குழுவில் கீழ்க்கண்டவர்கள் தொடர்ந்து பணியாற்றினர் :

1. என். வெங்கடேசுவரன் (1957-63)
2. சி ஏ. இராமகிருட்டிணன் (1963-65)
3. வி. கார்த்திகேயன் (1965-68)

இக்குழு. தமிழகம் முழுவதிலுமுள்ள அலுவலகங்களை ஆய்வு செய்து தமிழில் அலுவல்களை நடத்த அறிவுரையும், ஆட்சிமொழித் திட்டத்தைச் செயற்படுத்துவதில் ஏற்படும் சிக்கல்களைக் களைய அறிவுரையும், ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கத்திற்கு உறுதுணையான ஆட்சி சொல்லகராதியினை வளப்படுத்துவதற்கான அறிவுரையும் வழங்கியது. 1971ஆம் ஆண்டில், 28.5.1971 அன்று வெளியிடப்பட்ட அரசாணையின்படித் தமிழ் வளர்ச்சி இயக்ககம் என்ற புதிய துறை ஒன்று தோற்றுவிக்கப்பட்டது அத்துறையிடம் இப்பணிகள் அனைத்தும் ஒப்படைக்கப்பட்டன. இதனைத் தோற்றுவித்தவர் அன்று முதல்வராக இருந்த மாண்புமிகு முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் ஆவார். இதன் பிறகு தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் விறுவிறுப்புப் பெற்றது.

# இயல் இரண்டு

# ஆட்சிமொழித் திட்டஅரசாணைகளின் சுருக்கம்

'தமிழ் ஆட்சிமொழித் திட்டம்' தமிழ்நாட்டில் செயற்படுத்தப் படுவதற்காகத் தமிழ்நாடு சட்டப்பேரவையில் 'ஆட்சி மொழிச் சட்டம்' இயற்றப்பட்ட வரலாற்றை முந்தைய இயலில் அறிந்தோம்.

அச்சட்டத்தின் அடிப்படையில் தமிழ்நாடு அரசால் அவ்வப்போது பல ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன. அவற்றுள் இன்றியமையா அரசாணைகள் சில இவ்வியலில் தொகுத்துச் சுருக்கிக் கூறப்பட்டுள்ளன. இந்நூலைப் பயில்வோர் அறிந்து கொள்ளும் வகையில் இவ்வியலின் தொடக்கத்தில் சட்டம் ஆணைகள், அரசாணை, அறிவிக்கைகள், அறிவிப்புகள், கடிதங்கள், குறிப்பாணைகள் ஆகியவை பற்றிய விளக்கங்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இவை பற்றிய விளக்கங்களை அறிந்து கொள்ளுதல் நலம் பயக்கும். அரசுப் பணியில் புதிதாகச் சேருவோருக்கும், எத்தகைய பணியமைப்பில் ஈடுபடுவோருக்கும் இவ்விளக்கக் குறிப்புகள் உதவும்.

### சட்டம்

சட்டம் எனப்படுவது அனைவருக்கும் பொதுவானதாகவும், நீதிமன்றங்களின் நடவடிக்கைகளையும் செயல்முறைகளையும் வரையறுக்கவும் இயற்றப்படுவதாகும். இச்சட்டத்தின்கீழ் ஆணைகளும் விதிகளும் வெளியிடப்பட்டன. ஆட்சி முறைகளில் மாற்றம் ஏற்பட்டதன் விளைவாகச் சட்டங்கள் நாடாளுமன்றத்தாலும், சட்டமன்றங்களாலும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் ஏற்புக்குப் பின்னரே இயற்றப்படுகின்றன.

### அ. ஆணைகள்

ஒரு நாட்டின் தலைவன், தனது நாட்டு மக்களுக்கு ஆற்றும் கடமைகளை நிறைவேற்றுதற்கியலும் பொருட்டு உரியவாறு கட்டளைகள் பிறப்பிப்பது மரபு. இக்கட்டளைகளே பிற்காலத்தில் ஆணைகளாக மாறின. அரசனின் ஆணை இறைவனின் ஆணையாக மதிக்கப் பெற்றமையைத் தமிழ்நாட்டின் வரலாற்று ஏடுகள் காட்டுகின்றன.

முற்காலத்தில் தலைவனால் அல்லது அரசனால் பிறப்பிக்கப்படும் ஆணைகள் முரசறைந்து, பொது மக்களைக் கூட்டி, அரசனின் ஏவலாளர் களால் பொது இடத்தில் அறிவிக்கப்பட்டு, நிறைவேற்றப்பட்டு வந்தன.

இவ்வாணைகளை ஓலைகளில் எழுதியும் வந்துள்ளனர் என்பதற்கு வரலாற்றுச் சான்றுகள் உள்ளன. பின்னர் பிற்காலச் சோழ மன்னர்கள் காலத்தில்தான் இவ்வாணைகள் 'திருமந்திர ஓலைநாயகம்' என்றழைக்கப்பட்ட அமைச்சரின் உதவியாளரால் ஓலைகளில் எழுதப் பெற்றுச் செப்பேடுகளிலும் கல்வெட்டுகளிலும் செதுக்கப்பெற்றன. இத்தகைய செப்பேடுகளும், செப்புப் பட்டயங்களுமே அக்காலத்தில் ஆணைகளாகவும் பட்டயங்களாகவும் கருதப்பெற்றன.

இந்நிலை பின்னர் மாறியது. ஆங்கிலேயர்கள் இந்நாட்டைத் தங்கள் ஆளுகைக்கு உட்படுத்தியபோதுதான் சட்டங்கள், ஆணைகள், அறிவிக்கைகள், அறிவிப்புகள், குறிப்பாணைகள், கடிதங்கள் ஆகியவற்றிற்கெனத் தனித்தனியே வரையறைகளை வகுத்தனர்.

## ஆ. அரசாணை (Government Order)

''ஆணைகள்'' என்பனவற்றை நாடாளுமன்றத்தில் முன்மொழிய வேண்டுவதில்லை. அவை அரசின் அங்கமாக விளங்கும் செயலகத் துறைகளின் தலைவர்களால் துறைகளின் நடவடிக்கைகளுக்கேற்ப ஆளுநரின் பெயரால் வெளியிடப்பெறுகின்றன. இவ்வாறு ஆளுநரின் பெயரால் வெளியிடப்பெறும் ஆணைகள் அரசிதழ்களிலும் இடம் பெறுகின்றன. அரசிதழில் வெளியிடப் பெறும் ஆணைகள் ''அரசாணைகள்'' (G.O.) எனப் பெறுகின்றன.

எடுத்துக்காட்டாக ''இந்திய அரசமைப்புச் சட்டம்'' (The Constitution of India) இந்திய நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட ஒரு சட்டமாகும். இச்சட்டத்தின்கீழ்த் தமிழ்நாடு சட்டமன்றம் இயற்றிய சட்டமே, ''1956ஆம் ஆண்டின் தமிழ்நாடு ஆட்சிமொழிச் சட்டம்'' ஆகும். இச்சட்டம் அரசிதழிலும் இடம் பெற்றுள்ளது. இச்சட்டத்தை நடைமுறைப்படுத்து வதற்காக அரசு அவ்வப்போது ஆணைகளைப் பிறப்பித்து வந்தது; வருகிறது. இவையே ''அரசாணைகள்'' எனப்படுவன.

இவ்வரசாணைகள் 'வாலாயம்', 'நிலை ஆணை' என இரு வகைப்படும். 'வாலாயம்' எனக் குறிப்பிடப்பெறும் அரசாணைகள் அரசின் வாலாயமான நடவடிக்கைகளைச் செயற்படுத்துதற்குரியன. எடுத்துக்காட்டாக அரசு விடுமுறை நாள்கள் எவை என்னும் வாலாயமான தகவலை அளிக்கின்ற அரசாணை 'வாலாயம்' எனக் குறிப்பிடப் பெறுகிறது.

'நிலை ஆணை' (நிலையான அரசாணை) என்பது திட்டச் செயற்பாடு, அரசு அலுவலர் நியமனம், நிதி ஒதுக்கீடு போன்றவற்றிற்காகப் பிறப்பிக்கப்படுவதாகும்.

## இ. அறிவிக்கைகள் (Notifications)

''அறிவிக்கைகள்'' என்பன பெரும்பாலும் அரசுத் துறைகளால் ஏலம், ஒப்பந்தப்புள்ளி, பணிகளுக்கான ஒப்பந்தங்கள், பொது மக்களுக்குத் தெரிவிக்கப்பட வேண்டிய முக்கிய அறிவிப்புகள் போன்றவையாகும். இவை நாளிதழ்களில் மட்டுமன்றி அரசிதழ்களிலும் வெளியிடப்படுவனவாகும். இவ்வறிவிக்கைகள் எவற்றுக்குத் தொடர்புடையனவோ அவை பற்றிய விவரங்கள் அனைத்தையும் கொண்டிருக்கும். இவை பெரும்பாலும் வணிகம், பொதுப்பணி, திட்டப்பணி ஆகியவற்றுக்கான நேர்வில் வெளியிடப்படுவனவாகும்.

## ஈ. அறிவிப்புகள் (Notices)

இவை அரசால் மட்டுமன்றிப் பொது மக்களாலும் நாளிதழ்கள், கிழமை இதழ்கள், திங்கள் இதழ்கள் ஆகியவற்றில் ஏதாவதொரு பொருண்மை தொடர்பில் வெளியிடப் பெறும் செய்திக் குறிப்புகளாகும்.

## உ. கடிதங்கள் (Letters)

அரசு அலுவலகக் கடிதங்கள், நாம் ஒருவருக்கொருவர் முகமன் கூறி, வாழ்த்துக்கூறி எழுதுகின்ற கடித நடைமுறைக்கு மாறுபட்டவை. இயல்பாக எழுதும் கடிதங்கள் கடிதத்தை அனுப்புகின்றவர் பெயர், முகவரி; பெறுகின்றவர் பெயர், முகவரி அதன் பின்னர்த் தகவல் - வாழ்த்து - அழைப்பு - விசாரிப்பு - முறையீடு போன்ற பொருண்மைகளைக் கொண்டிருப்பவை. ஆனால் அரசுத் துறைகள் ஒன்றோடொன்று தொடர்பு கொள்ளும் நேர்வில் அமையும் கடிதங்கள் மேற்கூறிய அமைப்பிலிருந்து மாறுபட்டவை. கடிதம் எந்தத் துறையிலிருந்து எந்தத் துறைக்கு அனுப்பப்படுகிறது என்ற விவரம் கடிதத்தின் மேற்பகுதியில் இருபுறமும் (முறையே இடது, வலது பக்கங்களில்) இடம் பெறவேண்டும். அடுத்துக் கடிதத்தின் எண், நாள் ஆகியவை இடம்பெறல் வேண்டும். துறைத் தலைவரை / தலைவியை 'ஐயா'', என்றோ ''அம்மையீர்'' என்றோ விளிப்பதுடன் கடிதம் தொடங்கவேண்டும். பின்னர் எப்பொருள் குறித்துக் கடிதம் எழுதப்படுகிறது என்பதைப் 'பொருள்' (Subject) என்று குறிப்பிட்டு அதில் 'துறையின் பெயர், வேண்டும் விவரம் / தெரிவிக்கும் தகவல் ஆகியவற்றைச் சுருக்கமாக எழுதவேண்டும் ''பொருள்'' என்பதற்குக் கீழே ''பார்வை'' (Reference) எனக் குறிப்பிட்டு அதில் இக்கடிதம் வரைவதற்கான ஆதாரம் அல்லது முந்தைய கடிதங்கள் (வரப் பெற்றவை / அனுப்பப் பெற்றவை) ஆகியவற்றைக் குறிப்பிட வேண்டும். முதல் கடிதமெனில் 'பார்வை' என்பது இடம் பெற வேண்டுவதில்லை. பின்னர்க் கடிதம் எந்த நோக்கத்திற்காக வரையப்பட வேண்டுமோ அதனைத் தெளிவாகக் கூறும் முறையில் கடிதத்தின் கருத்துப் பகுதியை எழுத வேண்டும். கடிதங்கள்

தகவல் வேண்டும் கடிதங்களாகவோ தகவலளிக்கும் கடிதங்களாகவோ அமையலாம். விவரங்களைத் தெரிவிக்கும் கடிதங்களாகவும் அவை அமையலாம். கடிதத்தின் இறுதியில் (உயர் அலுவலருக்கு (அ) அலுவலகத் தலைவருக்கு எழுதப்படும் கடிதங்களில்) ''தங்கள் நம்பிக்கையுள்ள'' எனக் குறிப்பிட வேண்டும்.

நேர்முகக் கடிதம் எனில் யாருக்கு எழுதினாலும் 'அன்புடைய...' எனத் தொடங்கிக் கடிதம் பெறுபவரின் பெயரைக் குறிப்பிட்டு எழுதலாம். பெயரைக் குறிப்பிட்டு எழுத விரும்பாவிடில் ''அன்புசான்றீர்'' என விளித்து, மேலே குறிப்பிட்ட மற்றப் பகுதிகளையும் எழுதியபின் தகவலை நேரில் கேட்பது போன்றும் / அளிப்பது போன்றும் செய்திப் பகுதி அமைய வேண்டும். கடிதத்தின் இறுதியில் ''தங்கள் அன்புள்ள'' எனக் குறிப்பிட்டு, கடிதம் எழுதுபவரின் பெயரைத் தெளிவான எழுத்துக்களில் அடைப்புக் குறிக்குள் எழுத வேண்டும். கடிதத்தின் இறுதிப் பகுதியின் இடப்பக்கத்தில் பெறுபவரின் பெயர், கல்வித் தகுதி, வகிக்கும் பதவி, அவர் பணியாற்றும் துறை, அலுவலக முகவரி ஆகியவை இடம் பெறுதல் வேண்டும்.

இத்தகைய கடிதங்களும் - அமைப்பு முறைகளும் அரசு அலுவலகங்கள் அனைத்திலும் இன்றளவும் நடைமுறையில் இருப்பவை.

இவ்வாறு கடிதங்கள் அமையும் முறையை மேலும் விரிவாக அறிந்து கொள்ளத் தமிழ் வளர்ச்சித் துறை வெளியிட்டுள்ள 'மாதிரி வரைவுகள்' என்ற நூலைப் பார்வையிடலாம்.

### ஊ. குறிப்பாணை (Memo)

அரசுத் துறைகள் தத்தம் கட்டுப்பாட்டின் கீழ் இயங்கும் துறைத் தலைமை அலுவலகங்களுக்கும்; துறைத் தலைமை அலுவலகங்கள் தத்தம் சார்நிலை அலுவலகங்களுக்கும் அனுப்பும் கடிதங்களே குறிப்பாணைகளாகும். இவை வேண்டுகோள் கடிதங்களாக அமையாமல் தேவைப்படும் விவரங்களைத் தரும்படிக் கேட்கும் கட்டளைகளைக் கொண்டிருப்பனவாகும் இவை அரசாணைகளுக்குத் திருத்தங்களாகவும் வெளியிடப் பெறுவதுண்டு.

## ஆட்சிமொழிக்குழு

இணைப்பு 1இல் இடம்பெற்றுள்ள ''தமிழ்நாடு ஆட்சி மொழிச் சட்டத்தைக்'' கவனத்துடன் படித்தறிதல் வேண்டும்.

ஆட்சிமொழிச் சட்டத்தைச் செயற்படுத்துவதற்காக 1957ஆம் ஆண்டில் 'ஆட்சிமொழிக் குழு' ஒன்று அமைக்கப்பட்டது. (இணைப்பு 2 : பொதுத்துறை நிலையாணை எண் : 192, நாள் 21.1.1957)

ஆட்சி மொழிக் குழுவின் பணிகள் வருமாறு :

அ) தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தைச் செயற்படுத்துவதில் அரசுக்கு அறிவுரைகள் வழங்குதல்.

ஆ) தமிழ் நாடு முழுவதிலுமுள்ள அரசு அலுவலகங்களில் தமிழில் அலுவல்கள் எவ்வாறு நடத்தப்படுகின்றன என்பதை நேரில் ஆய்வு செய்தல்.

இ) ஆட்சிமொழித் திட்டத்தைச் செயற்படுத்துவதில் ஏற்படுகின்ற இடர்ப்பாடுகளை நீக்குவதற்கு ஆவன செய்தல்.

ஈ) ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்திற்கு உறுதுணையாக ஆட்சிச் சொல்லகராதியை உருவாக்கித் தருதல்.

உ) நடைமுறையிலுள்ள சட்டங்கள், விதிகள், விதித் தொகுப்புகள், நடைமுறை நூல்கள், படிவங்கள் ஆகியவற்றைத் தமிழாக்கம் செய்தல்.

ஆட்சிமொழிச் சட்டம் இயற்றப்பட்ட காலகட்டத்தில் தமிழ்நாட்டிலுள்ள அரசு அலுவலகங்களின் நடவடிக்கைகள் அனைத்தும் ஆங்கிலத்தில்தான் மேற்கொள்ளப்பட்டுவந்தன. இவற்றிற்கு அடிப்படையாக விளங்கிய சட்டங்கள், விதிகள், விதித் தொகுப்புகள், நடைமுறை நூல்கள், படிவங்கள் ஆகிய அனைத்தும் ஆங்கிலத்தில்தான் இருந்தன. எனவே ஆங்கிலத்தில் மேற்கொள்ளப்பட்டு வந்த அலுவலக நடவடிக்கைகளை, நடைமுறைகளை உடனடியாகத் தமிழுக்கு மாற்றுவதில் சிக்கல்கள் ஏற்பட்டன.

1957ஆம் ஆண்டில் அமைக்கப்பெற்ற ஆட்சிமொழிக் குழுவின் அறிவுரைப்படி அலுவலகங்களில் தமிழ்த் திட்டச் செயலாக்கம் எங்ஙனம் நடைபெறுகின்றது என்பதை ஆய்வு செய்வதற்கும், இடர்ப்பாடுகளைக் களைவதற்கும் தனி அலுவலர் (ஆய்வு) எனும் பணியிடம் தோற்றுவிக்கப்பட்டு ஆய்வுப் பணிகள் மேற்கொள்ளப்பட்டு வந்தன.

இக்காலகட்டத்தில் மொழி பெயர்ப்புச் செய்யப்பட வேண்டிய நூல்களும், படிவங்களும் மிகுதியாக இருந்தமையால் மொழி பெயர்ப்புப் பணிக்கெனத் தனி அலுவலர் (மொழி பெயர்ப்பு) எனும் பணியிடம் தோற்றுவிக்கப்பட்டது. மொழி பெயர்ப்புத் தனி அலுவலர் மற்ற அலுவலகங்களிலிருந்து சட்டங்கள், விதிகள், விதித் தொகுப்புகள், நடைமுறை நூல்கள் ஆகியவற்றைப் பெற்றுத் தமிழாக்கம் செய்யும் பணியை மேற்கொண்டார்.

இவ்வாறாக ஆட்சிமொழிச் சட்டத்தை நிறைவேற்றுவதற்கான பணிகள் ஆட்சிமொழிக் குழுவால் மேற்கொள்ளப்பட்டு வந்தன.

## ஆட்சிமொழித் திட்ட நிறைவேற்ற நிலைகள்

1956ஆம் ஆண்டுத் தமிழ்நாடு ஆட்சிமொழிச் சட்டத்தின் (தமிழ்நாடு சட்டம் **XXXIX-1956**) பிரிவுக் கூறு 4-இல் ''தமிழ் பயன்படுத்தப்பெற வேண்டி அலுவல் முறைக் காரியங்களை அறிவிக்கை செய்வதற்கு அரசுக்கு உள்ள அதிகாரம்'' என்பதில் ''மாநில அரசு அவ்வப்போது வெளியிடுகின்ற அறிவிக்கையின் மூலமாக அந்த அறிவிக்கையில் குறிப்பிடுகின்ற அலுவல் முறைக் காரியங்களுக்குத் தமிழ் பயன்படுத்தப்பட வேண்டும் என்று கட்டளையிடலாம்'' என எடுத்துரைக்கப்பட்டுள்ளது. எனவே இது தொடர்பில் அரசாணைகள் பிறப்பிக்கப்படும் வரையில் அரசு அலுவலகங்களில் பெரும்பாலான இனங்களில் (கடிதப் போக்குவரத்துகள், பதிவேடுகளைப் பேணுதல்) ஆங்கிலம் பயன்படுத்தப்பட்டு வந்தது. முன்னரே கூறியது போன்று நடவடிக்கைகளை ஆங்கிலத்திலிருந்து உடனடியாகத் தமிழில் மாற்றி அமைத்துக் கொள்வது நடைமுறையில் இயலாதது எனக் கருதப்பட்டதால், அரசு அலுவலகங்களில் படிப்படியாகத் தமிழைக் கொணருவதற்குத் திட்டமிடப்பட்டது.

14.1.1958 பொங்கல் திருநாளன்று தமிழில் கடிதப்போக்குவரத்து மேற்கொள்ள வேண்டுமென்று ஆட்சிமொழித் திட்டத்தின் பிரிவு 4-இன் கீழ் அறிவிக்கை ஒன்று வெளியிடப்பெற்றது. 1958ஆம் ஆண்டில், தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் உருவாக்கப்படா நிலையில் தமிழ்க் கடிதங்களைக் கையினால் எழுத வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

முதலில் தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் இல்லாத அரசு அலுவலகங்களில் கையினால் கடிதங்களை எழுதி அனுப்பும் முறை புகுத்தப்பட்டது.

இந்நடைமுறையை வேளாண்மைத் துறை, வருவாய்த்துறை போன்ற 19 துறைகளின் சார்நிலை அலுவலகங்களில் செயற்படுத்துவதற்கு ஆணையிடப் பெற்றது. அடுத்து, இத்திட்டம் மாவட்ட அளவிலான அரசு அலுவலகங்களுக்கும் விரிவு படுத்தப்பட்டது. பின்னர் இத்திட்டம் துறைத் தலைமை அலுவலகங்களிலும் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது. துறைத் தலைமை அலுவலகங்களுக்காகக் கீழ்க்கண்ட நான்கு நிலைகளைக் கொண்டதொரு திட்டம் வகுக்கப்பட்டது.

முதல் நிலை : பொது மக்களுக்கு எழுதப்படும் அனைத்துக் கடிதங்களுக்கும் தமிழ் பயன்படுத்தப்பெற வேண்டும். (இணைப்பு 3 : 13.2.64ஆம் நாளிட்ட அரசு பொது (எம்) துறை நிலையாணை எண். 225)

இரண்டாம் நிலை : சார்நிலை, மாவட்ட நிலை அலுவலகங்களுக்கு எழுதப்படும் அனைத்துக் கடிதங்களுக்கும் தமிழ் பயன்படுத்தப் பெற வேண்டும். (இணைப்பு 4 : 24.3.65ஆம் நாளிட்ட அரசு பொது (எம்) துறை, நிலையாணை எண். 603)

மூன்றாம் நிலை : பிற துறைகளுக்கு எழுதப்படும் கடிதங்களில் தமிழ் பயன்படுத்தப் பெறவேண்டும். (இணைப்பு 5 : 27.9.69ஆம் நாளிட்ட அரசு பொதுத் (த.வ.1) துறை, நிலையாணை எண். 1796)

நான்காம் நிலை : அரசுச் செயலகத் துறைகளுக்கு எழுதப்படும் கடிதங்களில் தமிழ் பயன்படுத்தப்பட வேண்டும். (இணைப்பு 6 : 2.12.1971ஆம் நாளிட்ட அரசு கல்வித்(தவ)துறை, நிலையாணை எண். 2070)

இவ்வாறு படிப்படியாக அரசு அலுவலகங்களில் தமிழை நடைமுறைக்குக் கொண்டு வரும் திட்டத்தின்படி முதல்நிலை 1963ஆம் ஆண்டிலும், இரண்டாம் நிலை 1965ஆம் ஆண்டிலும், மூன்றாம் நிலை 1968ஆம் ஆண்டிலும், நான்காம் நிலை 1971ஆம் ஆண்டிலும் செயற்பாட்டிற்குக் கொண்டுவரப்பெற்றன.

## தமிழ் வளர்ச்சி இயக்ககத் தோற்றம்

ஆட்சி மொழித் திட்டத்தை அரசு அலுவலகங்களில் செயற்படுத்த அமைக்கப்பட்ட ஆட்சி மொழிக்குழுவைப் பற்றி முன்னரே அறிந்து கொண்டோம். இத்திட்டத்தினைத் தமிழ்நாடு முழுவதும் உள்ள அரசு அலுவலகங்களில் பரவலாகவும், முழுமையாகவும் செயற்படுத்தும் நோக்கில் அரசு 'தமிழ் வளர்ச்சி இயக்ககம்' எனும் தனித்துறைத் தலைமை அலுவலகத்தை 1971ஆம் ஆண்டில் தோற்றுவித்தது (இணைப்பு 7 : கல்வித்துறை அரசாணை நிலை எண் : 824, நாள் 28.5.71) இவ்வாணைக்கிணங்க, அரசு அலுவலகங்களில் ஆட்சி மொழித் திட்டத்தைச் செயற்படுத்துதல் தொடர்பான அனைத்துப் பணிகளையும், தமிழ் வளர்ச்சி தொடர்பான பல்வேறு பணிகளையும் தமிழ் வளர்ச்சி இயக்ககம் மேற்கொண்டு வருகிறது.

தமிழ் வளர்ச்சி இயக்குநரைத் துறைத் தலைமை அலுவலராகக் கொண்டு செயற்படும் தமிழ்வளர்ச்சி இயக்ககம் சென்னையில் அமைந்துள்ளது. ஒவ்வொரு மாவட்டத்திலும் மாவட்ட ஆட்சியர் அலுவலக வளாகத்தில் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் அலுவலகம் செயற்படுகிறது. சேலம், திருநெல்வேலி ஆகிய இடங்களில் மண்டலத் தமிழ் வளர்ச்சித் துணை இயக்குநர் அலுவலகங்கள் செயற்படுகின்றன.

## தொடர்பு அலுவலர் நியமனம்

ஆட்சிமொழித் திட்டம் சரிவர நடைபெறுவதற்கு இயலும் வகையில் துறைத் தலைமை அலுவலகங்கள் ஒவ்வொன்றிலும் தொடர்பு அலுவலர் நியமனம் செய்யப்பட வேண்டும் என்றும், அவ்வாறு நியமனம் செய்யப்படும் அலுவலர் ஆட்சிமொழித் திட்டச் செயற்பாடு தொடர்பில் அவ்வப்போது வெளியிடப்பெறும் ஆணைகளுக்கேற்ப அவ்வத்துறையில் தமிழில் கடிதப் போக்குவரத்துகளை மேற்கொள்வதுடன் தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநருடன் தொடர்பு கொண்டு ஒத்துழைக்க வேண்டும் என்றும் தமிழ் வளர்ச்சி இயக்குநரால் பரிந்துரைக்கப்பட்டது. அரசு இப்பரிந்துரையை ஏற்று,

அ) செயலகத் துறைகளில் நிருவாகப் பொறுப்பு வகிக்கும் அரசுச் சார்புச் செயலாளர்

ஆ) துறைத் தலைமை அலுவலகங்களில் நிருவாகப் பொறுப்பு வகிக்கும் இணை இயக்குநர்கள்

இ) மாவட்டாட்சியாளர் அலுவலகங்களில் நிருவாகப் பொறுப்பு வகிக்கும் துணை ஆட்சியர்

ஆகியோரை ஆட்சி மொழித் திட்டத் தொடர்பு அலுவலர்களாகப் பணிமேற்கொள்ளுமாறு ஆணையிட்டது. (இணைப்பு 8 : 14.11.78ஆம் நாளிட்ட அரசு கல்வித்துறை நிலையாணை எண். 1979).

## தமிழ்த் தட்டச்சுப் பயிற்சியும் - பணியும்

முன்பு கூறியவாறு தமிழில் வரைவுகளைக் கையினால் எழுதும் பணி நடைமுறைப்படுத்தப்பட்டபோது, இதைச் செய்வதில் நேரிட்ட காலச் சுணக்கத்தைக் குறைப்பதற்காகத் தமிழ்த் தட்டச்சுப் பொறியினை உருவாக்க வேண்டியது இன்றியமையாதது என்னும் கருத்து வலுப்பெற்றது.

எனவே, தமிழ்த் தட்டச்சுப் பொறிகளை உருவாக்கும் முயற்சியில் ஆட்சி மொழிக்குழு ஈடுபட்டது. சில தனியார் நிறுவனங்கள் அப்போது தமிழ்த் தட்டச்சுகளைத் தயாரித்து வந்துள்ளன. எனினும் அத்தகைய நிறுவனங்களால் தயாரிக்கப்பெற்ற தட்டச்சுகளின் ஆணிப்பட்டடைகள் **(Key Boards)** ஒத்த தன்மையில் அமையவில்லை. ஒரு நிறுவனத்தால் தயாரிக்கப்பட்ட தட்டச்சுப் பொறியில் பயிற்சி பெற்ற தட்டச்சர், மற்றொரு நிறுவனத்தால் தயாரிக்கப்பெற்ற தட்டச்சுப் பொறியைக் கையாள இயலாத நிலை இருந்தது. அதுமட்டுமன்றி அப்போது பயன்படுத்தப் பட்டு வந்த தமிழ்த் தட்டச்சுப் பொறியில் பல குறைபாடுகளும் இருந்தன. ஆதலால் அத்தமிழ்த் தட்டச்சுப் பொறிகளில் விரைவாகத் தட்டச்சிட இயலா நிலையும் இருந்து வந்தது. எனவே அக்குறைகளை ஆராய்ந்து சீர் செய்வதற்கும், சில நிறுவனங்களால் தயாரிக்கப்பட்டு வந்த தமிழ்த்

தட்டச்சுப் பொறிகளில் ஆணிப்பட்டடைகள் ஒத்த தன்மையுடையனவாக அமைவதற்கும் குழுவொன்று அமைக்கப் பெற்றது. இக்குழு பலமுறை நிலைகளை ஆய்ந்து, இப்போது பயன்பாட்டில் இருக்கும் ஆணிப்பட்டடையை அமைப்பதற்குத் திட்டம் வகுத்தது. இத்திட்டம் செம்மையாக நிறைவேறுவதற்கு அந்நாளில் சட்டக் கல்வி இயக்குநராக இருந்த திரு. எம். அனந்த நாராயணன், இ.கு.ப. அவர்களின் தட்டச்சு நுண்ணறிவு பெரிதும் உறுதுணையாக விளங்கியது

தமிழ்த் தட்டச்சின் ஆணிப்பட்டடை நிலைப்படுத்தப்பட்ட தனையடுத்து, தமிழ்த் தட்டச்சில் தட்டச்சர்களுக்கும் சுருக்கெழுத்துத் தட்டச்சர்களுக்கும் பயிற்சி அளிப்பதற்காகச் சென்னையில் மையப் பயிற்சி நிலையமொன்றை அரசு துவங்கியது. சென்னையில் மட்டுமன்றி இப்பயிற்சி மையங்கள் சேலத்திலும் வேலூரிலும் தொடங்கப்பெற்றன.

19.11.61ஆம் நாளுக்கு முன்னர் பணியிற் சேர்ந்த தட்டச்சர்கள் பயிற்சிபெறும் தனியார் நிலையங்களுக்கு அரசு உதவித்தொகை வழங்கியது. 19.11.61ஆம் நாளுக்குப் பின்னர் அரசுப் பணியில் நியமிக்கப்பெறும் தட்டச்சர்கள், தமிழ்த் தட்டச்சுத் தேர்வில் குறைந்தது கீழ்நிலைத் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என அறிவிக்கப்பெற்றது.

இத்தகைய ஆணைகளால் தமிழ்நாடு அரசின் அமைச்சுப் பணியில் தட்டச்சர்களாக நியமனம் செய்யப்படுபவர்கள் தமிழ்த் தட்டச்சில் கீழ்நிலைத் தேர்ச்சியேனும் பெற்றிருக்க வேண்டும் என்பது கட்டாயமாக்கப்பட்டது.

பின்னர்த் துறைத்தலைமை அலுவலகங்களிலும், மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களிலும் இருந்துவந்த ஆங்கிலத் தட்டச்சுகளைத் திரும்பப் பெற்று, அவற்றிற்கீடாகத் தமிழ்த் தட்டச்சுகளை வழங்கும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இருப்பினும் இந்நடவடிக்கை களால் ஆங்கிலத் தட்டச்சுகளைத் திரும்பப் பெறும் செயற்பாட்டில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்படவில்லை. இதன் பின்னரும் இப்பொருள் தொடர்பாக அரசு பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டு, அரசு அலுவலகங்களில் இருக்கவேண்டிய தட்டச்சுகளின் எண்ணிக்கை பற்றி முடிவு செய்து ஆணையிட்டுள்ளது. இதனை இவ்வியலில் 'தட்டச்சு வரையறை' எனும் பகுதியில் காணலாம்.

## தேர்வு

அரசு அலுவலகங்களில் தமிழ் ஆட்சிமொழித் திட்டம் செவ்வனே அமைய அரசுப் பணியாளர்கள் தமிழில் போதிய அளவு தேர்ச்சி பெற்றிருக்க வேண்டியது இன்றியமையாதது. தொடக்க நிலையில் 30.11.1957க்கு முன்னர் அரசுப் பணியில் சேர்ந்த மொழிச் சிறுபான்மையினரும், பிறரும் போதிய அளவு தமிழ்த் தேர்ச்சி

பெறாதிருந்த நிலை இருந்தது. இதற்கென இத்தகையோருக்குத் தமிழ் வளர்ச்சித் துறையில் பயிற்சியும், தேர்வும் நடத்தப் பெற்றன.

30.11.57க்கு பின்னர் அரசுப் பணியில் சேர்ந்த மொழிச் சிறுபான்மையினர் தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையம் நடத்தும் தமிழ்மொழித் தேர்வினைத் தமது தகுதிகாண் பருவ காலத்திற்குள் எழுதித் தேர்ச்சி பெற வேண்டும் என அரசு ஆணையிட்டுள்ளது.

மேலும் அரசுப் பணியாளர் அனைவரும் ஆட்சிமொழிச் செயலாக்க நடைமுறைகள் அனைத்தையும் முழுமையாக அறிந்திருத்தல் வேண்டும் எனும் நோக்கில் இந்நூல் தயாரிக்கப்பட்டுள்ளது. இந்நூலினைத் தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையம் நடத்தும் தேர்வில் பாட நூலாக வைக்கவும், இனி அரசுப் பணியில் சேருவோர் இத்தேர்வினை எழுதித் தேர்ச்சி பெற்றால்தான் அவர்களின் தகுதிகாண் பருவம் முடிக்கப்படும் எனும் வகையிலும் அரசு நடவடிக்கை எடுத்துள்ளது.

## விதிவிலக்கு இனங்கள்

1971ஆம் ஆண்டு வரையில் ஆட்சிமொழித் திட்டத்திலிருந்து சில அலுவலகங்களுக்கு விதிவிலக்கு **(Exemption)** அளிக்கப்பட்டிருந்தது. இவ்வாறு அளிக்கப்பட்டிருந்த விதிவிலக்குகள் திரும்பப் பெறப்பட்டு அரசு அலுவலகங்கள் அனைத்திலும் தமிழ்த் திட்டம் முழுமையாக நிறைவேற்றப்படுவதற்கு வழி வகுக்கப்பட்டது.

தமிழ் ஆட்சிமொழியாக அரசு அலுவலகங்களில் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்ட போதிலும், சில குறிப்பிட்ட இனங்களில் ஆங்கிலம் பயன்படுத்தப்பெறுவதைத் தவிர்க்க இயலாத நிலை ஏற்பட்டது. அரசு அலுவலகங்களில் அன்றாட நடவடிக்கைகள் எளிதாக நடைபெறுவதற்காகவும், நிருவாக அமைப்பில் சிக்கல்களைத் தவிர்க்கும் பொருட்டும் சில இனங்களில் ஆங்கிலத்தைப் பயன்படுத்துவதற்கு அனுமதியளிக்கப் பட்டது. இவ்வாறு ஆட்சிமொழிச் சட்டத்திலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட்டுள்ள இனங்கள் விவரம் வருமாறு :

1. மாநிலக் கணக்காய்வுத் தலைவர், கருவூலக் கணக்கு அலுவலர், சம்பளக் கணக்கு அலுவலர் ஆகியோருக்கு எழுதப் பெறும் கடிதங்கள், அவர்களுக்கு அனுப்பப் பெறும் சம்பளப் பட்டிகள், பயணப்படிப் பட்டிகள், சில்லறைச் செலவுப் பட்டிகள், பயிற்சி உதவிப் பணப்பட்டிகள் போன்ற கணக்குத் தொடர்பானவை.
2. மைய அரசு அலுவலகங்கள், பிற மாநில அலுவலகங்கள், நீதிமன்றங்கள் ஆகியவற்றுக்கு எழுதப் பெறும் கடிதங்கள்.

3. மேல்முறையீட்டுக்குட்பட்ட சட்டத் தொடர்புடைய ஆணைகள்

4. வெளிநாட்டு நிறுவனங்கள், தூதரகங்கள் மற்றும் ஆங்கிலத்திலேயே செய்தித் தொடர்பு வைத்துக் கொண்டுள்ள நிறுவனங்கள் ஆகியவற்றுடன் கொள்ளும் தொடர்பு

(இணைப்பு 6 : கல்வி (தமிழ் வளர்ச்சி)த் துறை அரசாணை நிலை ம. எண் 2070, நாள்: 2.12 1971, இணைப்பு 9 : தமிழ் வளர்ச்சி- பண்பாட்டுத் (தவ1-1) துறைக் கடித எண்.7411, நாள். 31.7.1989)

## பட்டிகளைத் தமிழில் தயாரித்தல்

விதிவிலக்கு இனங்களில் வரிசை எண் 1-இல் பட்டிகள் இடம் பெற்றிருந்தன. ஆனால் பட்டிகளையும் தமிழில் தயாரித்து அனுப்பலாம் என அரசு தெளிவுரை வழங்கியுள்ளது.இவ்வாறு தயாரிக்கப்படும் பட்டிகளைப் பொறுத்தவரை,

1. கருவூல விதி எண்.16, துணை விதி2(அ)வில் குறிப்பிட்டுள்ளவாறு பட்டி தயாரிக்கத் தேவைப்படும் படிவம் தமிழ், ஆங்கிலம் ஆகிய இருமொழிகளிலும் இருக்கலாம்.

2. ஒரு பட்டியையோ **(Bill)** அல்லது கைச்சாத்தையோ **(Voucher)** தமிழில் தயாரிக்கலாம்: இப்படித் தயாரிக்கப்பட்ட பட்டியில்

   1) பணம் பெறுபவர் பெயர்

   2) கோரப்படும் தொகை

   3) எந்த இனத்தின் கீழ்க் கோரப்படுகிறது.

என்ற மூன்றை மட்டும் ஆங்கிலத்தில் குறிப்பிடல் வேண்டும். அதில் பட்டியைப் பணமாக்கும் அலுவலர் மேலொப்பமிட வேண்டும் என ஆணையிடப்பட்டுள்ளது. மேலும் வருங்காலங்களில் ஏற்புக்காக அனுப்பப்படும் பட்டிகள் மேற்காணும் தெளிவுரைப்படி இருப்பின் அவற்றை உடனடியாகத் தேர்வு செய்து அனுப்புமாறும், எவ்விதக் காரணத்தைக் கொண்டும் காலதாமதம் செய்தல் கூடாது என்றும் கருவூல அலுவலர்கள், சம்பளக் கணக்கு அலுவலர்கள் அனைவருக்கும் அறிவுறுத்தப்பட்டுள்ளது. (இணைப்பு 10 : நிதி(கக2) துறை, கடித எண்.100168/96-4, நாள் 25.3.1997)

## நீதி மன்றங்கள் - தீர்ப்பாயங்களில் செயலாக்கம்

ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தினை விரைவுபடுத்தும் பொருட்டுச் சில இனங்களுக்கு விதி விலக்களிக்கப்பட்டதை நாம்

அறிவோம். அவற்றில் நீதி மன்றங்களுக்கு எழுதப்படும் கடிதங்களுக்கும் விதிவிலக்கு அளிக்கப்பட்டிருந்தது. ஆயினும் தமிழ்நாட்டிலுள்ள உயர்நீதிமன்றத்திற்குச் சார்நிலையிலுள்ள அனைத்து உரிமையியல் நீதிமன்றங்கள் (Civil Courts), குற்றவியல் நீதிமன்றங்கள் (Criminal Courts), தீர்ப்பாயங்கள் (Tribunals) ஆகியவற்றில் சில விதிவிலக்கு களுக்குட்பட்டு ஆட்சிமொழியை அறிமுகப்படுத்த வேண்டுமென்று அரசு ஆணையிட்டது. குற்றவியல் நீதிமன்றங்களைப் பொறுத்தமட்டில் பின்வரும் விதிவிலக்குகளுக்கு உட்பட்டுச் சாட்சியங்களைப் பதிவு செய்வதற்கு அனுமதிக்கப் பெற்றது.

1. தமிழைத் தவிர பிறமொழியைத் தாய்மொழியாகக் கொண்ட நீதிமன்றத் தலைமை அலுவலர்கள் சாட்சியங்களைப் பதிவு செய்யத் தொடர்ந்து ஆங்கிலத்தைப் பயன்படுத்தலாம்.
2. தமிழ் மொழி தவிர பிறமொழிகளில் அளிக்கப்பட்ட சாட்சியங்கள் ஆங்கிலத்தில் தொடர்ந்து பதிவு செய்யப்பெறலாம்.
3. உண்மையான சரியான பொருளைத் தரக்கூடியவை என்று நீதிமன்றத் தலைமை அலுவலர்கள் கருதுமிடத்து ஆங்கிலச் சொற்களையும் ஆங்கிலச் சொற்றொடர்களை யும் பயன்படுத்தலாம்.

மேலும் 14.1.70 முதல் உயர்நீதிமன்றத்திற்குச் சார்நிலையில் அமைந்திருக்கின்ற அனைத்து நீதிமன்றங்களிலும், தீர்ப்பாயங்களிலும் (வருவாய், நீதி மன்றங்கள், தொழிலாளர் நீதி மன்றங்கள் மற்றும் தீர்ப்பாயங்களிலும் மேலே குறிப்பிட்ட விதிவிலக்குகளுக்குட்பட்டுச் சாட்சியங்களைத் தமிழில் பதிவு செய்து கொள்ளலாம் என்று ஆணையிடப்பட்டது. (இணைப்பு 11 : 13.11.69ஆம் நாளிட்ட அரசு பொதுத்(தவ)துறை, நிலையாணை எண். 2807)

அடுத்ததாக நீதிமன்ற அமைச்சுப் பணியிலுள்ள தட்டச்சர்களுக் கும் ஏனைய அரசுத் துறைத் தட்டச்சர்களைப் போன்று தமிழ்த் தட்டச்சில் கீழ்நிலைத் தேர்ச்சி பெறுவதற்கும் வழிவகை செய்து ஆணையிட்டது. இவ்வாணை 24.9.71ஆம் நாள் முதல் செயற்பாட்டிற்குக் கொண்டு வரப்பெற்றது.(இணைப்பு 12 : 24.9.71ஆம் நாளிட்ட அரசு கல்வி(த.வ.)த் துறை நிலை ஆணை எண். 1668)

13.11.69ஆம் நாளும் 2807 நிலை எண்ணும் பெற்ற பொதுத் (தவ) துறை அரசாணையிற் குறிப்பிடப்பட்ட விதிவிலக்குகளுக்குட்பட்டு உயர்நீதி மன்றங்களுக்குச் சார்நிலையாக உள்ள அனைத்துக் குற்றவியல் நீதிமன்றங்களிலும், அனைத்து வருவாய் நீதிமன்றங்கள், தொழிலாளர் நீதிமன்றங்கள், மற்றும் தீர்ப்பாயங்களிலும் தீர்ப்புகளையும் ஆணைகளை

யும தமழுல எழுதுவதற்கு ஆணையிடப்பெற்றது. (இணைப்பு 13 : 21.1.76ஆம் நாளிட்ட அரசு சட்டத் துறை நிலை ஆணை எண்.10) எனினும் நடைமுறைச் சிக்கல்கள் காரணமாக இவ்வாணை செயற்பாட்டிற்கு வருவது தற்காலிகமாகத் தடை செய்யப்பட்டது. (இணைப்பு 14 : 24.3.76ஆம் நாளிட்ட அரசு சட்டத்துறை நிலை ஆணை எண்.50) பின்னர் 14.11.76 முதல் இத்தடை நீக்கப்பெற்றது. (இணைப்பு 15 : 13.11.76ஆம் நாளிட்ட அரசு சட்டத்துறை நிலை ஆணை எண்.191.) பின்னர் 1982ஆம் ஆண்டில் உயர்நீதிமன்றத்திற்குச் சார்நிலையில் அமைந்த 1) உரிமைஇயல் நீதிமன்றங்கள், 11) தீர்ப்பாயங்கள், 111)குத்தகை-வருவாய் **(Rent & Revenue)** நீதிமன்றங்கள் ஆகியவற்றில் எழுதப்படும் தீர்ப்புகள், தீர்ப்பாணைகள், ஆணைகள் தமிழில் இருக்க வேண்டுமென்று அரசு ஆணையிட்டுள்ளது.

நீதிமன்றங்கள் தவிரத் தமிழ்நாட்டில் 1) நிருவாகத் தீர்ப்பாயம் 2) மாநிலப் போக்குவரவு மேல்முறையீட்டு நீதிமன்றங்கள், 3) விற்பனை வரி மேல்முறையீட்டுத் தீர்ப்பாயங்கள் போன்றவையும் இயங்கி வருகின்றன. இவற்றிலும் தமிழ்த் திட்டச் செயலாக்கம் நடைமுறைப் படுத்தப்பட வேண்டுமென்றுகருதி முதலில் மாநிலப் போக்குவரவு மேல்முறையீட்டு நீதிமன்றத்தில் செயற்படுத்த ஆணையிடப் பெற்றது. (இணைப்பு 16 : 17.12.69ஆம் நாளிட்ட அரசு பொதுத் (தவ1) துறை நிலை ஆணை எண்.2423)

அதே போன்று விற்பனை வரி மேல்முறையீட்டுத் தீர்ப்பாயங் களில் தமிழை நடைமுறைப்படுத்துவதற்கு பின்வரும் விதிவிலக்குகள் அளிக்கப்பட்டுத் தமிழ்த் திட்டம் செயற்படுத்தப்பட்டது.

1. சம்பளப்பட்டி, சில்லறைச் செலவினப்பட்டி, பயணப் படிப் பட்டி, உதவித் தொகைப் பட்டி மற்றும் கருவூலங் கள், சம்பளக் கணக்கு அலுவலகங்கள் மாநிலக் கணக் காய்வுத் தலைவருக்கு எழுதப்படும் கடிதங்கள்.
2. மாநிலத்திலுள்ள மைய அரசு அலுவலகங்கள் மற்றும் ஊர் நீதி மன்றங்கள் தவிர ஏனைய நீதிமன்றங்கள் அனைத்துடனும் மேற்கொள்ளப் பெறும் அனைத்துக் கடிதப் போக்குவரத்துகள்.
3. மேல்முறையீட்டிற்கும் திருத்தத்திற்கும் உட்படக்கூடிய அனைத்துச் சட்ட முறைப்படியான ஆணைகள். (இணைப்பு 17 : 4.1.1975ஆம் நாளிட்ட அரசு கல்வித் துறை நிலை ஆணை எண்.20)

## ஆய்வுப் பணி

ஒருபுறம் ஆட்சிச் சொல்லகராதி போன்ற நூல்கள் தயாரிக்கப்பட்டு வந்த அதே காலகட்டத்தில், தமிழ் நாடு முழுவதிலுமுள்ள அரசு அலுவலகங்கள் அனைத்திலும் ஆட்சிமொழியாகிய தமிழ் பயன்படுத்தப் பட வேண்டும் என்று ஆட்சிமொழிக் குழுவானது ஒவ்வொரு துறைக்கும் அதன் சார்நிலை அலுவலகங்களுக்குமாக அரசாணைகளைப் பிறப்பித்து வந்தது. இவ்வாணைகள் அரசிதழில் வெளியிடப் பெற்றன. ஆதலால், இவ்வாணைகளின்படி அரசுத் துறைகளில் தமிழில் நடிவடிக்கைகள் மேற்கொள்ளப்பெற வேண்டும் என்பது கட்டாயமாக்கப் பெற்றது.

தமிழ்த் திட்டச் செயலாக்கம் அரசு அலுவலகங்களில் மேற்கொள்ளப்படுகின்றனவா என்பதைக் கண்காணிக்கும் முறையிலும், திட்டச் செயலாக்கத்தில் அரசுத் துறைகளில் ஏற்படும் இடர்ப்பாடு களையும் சிக்கல்களையும் நீக்கும் வகையிலும் அனைத்து அலுவலகங் களிலும் ஆய்வுப் பணி மேற்கொள்ளப் பட்டது. ஆய்வுப் பணிக்கென வினாப்பட்டிப் படிவமும் (இணைப்பு 18) பதிவேடுகளின் பட்டிய லொன்றும் (இணைப்பு 19) தயாரிக்கப்பட்டன. 1957ஆம் ஆண்டில் ஆட்சிமொழிக்குழு உருவானபோது தனிஅலுவலர் (ஆய்வு) என்ற பணியிடம் தோற்றுவிக்கப்பட்டு அவரே ஆய்வுப் பணிகளை மேற்கொண்டு வந்தார் என்பதை முன்னரே அறிந்தோம்.

தமிழ் வளர்ச்சி இயக்ககம் தோற்றுவிக்கப்பெற்ற பிறகு ஆட்சி மொழித் திட்ட ஆய்வுப் பணி விரிவாக்கப்பட்டது. இப்பணி தமிழ்நாடு முழுமையும் உள்ள அரசு அலுவலகங்களில் முழுமையாகவும் பரவலாகவும் நடைபெற நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. அனைத்து மாவட்டங்களுக்கும் ஆய்வுப் பணிக்கெனத் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்கள் அமர்த்தப்பட்டனர்.

### அ. தலைமைச் செயலகத்தில் செயலாக்கமும் ஆய்வும்

தொடக்க காலத்தில் ஆட்சிமொழித் திட்ட ஆய்வுப் பணி சார்நிலை அலுவலகங்களிலிருந்து தொடங்கப்பட்டது. பின்னர் படிப்படியாக விரிவுபடுத்தப்பட்டு, துறைத்தலைமை அலுவலகங்கள் அனைத்து அலுவலகங்களுடனும் அலுவலக நடவடிக்கைகளைத் தமிழிலேயே மேற்கொள்ள வகை செய்யப்பட்டது. முறையான, தொடர்ச்சியான ஆய்வுகளால் அனைத்து அலுவலகங்களிலும் குறிப்பிடத்தக்க அளவு தமிழை ஆட்சிமொழியாகப் பயன்படுத்தி வந்தமை கண்டறியப்பட்டது. இதனடிப்படையில் தலைமைச் செயலகத்தின் சில துறைகளில் ஆட்சிமொழித் திட்டத்தைச் செயற்படுத்த ஆணை வெளியிடப் பெற்றது. பின்னர் அனைத்துத்துறைகளும் ஆட்சி மொழித் திட்டத்தைச் செயற்படுத்தும் வகையில் ஆணைகள் வெளியிடப் பெற்றன. துறைத்

தலைமை அலுவலகங்கள் தலைமைச் செயலகத் துறைகளுக்கு எழுதும் கடிதங்களைத் தமிழிலேயே அனுப்ப வேண்டும் எனவும், தலைமைச் செயலகத் துறைகளும் துறைத்தலைமை அலுவலகங்களுடனான கடிதத் தொடர்புகளைத் தமிழிலேயே மேற்கொள்ள வேண்டும் எனவும் ஆணையிடப்பட்டது. ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் தலைமைச் செயலகத்திலும் முழு அளவில் (விதிவிலக்கு இனங்கள் நீங்கலாக) அமைய ஆணைகள் வெளியிடப்பட்டன. இவற்றின் அடிப்படையில் தலைமைச் செயலகமும் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்திற்கு உட்படுத்தப்பட்டது. பதிவேடுகள், கோப்பு நடவடிக்கைகள், கடிதப் போக்குவரத்து, செயல்முறை ஆணைகள் முதலிய அனைத்தும் தமிழிலேயே அமைதல் வேண்டும் என்பதுடன், சட்டத்தின்கீழ்ப் பிறப்பிக்கப்படும் விதிகள், விதிமுறைகள் (விதிவிலக்கு இனங்கள் நீங்கலாக), பிற ஆணைகள் அனைத்தும் தமிழிலேயே வெளியிடப்பட்ட வேண்டும் என அரசு ஆணையிட்டது. இவைமட்டுமன்றிச் சட்டத்தின் கீழ்ப் பிறப்பிக்கப்படும் விதிகள் , விதிமுறைகள் ஆணைகள் ஆகியவை ஆங்கிலத்தில் வெளியிடப்படும் நேர்வுகளில் தமிழுக்கும் நிகர்நிலைதந்து இவற்றின் தமிழாக்கம் விரைவில் வெளியிடப்பெற வேண்டுமெனவும் அரசு ஆணையிட்டது. இவ்வகையில் தலைமைச் செயலகத்தில் ஆட்சிமொழிச் செயலாக்கம் முழுமையாக அமைய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. தலைமைச் செயலகத்துறைகளில் தமிழ் பயன்படுத்தப்படுவதைத் தமிழ் வளர்ச்சி-பண்பாடு , இந்து சமய அறநிலையத் துறைச் செயலாளர் ஆய்வு செய்வார். (இணைப்பு 20 முதல் 27 வரை : பொது (பொது எம்)த் துறை அரசாணை நிலை எண்.537 நாள் : 21.3.1964; பொது (தமிழ் வளர்ச்சி. 1)த் துறை அரசாணை நிலை எண். 453 நாள் : 24.2.1966; உள்துறை அரசாணை நிலை எண் 2010 நாள் : 11.9.1967; உள்துறை அரசாணை நிலை எண்.1609 நாள் : 2.8.1968; உள்துறை அரசாணை நிலை எண்.3148 நாள் : 27.12.1969; உள்துறை அரசாணை நிலை எண்.517 நாள் : 9.3.1970; தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை அரசாணை நிலை எண்.371 நாள் : 31.10.1986; தமிழ்வளர்ச்சி பண்பாட்டுத் துறை (த.வ.1-1) அரசாணை நிலை எண்.182 நாள் : 27.6.1989)

### ஆ. துறைத் தலைமை அலுவலகங்களில் ஆய்வு

துறைத் தலைமை அலுவலகங்கள், மாவட்ட ஆட்சியர் அலுவலகங்கள், மாநகராட்சிகள் ஆகியவற்றைத் தமிழ் வளர்ச்சி இயக்குநர் ஆய்வு செய்கிறார். தன்னாட்சி நிறுவனங்கள், வாரியங்கள், கழகங்கள், இணையங்கள் ஆகியவையும் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்திற்கு உட்படுத்தப்பட்டுள்ளன. இதனடிப்படையில் இவற்றின் துறைத் தலைமை அலுவலகங்களையும் தமிழ் வளர்ச்சி இயக்குநர் ஆய்வு செய்கிறார்.

## இ. மண்டல நிலை/மாவட்டநிலை/சார்நிலை அலுவலகங்களில் ஆய்வு

தமிழ் வளர்ச்சி இயக்குநரால் ஆய்வு செய்யப்பெறும் துறைத் தலைமை அலுவலகங்கள் நீங்கலாகத் தமிழகம் முழுவதும் உள்ள அனைத்துத் துறைகளின் மண்டல, மாவட்ட, சார்நிலை அலுவலகங்களை மண்டலத் தமிழ் வளர்ச்சித் துணை இயக்குநர்களும், மாவட்டங்களின் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்களும் ஆய்வு செய்கின்றனர். பின்வரும் இயலில் ஆய்வுப் பணி முறைகளைப் பற்றி விரிவாகக் காணலாம்.

## மொழிபெயர்ப்புப் பணிகள்

### அ. நடைமுறை நூல்கள், விதிகள்

ஆட்சிமொழித் திட்டத்தைச் செவ்வனே நிறைவேற்றுவதற்கு ஆங்கிலத்தில் இருந்த நிருவாகம் தொடர்பான விதிகள், விதித் தொகுப்புகள், நடைமுறை நூல்கள், படிவங்கள், பதிவேடுகள் ஆகியவற்றைத் தமிழில் மொழிபெயர்க்க வேண்டிய தேவை ஏற்பட்டது. ஆட்சிமொழிக்குழு அமைக்கப்பட்டபோது, மொழிபெயர்ப்புக் கெனத் தனி அலுவலர் ஒருவர் நியமிக்கப் பெற்று, அவரால் மட்டுமே மொழிபெயர்ப்புப் பணிகள் மேற்கொள்ளப்பட்டதை அறிந்தோம். பின்னர்த் தமிழ்நாடு முழுவதும் உள்ள அலுவலகங்கள் அனைத்தும் தமிழ் வளர்ச்சி இயக்ககத்தால் ஆய்வு செய்யப்பட்ட நிலையில் மொழி பெயர்த்து அளிக்கப்பட வேண்டிய இனங்கள் மிகுதியாக இருந்தமை கண்டறியப்பட்டது. எனவே மொழி பெயர்ப்புப் பணிக்கென்றே தமிழ் வளர்ச்சி இயக்ககத்தில் உதவி இயக்குநர் மூவர் அமர்த்தப் பெற்றனர். மொழி பெயர்ப்புப் பணியில் உதவிபுரிவதற்காகக் கூர்ந்தாய்வுக் கண்காணிப்பாளர்கள் அமர்த்தப் பெற்றனர். இது மட்டுமன்றிப் பல்வேறு துறைகளிலும் பணியாற்றி, மொழி பெயர்ப்பில் பட்டறிவு கொண்ட அலுவலர்களையும் மொழி பெயர்ப்பு வல்லுநர்களையும் தெரிந்தெடுத்துத் தமிழ் வளர்ச்சி இயக்ககத்தில் மொழிபெயர்ப்பாளர்கள் பட்டியல் ஒன்றும் பேணப்படுகிறது. நிலைமைக் கேற்ப இம்மொழி பெயர்ப்பாளர்களாலோ தமிழ் வளர்ச்சி இயக்ககக் கண்காணிப்பாளர்களாலோ மொழி பெயர்ப்புகள் செய்யப் பெறுகின்றன. இவ்வகையில் அனைத்துத் துறை அலுவலகங்களிலும் பயன்படுத்தப் பெறும் படிவங்கள், பதிவேடுகள், நடைமுறை நூல்கள், விதிகள், விதித் தொகுப்புகள் (சட்டங்கள், அரசாணைகள் நீங்கலாக) முதலியன தொடர்ந்து மொழி பெயர்த்து அளிக்கப்படுகின்றன.

## ஆ. ஆட்சிச் சொல்லகராதி-சிறப்புச் சொல் துணையகராதி

ஆட்சிமொழித் திட்டத்திற்குப் பயன்படக்கூடியவகையில் அரசு அலுவலகங்களில் மட்டுமே பயன்படுத்தக் கூடிய ஆங்கிலச் சொற்களுக்கு இணையாகத் தமிழ்ச் சொற்களைத் தொகுத்து அகராதி ஒன்றைத் தயாரித்து அளிப்பதென அரசு கருதியது. இச்சமயத்தில் திருநெல்வேலியைத் தலைமையிடமாகக் கொண்டு விளங்கிய சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் தலைவர் இ.மு. சுப்பிரமணியப் பிள்ளையின் முயற்சியால், அத்தமிழ்ச் சங்கம் ஆட்சிச் சொல்லகராதி ஒன்றினைத் தொகுத்துத் தமிழ்நாடு அரசிடம் வழங்கியது. இதுவே இன்றைய ஆட்சிச் சொல் அகராதிக்கு அடிப்படையாக அமைந்தது (இயல் 1 இல் விரிவாக விளக்கப்பட்டது) சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் தயாரித்தளித்த அகராதி 1957-ஆம் ஆண்டில் ஆட்சிமொழிக் குழுவின் தலைவராக விளங்கிய திரு.என்.வெங்கடேசுவரன்,இ.ஆ.ப., அவர்கள் தலைமையில் செப்பம் செய்யப் பெற்றது. இவ்வகராதியில் பல்வேறு துறைகளிலும் வழக்கிலுள்ள பொதுவான ஆங்கிலச் சொற்கள் அவற்றிற்குரிய தமிழாக்கங்களுடன் இடம் பெற்றன. (இணைப்பு 28 : 3.7.57ஆம் நாளிட்ட அரசு (பொது.எம்) துறை, நிலையாணை எண்.2057)

இவ்வாட்சிச் சொல்லகராதியின் முதற்பதிப்பு 1957ஆம் ஆண்டில் வெளியிடப் பெற்றது. இரண்டாம் பதிப்பு 1962 ஆம் ஆண்டிலும் மூன்றாம் பதிப்பு 1971ஆம் ஆண்டிலும், நான்காம் பதிப்பு 1983ஆம் ஆண்டிலும் வெளியிடப் பெற்றன. ஆட்சிச்சொல்லகராதியின் இன்றியமை யாமையைக் கருத்திற் கொண்டும் அரசின் தன்னாட்சி நிறுவனங்களிலும் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் விரிவு படுத்தப்பட்டமையாலும் ஆட்சிச் சொல்லகராதியின் நான்காம் பதிப்பின் மறுபதிப்பு சற்றொப்ப 9000 ஆட்சிச் சொற்களுடன் 1990ஆம் ஆண்டிலும், இதன் கையடக்கப் பதிப்பு 1993ஆம் ஆண்டிலும், இதன் இணைப்பகராதி 1997ஆம் ஆண்டிலும் வெளியிடப் பெற்றன.

ஆட்சிச் சொல்லகராதி மட்டுமன்றித் துறைதோறும் பயன்படுத்தப் படும் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களைத் தொகுத்துச் சிறப்புச் சொல் துணையகராதிகளும் தயாரிக்கப் பெற்றுத் துறைதோறும் வழங்கப் பெறுகின்றன. இவ்வகராதியில் இடம் பெறும், சொற்களும் அவற்றின் மொழிபெயர்ப்பும், அவ்வத்துறை சார்ந்த அலுவலர்களுடன் கலந்தாய்ந்து முடிவு செய்து அச்சிட்டு வழங்கப் பெறுகின்றன. இவ்வகராதிகள் தேவைக்கேற்பப் புதுக்கியும், புதிய சொற்கள் சேர்க்கப்பட்டும் வெளியிடப்படுகின்றன.

## பயிற்சி

அரசுப் பணியில் உள்ள தட்டச்சர்கள், இளநிலை உதவியாளர்கள், உதவியாளர்கள், கண்காணிப்பாளர்கள் ஆகியோருக்குத் தமிழில் வரைவுகள் குறிப்புகளை எழுதுவதற்குப் பயிற்சி அளிக்க வேண்டும் என ஆட்சிமொழிக்குழு கருதியது. அதன் காரணமாகத் தமிழ் நாட்டில் உள்ள அரசுப் பணியாளர்களுக்குப் பயிற்சி வகுப்புகள் நடத்தப் பெற்றன. இப்பயிற்சி வகுப்புகள் தலைமைச் செயலகப் பணியாளர்களுக்கும் நடத்தப் பெற்றன.

பொதுவாக அரசுத் துறைகள் அனைத்திலும் இருவகையாகப் பணிகள்மேற்கொள்ளப் பெறுகின்றன. அவை நிருவாகப் பணிகள், துறையின் திட்டப் பணிகள் என்பனவாகும். நிருவாகப் பணிகள் அனைத்துத் துறைகளுக்கும் பொதுவானவை. திட்டப் பணிகள் துறைக்குத் துறை வேறுபடுவதால் சில துறைகள் தமது பணியாளர்/ அலுவலர்களுக்கெனப் பயிற்சி மையங்களை அமைத்தன. இத்தகைய பயிற்சி மையங்கள் ஊரக வளர்ச்சித் துறை, காவல் துறை, வனத் துறை, மீன் துறை, கருவூலக் கணக்குத் துறை, பொதுப் பணித்துறை, கூட்டுறவுத் துறை, பதிவுத்துறை போன்றவற்றில் அமைக்கப்பட்டுள்ளன.

அவ்வத் துறைப் பணியாளர்களுக்கு அளிக்கும் பயிற்சியில் தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயற்பாடு பற்றிய பயிற்சினையும் அளிக்க இவ்வியக்ககம் கருதியதால் அத்துறைகளுடனும், பயிற்சி அளிக்கக் கோரும் பிற துறைகளுடனும் தொடர்பு கொண்டு தமிழ்த் திட்டப் பயிற்சியினை அளித்து வருகிறது. அன்றியும் பவானிசாகரிலுள்ள அரசுப் பணியாளர் பயிற்சி மையத்தில் பயிற்சி பெறும் அரசுப் பணியாளர் களுக்கும் ஆட்சி மொழித் திட்டம் பற்றிய வகுப்பு இன்றளவும் நடத்தப் பெற்றுவருகிறது.

தமிழ்நாட்டிற்கென நியமிக்கப் பெறும் இந்திய ஆட்சிப் பணிஅலுவர்களுக்கும், இந்தியக் காவல் பணி அலுவலர்களுக்கும் கோட்டாட்சித் தலைவர் / கோட்டத் துணைக் காவல் கண்காணிப்பாளர், சார் ஆட்சியர் ஆகியோர்க்கும் அவர்களின் பணிக்காலத்தின்போதே பல்வேறு துறைகளில் பணியிடைப் பயிற்சியும் அளிக்கப் பெறுகிறது. (இணைப்பு 29 : 26.8.68ஆம் நாளிட்ட அரசு பொதுத் (தனி) துறை அரசாணை நிலை எண்.1731) இவற்றுடன் தஞ்சாவூர்த் தமிழ்ப் பல்கலைக் கழகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஆகியவற்றிலும் ஆட்சிமொழித் திட்டப் பயிற்சியும் அளிக்கப் பெறுகின்றது. தமிழ் வளர்ச்சித் துறையின் இயக்குநர் அவர்களால், இளநிலை இந்திய ஆட்சிப் பணி அலுவலர் களுக்கும், இந்தியக் காவல்பணி அலுவலர்களுக்கும் ஆட்சிமொழித் திட்டப் பயிற்சி அளிக்கப் பெறுகிறது. இப்பயிற்சி வகுப்பில் ஆட்சிமொழித் திட்ட வரலாறு, செயற்பாடு, ஆய்வு, அஞ்சல்கள் மீது

ஆணைகள், குறிப்புகள் ஆகியவற்றைத் தமிழில் எழுதுதல் போன்றவை குறித்து விளக்கங்கள் அளிக்கப் பெறுகின்றன. (இணைப்பு 30 : 22.1.1974ஆம் நாளிட்ட கல்வி (தமிழ்)த் துறை அரசு நிலை ஆணை எண்.110)

இந்திய ஆட்சிப் பணிஅலுவலர்களாகத் தமிழ் நாட்டிற்கு நியமனம் செய்யப்பெறும் அலுவர்கள் தமது தகுதிகாண் பருவ காலத்திற்குள்ளாக, தமிழ்நாடு அரசுத் தேர்வாணையம் நடத்தும் இரண்டாம் மொழித் தேர்வில் (10ஆம் வகுப்புப் பாடத்திட்டம்) தேர்ச்சி பெற வேண்டும். எனவே, தமிழ் நாட்டில் பணியாற்றும் இந்திய ஆட்சிப் பணி அலுவர்கள் அனைவரும் ஆட்சிமொழியாகிய தமிழை நன்கறிந்திருக்க வேண்டியவர்கள் என்பது உறுதி. (இணைப்பு 31 : 17.11.67ஆம் நாளிட்ட அரசு பொதுத் (சிறப்பு)துறை நிலையாணை எண்.2422)

## மூவாண்டு முனைப்புத் திட்டம்

ஆட்சிமொழித் திட்ட நிறைவேற்ற நிலை குறித்து அரசு அலுவலகங்களில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளில் ஆட்சிமொழித் திட்டம் எதிர் பார்த்த அளவு நிறைவேறவில்லை என்பதறியப்பட்டது. இந்நிலையைப் போக்கவும், அரசு அலுவலகங்களில் ஆட்சிமொழித் திட்டம் செம்மையாகவும் முழுமையாகவும் நிறைவேற்றப்படவும் மூவாண்டு முனைப்புத் திட்டம் ஒன்று 1981ஆம் ஆண்டில் வகுக்கப் பெற்றது. அதன்படி முதல் இரண்டு ஆண்டுகளில் அரசுத் துறைத் தலைமை அலுவலகங்கள் அனைத்திலும் தமிழ்த் திட்டச் செயற்பாட்டை முழுவதுமாக நடைமுறைப்படுத்துவது என்றும், மூன்றாவது ஆண்டில் அரசுச் செயலகத்துறைகள் வாரியங்கள், கழகங்கள், இணையங்கள், மாநகராட்சிகள்போன்ற தன்னாட்சி நிறுவனங்கள் அனைத்திலும் நடைமுறைப்படுத்துவது என்றும் முடிவு செய்யப்பெற்றது.

முதலாண்டில் 17 துறைகள் தேர்ந்தெடுக்கப்பெற்றன. அத்துறைகளில் ஆட்சிமொழித் திட்டத்தை முழுமையான அளவில் குறிப்பிட்ட கால வரையறைக்குள் அதாவது ஓராண்டுக் காலத்தில் செயற்படுத்தவும், அத்திட்டம் செயற்படும் முறையின் அடிப்படையில் எஞ்சியுள்ள மற்ற துறைகளுக்கும் அத்திட்டத்தினை நீட்டிக்கவும் கருதப் பெற்றது. அவ்வாறே இரண்டாம் ஆண்டில் எஞ்சிய துறைகள் அனைத்திலும் இத்திட்டம் நடைமுறைப்படுத்தப் பட்டது. (இணைப்பு 32 : 10.3.81ஆம் நாளிட்ட அரசு கல்வித் துறை, நிலையாணை எண்.432; இணைப்பு 33 : 21.5.82 ஆம் நாளிட்ட அரசு கல்வி, அறிவியல் தொழிநுட்பவியல் துறை, நிலையாணை எண்.968)

இதனைத் தொடர்ந்து அலுவலகங்களில் இருக்க வேண்டிய தமிழ், ஆங்கிலத் தட்டச்சுகளின் விழுக்காட்டை வரையறை செய்தும் ஆணைகள் வெளியிடப் பெற்றன.

## தட்டச்சு வரையறை

ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தின் ஆணிவேராகக் கருதப் படுபவை தமிழ்த் தட்டச்சுகளே. தமிழ்த் தட்டச்சுகள் உருவாக்கப் பெற்ற காலத்தில் அரசுத் துறைகளுக்குத் தமிழ்த் தட்டச்சுகள் வழங்கப் பட்டன. எனினும், ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தில் தேவைப்படுகின்ற அளவிற்குத் தட்டச்சுகள் அரசு அலுவலகங்களில் இல்லை. எனவே மூவாண்டு முனைப்புத் திட்டம் துவங்கிய நாளிலிருந்து ஒரு திங்கள் கால அளவிற்குள் துறைத் தலைவர்கள் தங்கள் அலுவலகத்திற்குத் தேவைப்படும் தமிழ்த் தட்டச்சுகளின் எண்ணிக்கையை அரசுக்குத் தெரிவிக்க வேண்டும் என்றும், இதன் தொடர்பில் அரசின் ஒப்பளிப்பு கிடைத்த மூன்று திங்கள் காலத்திற்குள் எழுதுபொருள் அச்சுத் துறை இயக்குநர்,தமிழ்த் தட்டச்சுகளை அத்துறைத் தலைமை அலுவலகங் களுக்கு வழங்க வேண்டும் என்றும் ஆணையிடப் பெற்றது.

1) அரசுத் துறைத்தலைமை அலுவலகங்கள், ஒவ்வொன்றி லும் உள்ள மொத்தத் தட்டச்சுகளில் தமிழ்த் தட்டச்சுகளின் எண்ணிக்கை 75 விழுக்காடு அளவில் இருக்க வேண்டும்.

2) சார்நிலை அலுவலகங்களில் 100 விழுக்காடு அளவில் தமிழ்த் தட்டச்சுகள் மட்டுமே இருக்க வேண்டும்.

என அரசு ஆணையிட்டது. (இணைப்பு 33 : அரசுக் கல்வி அறிவியல் தொழில்நுட்பவியல் துறை நிலையாணை எண்.968, நாள் 21.5.82, இணைப்பு 34 : தமிழ் வளர்ச்சி- பண்பாட்டுத் துறை அரசாணை நிலை எண்.9,நாள் 9.1.86)

பின்னர் மூவாண்டு முனைப்புத் திட்டத்தின் மூன்றாம் ஆண்டில் தலைமைச் செயலகத் துறைகள், அரசேற்பு நிறுவனங்கள் (வாரியங்கள், கழகங்கள், இணையங்கள்) ஆகியவற்றில் தமிழ்த் திட்டச் செயலாக் கத்தை விரிவுபடுத்தி அரசு ஆணையிட்டபோது அவற்றின் பணிகளின் தனித்தன்மையைக் கருதி 50 விழுக்காடு அளவு தமிழ்த் தட்டச்சுகள் வைத்திருக்க வேண்டுமென அரசு ஆணையிட்டது. (இணைப்பு 35 . 13.1.88ஆம் நாளிட்ட அரசு தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை. நிலையாணை எண்.9, இணைப்பு 26 : 31.10.86ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை, அரசாணை நிலை எண்.371)

பின்னர் அரசுத் தலைமைச் செயலகத்துறைகளில் இத்திட்டத்தை முழுமையாகச் செயற்படுத்தும் நோக்கில் ஒவ்வொரு துறையிலும் 65 விழுக்காடு அளவிற்குத் தமிழ்த் தட்டச்சுகள் இருக்க வெண்டுமென அரசு ஆணையிட்டது. (இணைப்பு 36 : தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் (தவ1-1) துறை, நிலை ஆணை எண். 49, நாள் 7.2.96)

## தமிழில் ஒப்பமிடல்

அரசு அலுவலர்கள், பணியாளர்கள் அனைவரும் தமிழிலேயே அனைத்திலும் ஒப்பமிட வேண்டும் என அரசு ஆணையிட்டுள் ளது.(இணைப்பு 37 : 21.6.78ஆம் நாளிட்ட அரசு கல்வித் (தவ) துறை, நிலையாணை எண்.1134) மேலும் பெயர்களின் முன்னால் இடம்பெறும் தலைப்பெழுத்துகளும் (Initials) தமிழிலேயே எழுதப்பட வேண்டும் எனவும், இம்முறையை அரசுத் துறைகளால் வெளியிடப்படும் விளம்பரங்கள், ஒப்பந்தங்கள் முதலியவற்றிலும் பின்பற்ற வேண்டும் எனவும் அரசு ஆணையிட்டுள்ளது. (இணைப்பு 37(அ), 38).

## பதிவேடுகள் பேணுகை

ஆட்சிமொழித் திட்ட விதிமுறைகளின்படிப் பதிவேடுகள் அனைத்தும் தமிழிலேயே பேணப்பட வேண்டும். அலுவலகங்களுக்குத் தேவையான பதிவேடுகள், படிவங்கள் ஆகியவற்றைத் தமிழில் தான் அச்சிட்டு அளிக்க வேண்டுமெனவும், ஆங்கிலத்தில் (எழுது பொருள் அச்சுத்துறை) அச்சிடப்பட வேண்டிய இன்றியமையாமை இருப்பின் தமிழ் வளர்ச்சி இயக்குநரின் இசைவினைப் பெற்றே அச்சிட வேண்டும் எனவும் அரசு ஆணையிட்டுள்ளது.(இணைப்பு 39 : கல்வித் துறை, குறிப்பாணை எண்.60999/தவ1/73-5 நாள் 17.10.73; இணைப்பு 40 : கல்வித் துறை அரசாணை நிலை எண் 2618, நாள் 30.11.81). மேலும் பணிப்பதிவேடுகளில் பதிவு செய்யப்பட வேண்டிய (நியமனம், ஊதிய உயர்வு, ஈட்டிய விடுப்பு, பயணச் சலுகை விடுப்பு, மருத்துவ விடுப்பு, சம்பளமில்லா விடுப்பு போன்றவை) பணியாளர் தொடர்பிலான அனைத்து விவரங்களும் பணிப்பதிவேடுகளில் பதியப் பெறுவதால் அனைத்து விவரங்களையும் தமிழில் தான் பதிய வேண்டும் எனவும் அரசு ஆணையிட்டுள்ளது. (இணைப்பு 41 : 28.6.71ஆம் நாளிட்ட அரசு பொதுத்துறை, நிலையாணை எண்.1993)

## கடிதப்போக்குவரத்து

விதிவிலக்கு அளிக்கப்பட்ட இனங்கள் தவிரப் பிற அனைத்திலும் கடிதப் போக்குவரத்துகள் தமிழிலேயே அமைதல் வேண்டும். ஆங்கில வரைவுகள் எழுதப்பட வேண்டிய நேர்வில், அவ்வரைவுகள் விதிவிலக்கு இனத்திற்கு உட்பட்டவையா என்பதை ஆய்ந்து பிரிவுத் தலைவர் / அலுவலர் அனுமதித்த பின்னரே அவற்றை எழுதுதல் வேண்டும் எனவும் அரசு ஆணையிட்டுள்ளது. (இணைப்பு 32 : 10.3.81 நாளிட்ட அரசு கல்வித்துறை நிலை எண். 432; இணைப்பு 26 : 31.10.86ஆம் நாளிட்ட அரசு தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை, நிலை ஆணை எண். 371)

## அலுவலக நடைமுறையில் திருவள்ளுவராண்டினைக் குறிப்பிடல்

கோவை மாவட்டம் பேரூரில் 3.5.1980ஆம் நாளன்று கூடிய தமிழகப் புலவர் குழு திருவள்ளுவர் ஆண்டையும், தமிழ்த் திங்களையும், நாள் குறியீடாக அரசு அலுவல்களின் நடைமுறைகளிற் கொள்ளுமாறு ஒரு மனதாகத் தீர்மானம் இயற்றி அதன்மீது நடவடிக்கை எடுக்குமாறு தமிழக அரசைக் கேட்டுக் கொண்டது. அரசு இக்கருத்தினை நன்கு ஆய்ந்ததுடன் நடுவணரசு வெளியிடும் கடிதங்களில் கிறித்தவ ஆண்டுக்கு நேரான தேவநாகரி ஆண்டு திங்கள், நாள் ஆகியவற்றைப் பயன்படுத்துவதையும் அறிந்தது. எனவே அரசு அனைத்து அலுவலகங் களிலும் ஆணைகள், கடிதங்கள், செய்தி மற்றும் ஏனைய வெளியீடுகள் முதலியவற்றில் கிறித்தவ ஆண்டுடன் தமிழ் ஆண்டு, திங்கள், நாள் மற்றும் திருவள்ளுவர் ஆண்டையும் பயன்படுத்த வேண்டுமென ஆணையிட்டது. துறைத்தலைமை அலுவலர்களிடம் தமது சார்நிலை அலுவலகங்கள் அனைத்தும் இவ்வாணையைப் பின்பற்றும்படி வலியுறுத்துமாறும் வேண்டப்பெற்றது. (இணைப்பு 42 : 3.2.81ஆம் நாளிட்ட பணியாளர் மற்றும் நிருவாகச் சீர்திருத்தத்(பணி-எ)துறை, அரசாணை நிலை எண்.91).

## அலுவலக முத்திரைகள்

ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தின்படி அலுவலகங்களில் பயன்படுத்தப்பெறும் முத்திரைகள் அனைத்தும் தமிழில் அமைதல் வேண்டும். பட்டிகளிலும், பதிவேடுகளிலும், படிவங்களிலும் சில நேர்வுகளில் பெயர் முத்திரைகளையும் பதிக்க வேண்டியது அன்றாட அரசுஅலுவல்களில் ஒன்றாகும். எழுதுபொருள் அச்சுத்துறை வழங்கும் இவ்வலுவலக முத்திரைகளில் துறைகளின் பெயர்கள் தமிழில் இருப்பினும் திங்களின் பெயர் மட்டும் ஆங்கிலத்தில் பொறிக்கப்பட்டு வந்தது. (எ.கா : 7 Aug. 1977) எனவே திங்களின் பெயரையும் தமிழிலேயே பொறித்து வழங்குமாறு எழுதுபொருள் அச்சுத் துறைக்கு ஆணையிடப் பெற்றது. (இணைப்பு 43 : 27.3.1973ஆம் நாளிட்ட போக்குவரத்துத் துறை, அரசாணை நிலை எண். 175)

## எழுத்துச் சீர்திருத்தம்

உலகின் தொன்மையான மொழிகளுள் ஒன்றாக விளங்குவதும் உயர்தனிச் செம்மொழியும் ஆகிய நம் தமிழ்மொழி சீரிய எழுத்துகளைப் பெற்றிருக்கிறது. உலகமே போற்றும் வகையில் ஒலி நுட்பங்களை ஆய்ந்துரைத்த தொல்காப்பியரையும் உலகுக்கு நல்கியுள்ளது. தமிழில் இன்று நாம் பயன்படுத்துகின்ற இவ்வரி வடிவங்களின் பல அமைப்பு (பிறமொழியாளரான) இத்தாலி நாட்டவரான வீரமாமுனிவர் அவர்களின் அருமுயற்சியின் விளைவாக உருவானதாகும்.

வீரமாமுனிவர் வழியில், தந்தை பெரியார் ஈ.வெ.ரா. அவர்கள் செய்துள்ள எழுத்துச் சீரமைப்பு மேலும் ஒருபடி உயர்ந்ததாகும். ஒட்டிக்கொண்டிருந்த எழுத்துகளைப் பிரித்து எழுத வகை செய்தார் தந்தை பெரியார். புதிய வரிவடிவங்களைப் புகுத்தாமல் நடைமுறையிலுள்ள வரிவடிவங்களைக் கொண்டே பெரியார் அவர்களின் எழுத்துச் சீரமைப்பு அமைந்துள்ளமை பெரும் சிறப்புக்குரியதாகும். பெரியாரின் அத்தகைய எழுத்துச் சீரமைப்பை தமிழ்நாடு அரசு ஏற்று நடைமுறைப் படுத்தும் வகையில் பெரியார் அவர்களின் நூற்றாண்டு விழாவின்போது ஆணையிட்டது.

சீர்திருத்தி அமைக்கப்பட்ட எழுத்துகள் வருமாறு :

| | | |
|---|---|---|
| ஐ | - | அய் |
| ஔ | - | அவ் |
| ௌ | - | ணா |
| ரு | - | றா |
| ௌ | - | னா |
| ணை | - | ணை |
| லை | - | லை |
| ளை | - | ளை |
| னை | - | னை |
| ெணா | - | ணொ |
| ேணா | - | ணோ |
| ெறா | - | றொ |
| ேறா | - | றோ |
| ெனா | - | னொ |
| ேனா | - | னோ |

(இணைப்பு 44 : 19.10.78ஆம் நாளிட்ட கல்வித் துறை, நிலையாணை எண். 1875) பின்னர் மேற்குறிப்பிடப்பெற்ற வரிவடிவங்களில் இடம் பெற்றுள்ள அய், அவ் - என்பனவற்றை ஐ, ஔ என்ற பழைய வடிவிலேயே பயன்படுத்த வேண்டும் என அரசு ஆணையிட்டுள்ளது. இதன்படி மேற்குறிப்பிடப்பெற்றுள்ள எழுத்து களில் ஐ, ஔ நீங்கலாக மற்றவை அனைத்தும் சீர்திருத்த எழுத்துக ளாகும். (இணைப்பு 45 : 23.5.79ஆம் நாளிட்ட அரச கல்வி (தவ) துறைக் குறிப்பாணை எண். 4704/த1/79-2) சீரமைக்கப்பெற்ற எழுத்து வடிவங்களைக் கொண்ட அச்சும் தட்டச்சும் சிறந்த வகையில், கருதும் பயனை அளிப்பனவாகும். இச்சீர்திருத்த எழுத்துகளே அனைத்து நடைமுறைகளிலும் பின்பற்றப்படுதல் வேண்டும்.

## ஆட்சிமொழித் திட்டத்தை நடைமுறைப்படுத்தாத அலுவலர்கள் மீது நடவடிக்கை எடுத்தல்

தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தைச் சரியாக நடைமுறைப்படுத்தாத அலுவலர்கள் மீது எந்தெந்த முறைகளில் ஒழுங்குமுறை நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம் என்பது பற்றித் தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கருத்துரை அரசால் வேண்டப் பெற்றது. ''தமிழ்நாடு குடிமுறைப் பணியாளர் (வகைப்பாடு, கட்டுப்பாடு, மேல்முறையீடு) விதிகளின் கீழ்த் தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தைச் சரிவர நிறைவேற்றாத அலுவலர்கள் / பணியாளர்கள் மீது நடவடிக்கை எடுக்க அரசாணை வெளியிடலாம்'' எனத் தமிழ் வளர்ச்சி இயக்குநர் அவர்களால் பரிந்துரைக்கப் பெற்றது. இதனடிப்படையில் ஆட்சிமொழித் திட்டத்தைச் சரியாக நிறைவேற்றாத சார்நிலை அலுவலர்கள் மீது நடவடிக்கை மேற்கொள்ளுமாறு துறைத்தலைவர்களுக்கும், துறைத் தலைவர்கள் ஆட்சிமொழித் திட்டத்தைச் சரியாக நிறைவேற்றவில்லையெனில் அவர்கள் மீது உரிய நடவடிக்கை மேற்கொள்ளத் தொடர்புடைய அரசுச் செயலாளருக்கும் தமிழ் வளர்ச்சி இயக்குநர் பரிந்துரைக்க வேண்டும் எனவும் ஆணையிடப்பெற்றது. (இணைப்பு 46 : 6.1.82ஆம் நாளிட்ட அரசு கல்வித்துறை, நிலையாணை எண். 24).

## ஆட்சிமொழிக் கருத்தரங்குகள்

ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தில் ஏற்படும் இடர்ப்பாடுகளைக் களைவதற்காக மாவட்டந்தோறும் ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் நடத்தப் பெற்று வருகின்றன. இக்கருத்தரங்குகளில் அந்தந்த மாவட்டங்களில் உள்ள அனைத்து அரசுத்துறைகளின் மாவட்ட, மண்டல நிலை அலுவலர்கள், அரசுப் பணியாளர்கள், தன்னாட்சி நிறுவனங்களின் அலுவலர்கள், பணியாளர்கள் ஆகியோர் கலந்து கொள்கின்றனர். மாண்புமிகு அமைச்சர்களும், பல்துறை வல்லுநர்களும் அந்தந்த ஊரில் உள்ள தமிழறிஞர்களும் பங்கு பெற்றுப் பல கருத்துகளைக் கூறுகிறார்கள். பொதுமக்களும் கலந்து கொள்கின்றனர். இதனால் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்திற்கு ஆக்கமும், ஊக்கமும் கிடைக்கிறது.

11.1.1984 ஆம் நாளிட்ட கல்வி, அறிவியல் மற்றும் தொழில்நுட்பவியல் துறை, அரசாணை நிலை எண். 34-இன்படிக் கோயம்புத்தூரில் முதல் கட்டமாக ஆட்சிமொழிக் கருத்தரங்கம் 1984ஆம் ஆண்டில் நடைபெற்றது (இணைப்பு 46(அ)). ஒவ்வோர் ஆண்டிலும் சில மாவட்டங்களில் ஆட்சிமொழிக் கருத்தரங்கம் நடத்தப் பெற்று வருகிறது.

1996க்குப் பின்னர் 1999 மார்ச்சு வரைப் பின்வரும் மாவட்டங்களில் ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் நடத்தப் பெற்றுள்ளன.

| | | |
|---|---|---|
| 1. கன்னியாகுமரி | 9. சேலம் | 17. வேலூர் |
| 2. திருநெல்வேலி | 10. தஞ்சாவூர் | 18. திருவண்ணாமலை |
| 3. தூத்துக்குடி | 11. விழுப்புரம் | 19. திருவாரூர் |
| 4. விருதுநகர் | 12. திருச்சிராப்பள்ளி | 20. இராமநாதபுரம் |
| 5. சிவகங்கை | 13. சென்னை | 21. திண்டுக்கல் |
| 6. மதுரை | 14. காஞ்சிபுரம் | 22. கரூர் |
| 7. கோயம்புத்தூர் | 15. புதுக்கோட்டை | 23. நாகப்பட்டினம் |
| 8. ஈரோடு | 16. தருமபுரி | |

## நிலவியல் பெயர்கள்

தமிழ்நாட்டில் அந்நியர் படையெடுப்புகளாலும் பிறமொழி ஊடுருவல் காரணமாகவும் தமிழில் பிறமொழிச் சொற்கள் கலக்க நேரிட்டது. இதன் விளைவாக வட்டார மொழிகள் சிதைந்தன. நிலவியல் பெயர்கள் (Geographical Names) பல உருக்குலைந்தன. அவற்றைத் திருத்தியமைக்கும் வகையில் சரியான தமிழ் எழுத்துக் கூட்டலை வழங்கும் பணி தமிழ் வளர்ச்சித் துறையைச் சார்ந்து அமைந்துள்ளது. அஞ்சல் நிலையங்கள், இருப்பூர்தி நிலையங்கள் ஆகியவற்றின் பெயர்களுக்குரிய எழுத்துக்கூட்டல்கள் இவ்வியக்ககத்தால் அளிக்கப் பெற்று வருகின்றன.

ஓர் ஊரின் பெயர் சரியான எழுத்துக் கூட்டல்களால் அமைவதன் பொருட்டு, தொடர்புடைய மாவட்ட ஆட்சியாளரிடம் வருவாய்ப் பதிவேடுகளிலுள்ள அவ்வூரின் பெயர், அவ்வூருக்கு அப்பெயர் ஏற்பட்டதற்கான காரணம், வரலாற்றுச் சான்று போன்றவை கேட்டறியப் பெறுகின்றன. பெறப்படும் விவரங்களின் அடிப்படையில் சரியான தமிழ் எழுத்துக்கூட்டல்கள் பெங்களூரிலுள்ள நிலவியல் துறைக்கு அனுப்பப்பட்டு அவர்களிடமிருந்து சரியான ஆங்கில எழுத்துக் கூட்டல்கள் பெறப்படுகின்றன. பின்னரே அவை உரியவர்களுக்குத் தெரிவிக்கப்படுகின்றன.

நிலவியல் பெயர்கள் தொடர்பில் ''மாநிலப் பெயர்கள் ஆணைக்குழு'' ஒன்று அமைக்கப்பட்டது. 1972ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்ற கிராமங்களின் அகரவரிசைப்பட்டியலைத் திருத்தி இப்போதுள்ள மாவட்டங்களுக்கு ஏற்ப உரியவாறு அமைத்து வெளியிட இக்குழுவால் தொடர்ந்து கலந்தாய்வுகள் மேற்கொள்ளப் பெற்று வருகின்றன. எனவே தவறான பல ஊர்ப்பெயர்களை நல்ல தமிழில் காணும் நாள் வெகு தொலைவில் இல்லை எனலாம்.

தமிழ் வளர்ச்சித் துறையால் திருத்தி அமைக்கப்பட்ட சில **ஊர்களின்** பெயர்கள் :

| | | | |
|---|---|---|---|
| 1. | Tiruchiropoly | திருச்சிராப்பள்ளி | Thiruchirappalli |
| 2. | Tanjore | தஞ்சாவூர் | Thanjavur |
| 3. | Portonova | பரங்கிப்பேட்டை | Parangippettai |
| 4. | Chenglepet | செங்கற்பட்டு | Chengalpattu |
| 5. | Mahabalipuram | மாமல்லபுரம் | Mamallapuram |
| 6. | Point Calimera | கோடிக்கரை | Kodikarai |
| 7. | Coleroon | கொள்ளிடம் | Kollidam |
| 8. | Tranqubar | தரங்கம்பாடி | Tharangambadi |
| 9. | Thinnanur | திருநின்றவூர் | Thiruninravur |
| 10 | Kallar | கல்லாறு | Kallaru |
| 11. | Adyar | அடையாறு | Adaiyaru |
| 12 | Triplicane | திருவல்லிக்கேணி | Thiruvallikeni |

## அலுவலகப் பெயர்ப் பலகைகளில் தமிழ்

அரசின் துறைத்தலைமை அலவலகங்கள், மாவட்ட நிலை அலுவலகங்கள் ஆகியவற்றின் பெயர்ப்பலகைகள் தமிழிலும், ஆங்கிலத்திலும் வைக்கப்பட வேண்டும் எனவும், எழுத்துகளின் அளவு முறையே 5:3 என்ற வீதத்தில் அமைய வேண்டுமெனவும், இவ்வலுவலகங்களைத் தவிர பிற அலுவலகங்களில் (சார்நிலை) பெயர்ப் பலகைகள் தமிழில் மட்டுமே அமைவது போதுமானதெனவும் அரசு ஆணையிட்டுள்ளது. (இணைப்பு 47 : ஆட்சிமொழிக் குழுச் செயலாளரின் சுற்றறிக்கை எண். 5131/67, நாள் 19.9.67; (இணைப்பு 48 : தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை. அரசாணை நிலை எண்.349, நாள் 14.10.87)

## சாலைகள், தெருக்கள் ஆகியவற்றின் பெயர்களைத் தமிழில் எழுதுதல்

ஊரக வளர்ச்சி - உள்ளாட்சித் துறையானது சாலைகள்/தெருக்கள் பெயர்களைத் தமிழாக்கம் செய்யும்போதும் சாலைகளுக்குப் புதிய தமிழ்ப் பெயர்கள் சூட்டும்போதும் தேவைஏற்பட்டால் தமிழ் வளர்ச்சி

இயக்குநர் அவர்களின் கருத்தைப் பெற்றுப் பிறகு முடிவு செய்யுமாறு உள்ளாட்சிகள் அனைத்திற்கும் ஆணையொன்றைப் பிறப்பித்தது.

இவ்வாணையில் 'தேவை ஏற்பட்டால்' எனக் குறிப்பிட்டுள்ள தால் உள்ளாட்சி அமைப்புகள் தமிழ் வளர்ச்சித் துறையின் கருத்தைப் பெறும் வாய்ப்பமையாது எனத் தமிழ் வளர்ச்சி இயக்குநர் கருதியதால் அவற்றை நீக்குமாறு வேண்டப் பெற்றது.

அரசு, தமிழ் வளர்ச்சித்துறையின் பரிந்துரையை ஏற்றுச் சாலைகள்/ தெருக்கள் பெயர்களைத் தமிழாக்கம் செய்யும்போதும், புதுப்பெயர் சூட்டும்போதும் தமிழ் வளர்ச்சி இயக்குநர் அவர்களின் கருத்துரையைப் பெறுமாறு அனைத்து ஊராட்சிகள், பேரூராட்சிகள், நகராட்சிகளுக்குத் தெரிவிக்க வேண்டுமென ஊரக வளர்ச்சித் துறை இயக்குநர், பேரூராட்சிகள் இயக்குநர், நகராட்சிகள் நிருவாக இயக்குநர் ஆகியோருக்கு ஆணையிட்டுள்ளது. அவ்வாறே மாநகராட்சிகளும் தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கருத்தைப் பெற வேண்டும் என்றும் அவ்வாணையில் குறிப்பிடப் பெற்றுள்ளது. (இணைப்பு 49 : 29.1.82 ஆம் நாளிட்ட அரசு ஊரக வளர்ச்சி உள்ளாட்சித்துறை, நிலையாணை எண்.117)

## தமிழில் தொலைவரிச் செய்தி அனுப்புதல்

இப்போது தமிழில் தொலைவரிச் செய்தி (தந்தி) அனுப்பும்முறை நடைமுறையில் இருந்து வருகிறது. இதற்கு வாய்ப்புள்ள இடங்களில் தலைமைச் செயலகத்தின் அனைத்து நிருவாகத்துறைகள் மற்றும் அத்துறைகளின் கீழ் இயங்கும் துறைத்தலைமை அலுவலகங்கள் அரசின் பிற அலுவலகங்கள் அனைத்தும் தமிழிலேயே தொலைவரிச் செய்திகளை அனுப்புதல் வேண்டும் என அரசு ஆணையிட்டுள்ளது. (இணைப்பு 50 : தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் (தவ1-2) துறை, அரசாணை நிலை எண்.161, நாள் 12.8.96)

## ஊர்திகளில் தமிழ்

தாங்கள் பயன்படுத்தும் ஊர்திகளில் எழுத்தையும், எண்களையும் தமிழில் எழுதவேண்டுமென்று பலர் விரும்பினர். பலர் எழுதியும் வைத்துள்ளனர்; எனினும் சட்டப்படியான ஆணை வேண்டுமென்று எதிர்பார்த்தனர். அதன்படித் தமிழக அரசு வெளியிட்ட ஆணையின் விவரம் வருமாறு:

ஆணை எண்.11, உள்(போக்குவரத்து)துறை, நாள் 5.1.1998

**ஆணை :**

மோட்டார் வாகனங்களில் காணப்படும் பதிவெண் பலகையில் தற்போது ஆங்கில எழுத்துகள் மட்டுமே பயன்படுத்தப்பட்டு

வருகின்றன. பதிவு எண் பலகைகளைத் தமிழிலும் எழுதுவது தொடர்பாகப் போக்குவரத்து ஆணையரின் குறிப்புரை கோரப்பட்டது. அவரது கருத்துரு அரசால் கவனமாகப் பரிசீலிக்கப்பட்டு, ஏற்கப்பட்டு மேற்கூறிய கருத்துருவைச் செயற்படுத்துவது என முடிவெடுக்கப்பட்டது. எனவே, இதைச் செயற்படுத்த ஏதுவாகக் கீழ்கண்ட அறிவிக்கை தமிழ்நாடு அரசிதழில் வெளியிடப்படுகிறது.

## அறிவிக்கை

1988ஆம் வருடத்திய மத்திய மோட்டார் வாகனச் சட்டம், பிரிவு 41, உட்பிரிவு (6) இன்கீழ் வெளியிடப்பட்டுள்ள மத்திய அரசின் அறிவிப்பு எண்.எஸ்ஓ.444(இ)-யின்படியும், அதன் தொடர்பாக வெளியிடப்பட்ட திருத்தம் எஸ்.ஒ.827 (இ), நாள் 11.11.1992இன் படியும் வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களைக் கொண்டு தமிழக ஆளுநர் அவர்கள், மோட்டார் வாகனங்களில் பொருத்தப்படுகின்ற, ஆங்கில எழுத்துகளுடன் அடங்கிய வாகனப் பதிவு எண்கள் பலகையுடன், கூடுதலாகத் தமிழ் மொழியிலும், வாகன உரிமையாளர்கள் விரும்பினால், ஒரு பலகையில் எழுதிப் பொருத்திக் கொள்ளலாம் என இதன்மூலம் அறிவிக்கிறார். அதற்கான விளக்கங்கள் பின்வருமாறு:

1. எண்களைப் பொறுத்தவரையில் உலக எண்களையே **(Arabic Numbers)** பயன்படுத்தலாம்.
2. **TN** என்பதற்கு இணையாக 'த நா' என்று எழுதிக் கொள்ளலாம்.
3. **I** மற்றும் **O** என்ற இரு எழுத்துகளும் பயன்படுத்தல் நடைமுறையில் இல்லை.
4. **G** என்பது அரசு வாகனங்களுக்காக ஒதுக்கப்பட்டது. எனவே, தமிழில் 'அ' என்று குறிப்பிட்டு எழுதலாம்
5. **N** என்பது (**Nationalised Vehicles**) என்பதைக் குறிப்பதால் 'நா' (நாட்டுடைமையாக்கப்பட்டவை) எனும் எழுத்து வடிவைப் பயன்படுத்தலாம்.
6. எஞ்சியுள்ள எழுத்துகளைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் கீழ்க்கண்டவாறு பயன்படுத்தலாம்.

**ஆங்கில எழுத்துகளுக்கு நிகராகக் கீழ்க்கண்டவாறு தமிழ் :**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| A | ஆ | K | ஒ | U | ய |
| B | இ | L | ஓ | V | ர |
| C | ஈ | M | க | W | ல |
| D | உ | N | நா | X | வ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| E | ஊ | P | ச | Y | ழ |
| F | எ | Q | ட | Z | ள |
| G | அ | R | த | | |
| H | ஏ | S | ப | | |
| J | ஐ | T | ற | | |

7. எழுதும் முறை கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| | | | |
|---|---|---|---|
| தநா | 01 | அ | 0010 |
| TN | | G | |
| தநா | 01 | நா | 0459 |
| TN | | N | |
| தநா | 59 | ய | 7898 |
| TN | | U | |

8. மாவட்ட அளவிலும் மண்டல அளவிலும் ஒதுக்கப்படும் எண்கள் பின்வருமாறு அமையும்

| | | |
|---|---|---|
| சென்னை - மத்தி | .. | தநா 01 |
| சென்னை - கிழக்கு | .. | தநா 02 |
| சென்னை - வடக்கு | .. | தநா 04 |
| தண்டையார்பேட்டை சென்னை வடகிழக்கு | .. | தநா 05 |
| சென்னை-தெற்கு திருவல்லிக்கேணி | .. | தநா 07 |
| சென்னை மேற்கு வளசரவாக்கம் | .. | தநா 09 |
| திருவள்ளூர் | .. | தநா 20 |
| காஞ்சிபுரம் செங்கல்பட்டு | .. | தநா 21 |
| மீனம்பாக்கம் செங்குன்றம் | .. | தநா 22 |
| வேலூர் வாணியம்பாடி இராணிப்பேட்டை | .. | தநா 23 |
| திருவண்ணாமலை ஆரணி | .. | தநா 25 |

| | | |
|---|---|---|
| சேலம்<br>ஆத்தூர்<br>மேட்டூர்<br>சங்ககிரி | .. | தநா 27 |
| நாமக்கல்<br>திருச்செங்கோடு | .. | தநா 28 |
| இராசிபுரம்<br>தருமபுரி<br>கிருட்டிணகிரி<br>ஓசூர் | . | தநா 29 |
| கடலூர்<br>நெய்வேலி<br>சிதம்பரம் | .. | தநா 31 |
| விழுப்புரம்<br>திண்டிவனம்<br>உளுந்தூர்ப்பேட்டை | .. | தநா 32 |
| ஈரோடு<br>தாராபுரம் | .. | தநா 33 |
| கோபிச்செட்டிப்பாளையம் | .. | தநா 36 |
| கோயம்புத்தூர் தெற்கு | .. | தநா 37 |
| கோயம்புத்தூர் வடக்கு<br>மேட்டுப்பாளையம் | .. | தநா 38 |
| திருப்பூர் | .. | தநா 39 |
| பொள்ளாச்சி | .. | தநா 41 |
| உதகமண்டலம் | .. | தநா 43 |
| திருச்சிராப்பள்ளி<br>திருவரங்கம் | .. | தநா 45 |
| பெரம்பலூர் | .. | தநா 46 |
| கரூர் | .. | தநா 47 |
| தஞ்சாவூர்<br>கும்பகோணம் | .. | தநா 49 |
| திருவாரூர் | .. | தநா 50 |

| | | |
|---|---|---|
| நாகப்பட்டினம் | | |
| மயிலாடுதுறை | .. | தநா 51 |
| புதுக்கோட்டை | .. | தநா 55 |
| திண்டுக்கல் | | |
| பழனி | .. | தநா 55 |
| மதுரை தெற்கு | .. | தநா 58 |
| மதுரை வடக்கு | .. | தநா 59 |
| பெரியகுளம் | .. | தநா 60 |
| சிவகங்கை | | |
| காரைக்குடி | .. | தநா 63 |
| இராமநாதபுரம் | .. | தநா 65 |
| விருதுநகர் | | |
| திருவில்லிபுத்தூர் | .. | தநா 67 |
| தூத்துக்குடி | | |
| கோயில்பட்டி | .. | தநா 69 |
| திருநெல்வேலி | | |
| தென்காசி | .. | தநா 72 |
| நாகர்கோயில் | .. | தநா 74 |

## தொகுப்புரை

மிகவும் இன்றியமையாத அரசாணைகளைப் பற்றிய விவரங்கள் மட்டும் இவ்வியலில் இதுகாறும் சுருக்கமாக எடுத்துரைக்கப்பட்டன. ஆட்சிமொழிச் செயலாக்கம் பற்றி அரசு வெளியிட்டுள்ள / வெளியிடும் அனைத்து அரசாணைகளின் அடிப்படையில் செயற்படுவது அரசு அலுவலர்கள், பணியாளர்கள் ஆகியோரின் கடமையாகும்.

# இயல் மூன்று

# ஆட்சிமொழிச் செயலாக்க ஆய்வில் கண்டறியப்பட்ட உண்மைகள்

## ஆட்சி மொழி

வரலாறு தெரிந்த காலத்திலிருந்தே தமிழ்நாட்டில் தமிழ்தான் ஆட்சிமொழியாக இருந்து வந்துள்ளது. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திற்கு முன்புவரை இந்நிலை நீடித்து வந்தது. இடையிடையே சிலகாலம் தமிழ்நாட்டில் ஆங்காங்கே தமிழ் மன்னர்களின் ஆட்சியின்றிக் களப்பிரர்கள், பல்லவர்கள், நாயக்கர்கள், மராட்டியர்கள், நவாபுகள் ஆகியோரின் ஆட்சி நடைபெற்றது. இவ்வாறு அவ்வப்போது ஆட்சிகள் மாறியபோதிலும் ஆட்சிமொழி மாற வில்லை. அரசு நிருவாகப் பயன்பாட்டில் பற்பல பிற மொழிச் சொற்கள் கலந்தன. ஆயினும் தமிழே ஆட்சிமொழியாகத் திகழ்ந்தது. ஆங்கிலேயர் ஆதிக்கம் மேலோங்கி அவர்களின் ஆட்சியும் ஏற்பட்டபோதுதான் அவர்களின் நிருவாக வசதிக்காக ஆட்சிமொழி நிலையில் மாற்றம் ஏற்படத் தொடங்கியது. அரசியல், கல்வி, வேலைவாய்ப்பு போன்ற துறைகளில் ஆங்கிலத்திற்கு முதன்மை அளிக்கப் பெற்றது போலவே அரசின் நிருவாகத் துறையிலும் ஆங்கிலத்திற்கு முதன்மை அளிக்கப்பெற்றது. மெக்காலே என்பவர் இவற்றிற்குரிய நடவடிக்கைகளில் முனைப்புடன் ஈடுபட்டு அனைத்துத் துறைகளிலும் ஆங்கிலம் இடம்பெற வழிவகைகளை உருவாக்கினார். ஆங்கிலேயரின் வலுவான ஆட்சியும், அடக்குமுறையும், கல்வி - வேலைவாய்ப்பு முதலியவற்றில் மக்களின் வாழ்க்கைத் தேவை போன்றவையும் ஆங்கிலம் தொடர்ந்து நிலைபெறக் காரணங்களாயின. இதனால் அன்னைத் தமிழ் ஆட்சி செலுத்திய துறைகளிலெல்லாம் ஆங்கிலம் அமர்ந்து கோலோச்சத் தொடங்கியது. நிருவாகத் துறையிலும் தமிழ் அகற்றப்பட்டது. ஆங்கிலம் புகுத்தப் பெற்றது. இவ்வகையில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக 'ஆட்சிமொழி' எனும் நிலையில் சிறப்புற்றிருந்த தமிழ்மொழியின் இடத்தை ஆங்கிலம் முழுமையாகப் பிடித்துக் கொண்டது. தமிழ் நாட்டின் ஆட்சிமொழி ஆங்கிலம் எனும் நிலை ஏற்பட்டது. ஆங்கிலேயரை எதிர்த்து நடைபெற்ற விடுதலைப் போராட்டத்தில் வட்டாரமொழிகளுக்கு ஏற்றம் அளிக்கப் பெற்றது. விடுதலை பெற்றபின் அமைக்கப்பெற்ற இந்திய அரசமைப்புச் சட்டத்திற்கிணங்கத் தமிழ்நாடு சட்டமன்றத்தில் 1956ஆம் ஆண்டு ஆட்சிமொழிச் சட்டம் இயற்றப்பட்டது. இச்சட்டத்திற்கு 19 1.1957 இல்

மேதகு ஆளுநர் அவர்கள் இசைவளித்தார். 23.1.1957இல் இச்சட்டம் தமிழ்நாடு அரசிதழில் வெளியிடப்பட்டது. இச்சட்டத்தின்படி, தமிழ்நாட்டில் தமிழே ஆட்சிமொழி எனும் நிலை மீண்டும் ஏற்பட்டது. மைய அரசுடனும், பிற மாநிலங்களுடனும் பிற நாடுகளுடனும் தொடர்பு கொள்ளும் நிலையில் ஆங்கிலம் இணைப்பு மொழியாகச் செயற்படுகிறது.

இத்திட்டத்தினை நடைமுறைப்படுத்தத் தொடக்க நிலையில் ஆட்சி மொழிக்குழு அமைக்கப்பட்டதையும், நான்கு நிலைகளில் ஆட்சி மொழித் திட்டம் செயலாக்கப் பெற்றதையும், பின்னர்த் தமிழ் வளர்ச்சி இயக்ககம் தோற்றுவிக்கப்பட்டுச் செயலாக்கப் பணிகள் விரிவாக்கப் பட்டதையும் முந்தையவியலில் அறிந்தோம்.

## விதிவிலக்கு இனங்கள்

நிருவாகத் துறையில் சிக்கலைத் தவிர்க்கும் பொருட்டும், இன்றியமையாமை கருதியும் சில இனங்களுக்கு ஆங்கிலத்தைப் பயன்படுத்தலாம் என விதி விலக்கு அளிக்கப்பட்டுள்ளது. 2.12.71ஆம் நாளிட்ட கல்வித்(தவ) துறை நிலையாணை எண்.2070, மற்றும் 31.7.89ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறைக் கடித எண். 7411/தவ1-1/85-11 ஆகியவற்றில் இவ்விதிவிலக்குகள் அளிக்கப் பெற்றுள்ளன. விதி விலக்கு அளிக்கப் பெற்றுள்ள இனங்களை மீண்டும் நினைவுகூர்தல் நலம்.

1. மாநிலக் கணக்காய்வுத் தலைவர், கருவூலக் கணக்கு அலுவலர், சம்பளக் கணக்கு அலுவலர் ஆகியோருக்கு எழுதப்பெறும் கடிதங்கள், அவர்களுக்கு அனுப்பப் பெறும் சம்பளப்பட்டிகள், பயணப்படிப்பட்டிகள், சில்லறைச் செலவுப்பட்டிகள், பயிற்சி உதவிப் பணப்பட்டிகள் போன்ற கணக்குத் தொடர்பானவை.
2. மைய அரசு அலுவலகங்கள், பிற மாநில அலுவலகங்கள், நீதிமன்றங்கள் ஆகியவற்றுக்கு எழுதப்பெறும் கடிதங்கள்.
3. மேல்முறையீட்டுக்குட்பட்ட சட்டத் தொடர்புடைய ஆணைகள்.
4. வெளிநாட்டு நிறுவனங்கள், தூதரகங்கள் மற்றும் ஆங்கிலத்திலேயே செய்தித் தொடர்பு வைத்துக் கொண்டுள்ள நிறுவனங்கள் ஆகியவற்றுடன் கொள்ளும் தொடர்பு.

## ஆட்சிமொழித் திட்டத்தைச் செயற்படுத்த வேண்டிய அலுவல கங்கள்-அலுவலர்கள்

தலைமைச் செயலகத்துறைகள், துறைத்தலைமை அலுவலகங்கள், மண்டல, மாவட்ட நிலை அலுவலகங்கள், அவற்றின் சார்நிலை அலுவலகங்கள், தன்னாட்சி நிறுவனங்கள், வாரியங்கள், கழகங்கள்,

இணையங்கள், மாநகராட்சிகள் ஆகியவற்றின் தலைமை அலுவலகங்கள், அவற்றின் சார்நிலை அலுவலகங்கள் ஆகிய அனைத்தும் ஆட்சிமொழித் திட்டத்தைச் செயற்படுத்துவதற்குரிய அலுவலகங்களாகும். அரசு அலுவலகங்கள், அரசு சார்ந்த தன்னாட்சி நிறுவனங்கள் ஆகியவற்றில் பணிபுரியும் அலுவலர்கள், பணியாளர்கள் அனைவருமே ஆட்சிமொழித் திட்டத்தின்படிப் பணிபுரியக் கடமைப்பட்டவர்களாவர்.

## ஆட்சிமொழித் திட்ட ஆய்வு

அரசு அலுவலகங்களில் ஆட்சிமொழிச் செயலாக்கம் நிறைவேற அரசு ஆணைகள் பலவற்றை வெளியிட்டுள்ளது; வெளியிட்டும் வருகிறது. இவ்வாணைகள் நடைமுறைப் படுத்தப்படுகின்றனவா என்பதை ஆய்வு செய்வது ஓர் இன்றியமையாத பணியாகும். அப்போதுதான் திட்டச் செயலாக்கத்தில் கண்டுள்ள முன்னேற்றத்தையும், காணப்படும் குறைபாடுகளையும் கண்டறிந்து அவற்றிற்கேற்பத் தேவைப்படும் நடவடிக்கைகளை மேற்கொள்ள முடியும். எனவே தமிழ் வளர்ச்சி இயக்ககம் ஆட்சிமொழிச் செயலாக்கம் தொடர்பான ஆய்வுப் பணியினை முதன்மைப் பணியாகச் செய்து வருகிறது.

## தமிழ் வளர்ச்சி இயக்குநரின் ஆய்வுப் பணி

தமிழ் வளர்ச்சி இயக்குநரின் அலுவலகம் சென்னையில் இயங்கி வருகிறது. தமிழ்நாடு அரசின் அனைத்துத் துறைத்தலைமை அலுவலகங்கள், அனைத்து மாவட்ட ஆட்சியர் அலுவலகங்கள், தன்னாட்சி நிறுவனங்களின் (வாரியங்கள், கழகங்கள், இணையங்கள்) தலைமை அலுவலகங்கள் ஆகியவற்றில் தமிழ் வளர்ச்சி இயக்குநர் ஆட்சிமொழித் திட்டச் செயற்பாட்டை ஆய்வு செய்கின்றார். ஆய்வின் முடிவில் ஆய்வு செய்யப்பட்ட அலுவலகத்தின் தலைவர், அலுவலர்கள், கண்காணிப்பாளர்கள் ஆகியோருடன் கலந்துரையாடல் நிகழ்த்துகின்றார். இக்கலந்துரையாடலில் அரசுப் பணியாளர்களின் ஐயங்கள் நீக்கப்படுவதுடன், ஆட்சிமொழித் திட்டத்தை நிறைவேற்ற வேண்டிய இன்றியமையாமையை அவர்கள் உணர்ந்து கொள்ளவும் வாய்ப்பு உருவாகிறது. பின்னர் ஆய்வறிக்கை அனுப்பப்பட்டுத் தேவையான தொடர் நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பெறுகின்றன.

## மண்டலத் தமிழ் வளர்ச்சித் துணை இயக்குநர்களின் ஆய்வுப் பணி

சேலம், திருநெல்வேலி ஆகிய இடங்களில் மண்டலத் தமிழ் வளர்ச்சித் துணை இயக்குநர்கள் பணியாற்றி வருகின்றனர். சேலம் மண்டலத் தமிழ் வளர்ச்சித் துணை இயக்குநர் சேலம், நாமக்கல், தருமபுரி,

ஈரோடு, கோயம்புத்தூர், நீலகிரி ஆகிய மாவட்டங்களில் உள்ள மண்டலநிலை, மாவட்ட நிலை அலுவலகங்களில் ஆய்வு மேற்கொள்கிறார். திருநெல்வேலி மண்டலத் தமிழ் வளர்ச்சித் துணை இயக்குநர் திருநெல்வேலி, கன்னியாகுமரி, தூத்துக்குடி, இராமநாதபுரம், விருதுநகர், சிவகங்கை ஆகிய மாவட்டங்களில் உள்ள மண்டலநிலை, மாவட்டநிலை அலுவலகங்களில் ஆய்வு மேற்கொள்கிறார். மண்டலத் தமிழ் வளர்ச்சித் துணை இயக்குநர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு திங்களிலும் 25 அலுவலகங்களை ஆய்வு செய்தற்குரியவராவர்.

## தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்களின் ஆய்வுப்பணி

ஒவ்வொரு மாவட்டத்திற்கும் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் ஒருவர் உள்ளார். ஒவ்வொரு மாவட்டத்திலும் இவர்தம் அலுவலகம் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் செயற்படுகிறது. மாவட்டத் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்கள் தத்தம் மாவட்டத்தில் உள்ள மண்டல நிலை அலுவலகங்கள், மாவட்டநிலை அலுவலகங்கள், சார்நிலை அலுவலகங்கள் ஆகியவற்றை ஆய்வு செய்து நடவடிக்கை எடுத்துவருகின்றனர். சேலம், திருநெல்வேலி மண்டலத் தமிழ் வளர்ச்சித் துணை இயக்குநர்களின் ஆய்வுக்குட்பட்ட மாவட்டங்களில் அம் மாவட்டங்களின் மாவட்டநிலை, மண்டல நிலை அலுவலகங்கள் நீங்கலாக மற்ற சார்நிலை அலுவலகங்கள் அனைத்தையும் அம்மாவட்டங்களின் உதவி இயக்குநர்கள் ஆய்வு செய்கின்றனர். மாவட்டத் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் ஒவ்வொருவரும் 22.11.1973 ஆம் நாளும், 79299/த/73-1 எண்ணுமிட்ட கல்வித்துறைக் குறிப்பாணையின்படித் திங்கள்தோறும் 60 அலுவலகங்களை ஆய்வு செய்தல் வேண்டும் எனும் நிலை இருந்தது. இதிலுள்ள பல்வேறு இடர்ப்பாடுகளைக் கருதி 4.11.1987ஆம் நாளும், 374 ஆம் எண்ணுமிட்ட தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறை அரசாணையில் இவ்வெண்ணிக் கையை 40ஆக அறுதியிட்டு அரசு ஆணையிட்டுள்ளது.

## ஆய்வு நடைமுறை

தமிழ் வளர்ச்சி இயக்குநரும், மண்டலத் தமிழ் வளர்ச்சித் துணை இயக்குநர்களும், மாவட்டத் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்களும் தாம் ஆய்வு செய்யவுள்ள அலுவலகங்கள் இவையிவை என்பதை அறுதி செய்துகொண்டு ஒவ்வொரு திங்களுக்குமுரிய பயணநிரலைத் தயாரிக்கின்றனர். தமிழ் வளர்ச்சி இயக்குநரின் பயணநிரல் தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு; இந்துசமய அறநிலையத் துறை அமைச்சர், தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறையின் அரசுச் செயலாளர், ஆகியோரின் பார்வைக்கு அனுப்பப் பெறுகிறது. மண்டலத் தமிழ் வளர்ச்சித் துணை இயக்குநர்கள், மாவட்டத் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்கள் ஆகியோரின் பயண நிரல்கள் தமிழ் வளர்ச்சி இயக்குநரின்

ஏற்புக்காக அனுப்பப் பெறுகின்றன. ஆய்வு செய்யப்படவுள்ள அலுவலகங்களுக்கு ஆய்வுநாள் பற்றிய விவரம் முன்னதாகவே தெரிவிக்கப் படுகிறது. இவ்வாறு அனுப்பப்படும் ஆய்வு அறிவிப்புக் கடிதத்துடன் 'வினாப்பட்டி' ஒன்றும் இணைத்தனுப்பப்படுகிறது. ஆய்வு செய்யப்படவுள்ள அலுவலகத்தைப் பற்றிய முழுவிவரத்தையும், அவ்வலுவலகத்தில் பேணப்பட்டுவரும் பதிவேடுகள், கோப்புகள், காலமுறை அறிக்கைகள், கடிதப் போக்குவரத்து, தட்டச்சுகளின் எண்ணிக்கை போன்ற பல்வேறு விவரங்களையும் அவ்வினாப் பட்டியில் நிறைவு செய்து ஆய்வின்போது அவ்வலுவலகத்தினர் தமிழ் வளர்ச்சித்துறை அலுவலர்களிடம் அளித்தல் வேண்டும். அவ்விவரங்களினடிப்படையிலும், ஒவ்வோர் இருக்கையிலும் உள்ள ஆவணங்களை ஆய்வு செய்வதனடிப்படையிலும் அவ்வலுவலகத்தில் ஆட்சிமொழித் திட்டம் எந்த அளவில் செயற்படுத்தப்படுகிறது என்பதைத் தமிழ் வளர்ச்சித்துறை அலுவலர்கள் கண்டறிகின்றனர். இவ்வகையில் ஒவ்வோர் இருக்கையிலும் உள்ள பதிவேடுகள், கோப்புகள், கடித வரைவுகள், காலமுறை அறிக்கைகள், ஒப்பளிப்பு ஆணைகள், பயணநிரல், நாட்குறிப்பு, முத்திரைகள் முதலியன முழுமையும் ஆய்வு செய்யப்படுகின்றன. ஆட்சிமொழித் திட்டச் செயற்பாட்டில் அலுவலர்களுக்கும், பணியாளர்களுக்கும் ஏற்படும் ஐயப்பாடுகள் தமிழ் வளர்ச்சித் துறை அலுவலர்களால் ஆய்வின் போது களையப்படுகின்றன. இடர்ப்பாடுகளை நீக்கித் திட்டம் செம்மையாய் அமைய வழிவகுக்கப்படுகிறது. பின்னர் ஆய்வுக் குறிப்புகளினடிப்படையில் அவ்வலுவலகத்திற்கு ஆய்வறிக்கை அனுப்பி வைக்கப்பெறுகிறது. ஆய்வின் போது காணப்பட்ட முன்னேற்ற நிலை ஆய்வறிக்கையில் பாராட்டப்படுகிறது. குறைபாடுகள் இருப்பின் அவையனைத்தும் ஆய்வறிக்கையில் சுட்டிக்காட்டப்படுகின்றன. சுட்டிக்காட்டப் பட்ட குறைபாடுகளை முற்றிலும் களைவதற்கு முனைப்பான நடவடிக்கைகளை உடனே மேற்கொள்ளுமாறும், குறைகளைக் களைந்து பத்திவாரியான குறைகளைவு அறிக்கையை விரைந்து அனுப்புமாறும் ஆய்வு செய்யப்பட்ட அலுவலகத் தலைவருக்குத் தெரிவிக்கப்படுகிறது

அவரால் அனுப்பப்பெறும் குறைகளைவு அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ள விவரங்களுக்கேற்பத் தேவைப்படும் நேர்வுகளில் தொடர் நடவடிக்கை மேற்கொள்ளப்பெற்று அவ்வலுவலகத்தில் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் முழுமையாக அமைய நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பெறுகின்றன.

## ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தின் முன்னேற்ற நிலை - ஒரு பொதுநோக்கு

அரசு அலுவலகங்களில் 1957ஆம் ஆண்டுமுதல் ஆட்சி மொழித் திட்டச் செயலாக்க ஆய்வு நடைபெற்று வருகிறது. தொடக்க காலத்தில் மாநிலம் முழுதும் உள்ள அலுவலகங்களை அலுவலர் ஒருவர் மட்டுமே ஆய்வு செய்யும் நிலை இருந்ததால் இத்திட்டச் செயலாக்கத்தில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏதும் இருந்திட மிகுதியும் வாய்ப்பில்லை. 1971இல் தமிழ் வளர்ச்சி இயக்ககம் தோற்றுவிக்கப்பட்டதாலும், பின்னர் ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஆய்வுப் பணிக்கென அலுவலர் அமர்த்தப்பட்டதாலும் மிகுதியான எண்ணிக்கையில் அரசு அலுவலகங்கள் ஆய்வு செய்யப்படும் நிலை உருவாகியது. மேலும் பரவலாகவும் அடுத்தடுத்தும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பெற்றன. குறைபாடுகள் சுட்டிக்காட்டப்பட்டு நடவடிக்கை எடுக்கப்பட்டதன் விளைவாக இத்திட்டச் செயற்பாட்டில் குறிப்பிடத்தக்க அளவு நல்ல முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது என்பது மிகையாகாது. தமிழ் வளர்ச்சித்துறை அலுவலர்கள் நேரில் ஆய்வு செய்யும்போது காணும் நிலையினடிப்படையிலும், ஒவ்வோர் அலுவலகத்திற்கும் அனுப்பப்படும் ஆய்வறிக்கைகளின் அடிப்படையிலும் இம்முன்னேற்ற நிலை நன்கு தெரியவருகிறது. இத்திட்டச் செயலாக்கத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தைப் பொதுவாகப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

1. ஆட்சிமொழிச் சட்டம், தமிழ்த்திட்டச் செயலாக்கம் ஆகியவை பற்றி அரசு அலுவலர்களும், பணியாளர் களும் ஓரளவு நன்கு தெரிந்து கொண்டுள்ளனர்.
2. தமிழ் வளர்ச்சி இயக்குநரும், மண்டல-மாவட்ட நிலையிலான தமிழ் வளர்ச்சித் துறை அலுவலர்களும் அடிக்கடி ஆய்வு செய்து நடவடிக்கைகள் மேற்கொள் வதால், இத்திட்டத்தைச் செயற்படுத்த வேண்டியது அரசுப் பணியில் நமது சட்டமுறையிலான கடமை என்ற உணர்வு அலுவலர்கள்-பணியாளர்களிடையே பரவலாக ஏற்பட்டுள்ளது.
3. அலுவலகப் பயன்பாட்டில் ஆங்கிலத்தில் எழுதுவது கூடாது என்ற எண்ணம் உறுதிப்பட்டிருக்கிறது.
4. தமிழில்தான் எழுதவேண்டும் என்ற எண்ணம் ஆர்வத்தினடிப்படையிலும், கட்டாயத்தினடிப்படை யிலும் மிகுதியாகி ஒரு விழிப்புணர்வு தோன்றி யிருக்கிறது.
5. அனைத்து அலுவலகங்களிலும் தமிழில் எழுதும்நிலை உருவாகியுள்ளது.

6. அனைத்து அலுவலகங்களிலும் தமிழில் எழுதும் நிலை உருவாகியுள்ளதோடு, தமிழில் எழுதும் அளவும் படிப்படியாக மிகுந்து வந்துள்ளது.
7. தமிழில் எழுதுவது கடினம்-இயலாது எனும் மனப்பாங்கு பெருமளவில் மாறியுள்ளது.
8. தமிழால் முடியும்; நம் தமிழால் முடியாததில்லை எனும் உறுதிப்பாடு பரவலாகத் தோன்றியுள்ளது.
9. தமிழில் எழுதுவதைப் பெருமையாகக் கருதும் மனப்போக்கு வளர்ந்துள்ளதுடன் தமிழில் அழகாகவும் தெளிவாகவும் எழுதும் நிலையும் ஏற்பட்டுள்ளது.
10. முற்றிலும் ஆங்கிலத்திலேயே செயற்படக்கூடிய அரசு அலுவலகம் ஒன்றுகூட இல்லை என உறுதியாகச் சொல்லுமளவிற்குத் தமிழ்த் திட்டச் செயலாக்கத்தில் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.
11. ஏறத்தாழ 25,30 ஆண்டுகளுக்கு முன்பு அரசுப் பணியிலிருந்து ஓய்வு பெற்றவர்கள் தற்போது அரசு அலுவலகங்களுக்குச் சென்று பார்த்தால் 'எங்களால் நம்பவே முடியவில்லை' என்று வியக்கும் அளவிற்கும், பெருமைப்படும் அளவிற்கும் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தில் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.
12. சில அலுவலகங்களில் தமிழ் ஆட்சிமொழிப் பயன்பாடு மிகவும் குறைவாக இருந்தாலும் பல அலுவலகங்களில் பாராட்டத்தக்க அளவு நடைமுறையில் உள்ளது. சில அலுவலகங்களில் 90 விழுக்காடு, 100 விழுக்காடு எனும் அளவிலும் சிறப்பாக உள்ளது.

அனைத்து அலுவலகங்களிலும் தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் முழு அளவில் அமைந்துள்ளது எனும் நிலை இன்னும் ஏற்படவில்லை. எனினும் அரசு அலுவலகங்கள் தமது அலுவலகச் செயற்பாட்டிலும், பிற அலுவலகங்களுடனான தொடர்பிலும், பொதுமக்களுடனான தொடர்பிலும் தற்போதைய நிலையில் தமிழை மிகுதியாகப் பயன்படுத்துகின்றன என்பதில் ஐயமில்லை

## குறைபாடுகள்

மொத்தத்தில் கடந்த 40 ஆண்டுக்கால நடவடிக்கைகளால் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தில் குறிப்பிடத்தக்க அளவு நல்ல முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதைக் கண்கூடாகக் காணமுடிகிறது. ஆயினும் பற்பல குறைபாடுகளும் காணப்படுகின்றன. எனவே இத்திட்டத்தின்

முழுமையை நோக்கி இன்னும் விரைந்து பயணம் மேற்கொள்ள வேண்டிய நிலை உள்ளது. இதற்காகக் கடும் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டிய நிலையும் உள்ளது. இதன் பொருட்டு அரசு அலுவலகங்களில் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தில் நடைமுறையில் காணப்படும் குறைபாடுகளைத் தனித்தனியாக இனங்காண வேண்டியது இன்றியமையாததாகும். இவ்வகையில் தமிழ் வளர்ச்சித்துறை அலுவலர்கள் அரசு அலுவலகங்களில் நேரிடையாக ஆய்வு செய்யும்போது கண்டறிந்தவற்றின் அடிப்படையிலும், ஆய்வறிக்கைகளினடிப்படையிலும் பல அலுவலகங்களில் இத்திட்ட நடைமுறையில் காணப்படும் பொதுவான குறைபாடுகள் கீழே தரப்பட்டுள்ளன. இக்குறைபாடுகள் அனைத்துமே அனைத்து அலுவலகங்களிலும் உள்ளன என்று கொள்ளுதல் கூடாது. இவற்றில் சிலவோ, பலவோ இருத்தலைக் காண முடிகிறது.

## பிரிவுகள்-பதவிகள்-இருக்கைகளின் பெயர்கள்

பல அலுவலகங்களில் பிரிவுகளின் பெயர்கள் "A" Section, "B" Section' என்பன போன்றும், பதவிப் பெயர்கள் Managing Director, Administrative Officer, Accounts officer, Executive Engineer, Draftsman என்பன போன்றும் ஆங்கிலத்தில் எழுதி வைக்கப்பட்டுள்ளன. கோப்புகளிலும் இவ்வாறே எழுதப் படுகின்றன. இந்நிலையால் எழுத்து வழக்கில் மட்டுமன்றிப் பேச்சு வழக்கிலும் ஆங்கிலம் பயன்படுத்தப்படும் நிலை உருவாகிவிடுகிறது. இளநிலை உதவியாளர்; உதவியாளர் ஆகியோரை "A1","B1"என்று அழைக்கும் நிலையையும், அலுவலர்களை M.D., A.O., E.E., என்று கூறும் நிலையையும் காணமுடிகிறது.

## பதிவேடுகள் பேணுதல்

பதிவேடுகள் பேணுதலில் பின்வரும் குறைபாடுகள் காணப்படுகின்றன.

1. பதிவேடுகளில் ஆங்கிலத்தில் எழுதுதல்.
2. தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதுதல்.
3. எழுதப்பட வேண்டிய செய்தியை ஆங்கிலத்தில் முத்திரைகளாகச் செய்து வைத்துக்கொண்டு அவற்றைப் பதிவேடுகளில் இடுதல்.
4. குறிப்பாகப் பணம், வரவு, செலவு, கடன், முன்பணம், பட்டிகள் தொடர்பான பதிவேடுகளைப் பெருமளவில் ஆங்கிலத்தில் எழுதுதல்.

5. துறை சார்ந்த பதிவேடுகளைப் பெரும்பாலும் ஆங்கிலத்தில் எழுதுதல்.
6. பதிவேடுகள் தமிழில் எழுதப்பட்டாலும் முகப்பு அட்டையில் பதிவேட்டின் பெயரையும், தொடக்கப்பக்கத்தில் சான்றிதழையும் ஆங்கிலத்தில் எழுதுதல்.
7. தமிழில் எழுதப்பட்ட பதிவேட்டில் மேலலுவலர் தம் குறிப்புரையை ஆங்கிலத்தில் எழுதுதல்.
8. பதிவேடுகளை மீண்டும் மீண்டும் ஆங்கிலத்திலேயே அச்சிட்டுக் கொண்டு பயன்படுத்துதல்.

## கோப்புகள் பேணுதல்

கோப்புகள் பேணுதலில் பின்வரும் குறைபாடுகள் காணப்படுகின்றன.

1. கோப்புகளின் முகப்பு அட்டைகளில் இருக்கையின் பெயரையும், கோப்பு தொடர்பான பொருளையும் ஆங்கிலத்தில் எழுதுதல்.
2 குறிப்புக் கோப்பில் ஆங்கிலத்தில் எழுதுதல்.
3. தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதுதல்.
4. தமிழில் எழுதப்பட்ட குறிப்புக்கோப்பில் மேலலுவலர்கள் தங்கள் குறிப்புரையையும் ஆணையையும் ஆங்கிலத்தில் எழுதுதல்.
5. 'பணிந்தனுப்பப்பெறுகிறது', 'ஏற்புக்காக வைக்கப் படுகிறது' என்பன போன்ற குறிப்புகளுக்கு ஆங்கில முத்திரைகளைச் செய்து வைத்துக் கொண்டு அவற்றைக் குறிப்புக் கோப்புகளில் பயன்படுத்துதல்.
6. நடப்புக்கோப்பில் கடிதங்கள், நினைவூட்டுகள் போன்றவற்றிற்குரிய வாலாயமான வரைவுகளைக்கூட ஆங்கிலத்தில் எழுதுதல்.
7. ஒழுங்கு நடவடிக்கைக் கோப்பில் குற்றச்சாட்டுகள், காரணங்கோருதல், குற்றக்குறிப்பாணைகள், விசாரணை அறிக்கை முதலியவை ஆங்கிலத்தில் அமைதல்.
8. கோப்புகளின் முடிவுத்தன்மையை ஆங்கிலத்தில் எழுதுதல்
9. சுற்றுக்கு அனுப்பப்படும் / சார்நிலை அலுவலகங்களுக்கு அனுப்பப்படும் கடித வரைவுகளில் மேற்குறிப்பினை ஆங்கிலத்தில் எழுதுதல்.

10. மேலொப்பத்திற்காக/ஏற்புக்காக வரும் கடிதங்களில் அதற்கான குறிப்பினை/ஏற்பினை ஆங்கிலத்தில் எழுதுதல்.
11. கோப்பைப் பார்வையிட வேண்டிய அலுவலர்களின் பதவிப் பெயர்களைச் சுருக்கமாக (M.D., G.M.) ஆங்கிலத்தில் எழுதுதல்; முத்திரையாகச் செய்து குறிப்புக் கோப்பில் இடுதல்.
12. தொழில்நுட்பம் / நீதிமன்றம் / மைய அரசு - பிற மாநிலம் தொடர்பான கோப்பு எனச் சொல்லிக் கொண்டு விதிவிலக்குக்கு உட்படாத வரைவுகள், குறிப்புகள் ஆகியவற்றை ஆங்கிலத்தில் எழுதுதல்.

## ஆணைகள் வெளியிடல்

ஆணைககள் வெளியிடுவதில் கீழ்க்காணும் குறைபாடுகள் காணப்படுகின்றன.

1. பணம், விடுப்பு தொடர்பான ஒப்பளிப்பு/செயல்முறை ஆணைகள் முழுவதையுமோ, ஒரு சிலவற்றையோ ஆங்கிலத்தில் வெளியிடுதல்.
2. பொதுவைப்புநிதியிலிருந்து தற்காலிக முன்பணம் ஒப்பளிப்பு, பகுதி இறுதித் தொகை ஒப்பளிப்பு, வீடுகட்டுதற்கான முன்பண ஒப்பளிப்பு போன்ற ஆணைகளின் படிகள் மாநிலக் கணக்காயருக்கும் அனுப்பப்படுவதால் இவை ஆங்கிலத்தில்தான் இருத்தல் வேண்டும் எனக் கருதிக் கொண்டு தொடர்ந்து இவற்றை ஆங்கிலத்திலேயே வெளியிட்டு வருதல்.
3. ஒப்பளிப்புஆணைகள் தமிழில் வெளியிடப்பட்டிருந் தாலும் அவற்றில் கணக்குத் தலைப்புகளை ஆங்கிலத்தில் குறிப்பிடல்.
4. செலவுச்சீட்டுகள் மீதான அனுமதி / அனுமதி மறுப்பு / நீக்கல் ஆணைகள் / அனைத்து வகை நீட்டிப்பு ஆணைகள், ஒதுக்கீட்டு ஆணைகள் இவை தொடர்பான மறுப்பு / நீக்கல் ஆணைகள், பணியமர்த்தல், மாற்றல், விடுவித்தல், ஒழுங்கு நடவடிக்கை எடுத்தல், தற்காலிகமாக / நிலையாகப் பணி நீக்கம் செய்தல், பணி ஓய்வு அளித்தல் தொடர்பான ஆணைகள் போன்றவற்றை ஆங்கிலத்தில் வெளியிடல்.
5. அரசாணைகள் ஆங்கிலத்தில் வெளியிடப்படுதல்.

## அலுவலக ஆணைகள் வெளியிடல்

சில அலுவலகங்களில் அலுவலக ஆணைகள் முழுமையாக ஆங்கிலத்தில் வெளியிடப்படுகின்றன. சில அலுவலகங்களில் தமிழில் பலவும், ஆங்கிலத்தில் சிலவும் வெளியிடப்படுகின்றன.

## கடிதப் போக்குவரத்து

கடிதப்போக்குவரத்தில் பின்வரும் குறைபாடுகள் காணப்படுகின்றன.

1. பெறப்படும் கடிதங்களிலேயே குறிப்புரையையோ, ஆணையையோ ஆங்கிலத்தில் எழுதுதல்.
2. அலுவலகத்திற்குள் சுற்றுக்கு அனுப்பும் கடிதங்களில் மேற்குறிப்பினை ஆங்கிலத்தில் எழுதுதல்.
3. சார்நிலை அலுவலகங்களுக்கு அனுப்பப்படும் கடிதங்கள், ஆணைகள் முதலியவற்றின் படிகளில் ஆங்கிலத்தில் மேற்குறிப்பு எழுதுதல்.
4. மேலொப்பத்திற்காக வரும் கடிதங்கள், அறிக்கைகள், சான்றிதழ்கள், பட்டிகள் முதலியவற்றில் ஆங்கிலத்தில் குறிப்பெழுதி மேலொப்பமிடுதல்.
5. சார்நிலை/சமநிலை/மேல்நிலை அலுவலகங்களுக்கும், பிறதுறை அலுவலகங்களுக்கும் எழுதப்படும் கடிதங்கள், நினைவூட்டுகள், நேர்முகக் கடிதங்கள் ஆகியவற்றை ஆங்கிலத்தில் எழுதுதல்.
6. பொதுமக்களுக்கு அனுப்பப்படும் கடிதங்களை ஆங்கிலத்தில் எழுதுதல்.
7. அரசுக்கு அனுப்பப்படும் கருத்துருக்கள், கடிதங்கள் ஆகியவற்றை ஆங்கிலத்தில் எழுதுதல்.
8. தமிழில் வருகின்ற கடிதங்களுக்கு ஆங்கிலத்தில் மறுமொழியனுப்புதல்.
9. விதிவிலக்கு அளிக்கப்படாத சில இனங்களை விதிவிலக்கு அளிக்கப்பட்டுள்ளதாகக் கருதிக்கொண்டு அவ்வினங்களை ஆங்கிலத்தில் எழுதுதல்.
10. ஆங்கிலத்தில் வரும் கடிதங்களுக்கு ஆங்கிலத்தில்தான் மறுமொழி அனுப்ப வேண்டும் என்னும் தவறான மனப்பாங்கில் ஆங்கிலத்தில் மறுமொழிக் கடிதங்களை அனுப்புதல்.

11. தொழில்நுட்பம் சார்ந்தவை என்பதால் ஆங்கிலத்தில்தான் எழுதவேண்டும் எனக் கருதிக்கொண்டு அவற்றையும், அவற்றோடு தொடர்புடைய வாலாயமான கடிதங்களையும் ஆங்கிலத்தில் எழுதுதல்.
12. ஆங்கிலத் தட்டச்சு மட்டுமே இருப்பதையும் அல்லது ஆங்கிலத் தட்டச்சுகள் மிகுதியாக இருப்பதையும், தமிழ்த் தட்டச்சுகள் போதிய அளவில் இல்லையென்பதையும் காரணங்களாகக் கூறிக்கொண்டு ஆங்கிலத்திலேயே எழுதித் தட்டச்சிட்டனுப்புதல்.

## காலமுறை அறிக்கைகள்

காலமுறை அறிக்கைகள் தொடர்பாகப் பின்வரும் குறைபாடுகள் காணப்படுகின்றன.

1. சிலவோ, பலவோ ஆங்கிலத்தில் அனுப்பப்படுதல்.
2. அறிக்கைக்குரிய படிவம் தமிழிலிருந்தாலும் ஆங்கிலத்தில் நிரப்பி அனுப்புதல்
3. ஆங்கில முத்திரைகளைச் செய்து வைத்துக்கொண்டு அறிக்கைக்குரிய படிவத்தில் அவற்றை இட்டு அனுப்புதல்
4. சார்நிலை அலுவலகங்களிலிருந்து அறிக்கைகளை ஆங்கிலத்தில் பெறுதல்.
5. சார்நிலை அலுவலகங்களிலிருந்து பெறப்படும் அறிக்கைகள் தமிழில் இருந்தாலும் அவற்றின் தொகுப்பறிக்கையை ஆங்கிலத்தில் தயாரித்து அரசுக்கு அனுப்புதல்.
6. அறிக்கை விவரம் கணிப்பொறியில் அளிக்கப்பெறுகிறது என்பதால் தலைமை அலுவலக அறிக்கைகளை ஆங்கிலத்தில் தயாரித்தல்

## பதிவுருத்தாள்/கமுக்க அறிக்கைகள்

பணியாளர்கள், அலுவலர்கள் ஆகியோரைப் பற்றி அலுவலகத் தலைவர்கள் துறைத் தலைமை அலுவலகங்களுக்கும், அரசுக்கும் அனுப்புகின்ற பதிவுருத்தாள் அறிக்கைகளும், கமுக்க அறிக்கைகளும் பல அலுவலகங்களில் ஆங்கிலத்தில் அமைந் துள்ளன.

## சார்நிலை அலுவலகங்கள் மீதான ஆய்வு

**தலைமை அலுவலகங்கள் துறைப் பணிகள் தொடர்பாகத் தம் சார்நிலை அலுவலகங்களைக் காலமுறைப்படி ஆய்வு செய்கின்றன. அப்படி ஆய்வு செய்யும்போது அலுவலகங்களில் தமிழ் ஆட்சிமொழித்**

திட்டச் செயற்பாடு எந்த அளவில் உள்ளது என்பதையும் ஆய்வு செய்து தக்க அறிவுரைகளை வழங்குதல் வேண்டும். இது தொடர்பாகப் பல அலுவலகங்களில் கீழ்க்காணும் குறைபாடுகள் காணப்படுகின்றன.

1. தலைமை அலுவலகங்கள் தம் சார்நிலை அலுவலகங்களில் ஆய்வு மேற்கொள்ளும் போது அவற்றில் ஆட்சிமொழித் திட்டச் செயற்பாடு அமைந்துள்ள நிலை பற்றி அறிந்து கொள்வதற்கான வினாப்பட்டியைப் பயன்படுத்தாமலேயே இருத்தல்.
2. பயன்படுத்தினாலும் முழுமையாக நிறைவு செய்யாமல் ஒருசில பகுதியை மட்டும் நிறைவு செய்தல்.
3. நிறைவு செய்யப்பட்டிருப்பினும் இத்திட்டச் செயலாக்க நிலை பற்றி எந்தக் குறிப்பும் எழுதாமல் ஆய்வறிக்கையை அனுப்புதல்
4. இத்தகைய ஆய்விற்குப் பயன்படுத்தும் வினாப்பட்டிகள் ஆங்கிலத்தில் இருத்தல்; அவற்றில் ஆங்கிலத்தில் நிறைவு செய்தல்.
5. வினாப்பட்டிகள் தமிழில் இருந்தாலும் அவற்றை ஆங்கிலத்தில் நிரப்புதல்.
6. இத்தகைய ஆய்வின் அடிப்படையில் சார்நிலை அலுவலகங்களுக்கு அனுப்பும் ஆய்வறிக்கைகளை ஆங்கிலத்தில் அனுப்புதல்.
7. இவ்வறிக்கைகளில் சுட்டிக்காட்டப்பட்டுள்ள குறைபாடு களைக் களைந்து, சார்நிலை அலுவலகங்கள் தத்தம் தலைமை அலுவலகங்களுக்கு அனுப்பிவைக்கும் குறைகளைவு அறிக்கைகள் ஆங்கிலத்தில் அமைதல்.
8. இதன்பிறகு அமையும் தொடர் நடவடிக்கைகளும் ஆங்கிலத்தில் அமைதல்.

## வரவு - செலவு அறிக்கைகள் / மதிப்பீடுகள்

ஒவ்வோர் அலுவலகமும் ஒவ்வொரு நிதியாண்டிற்கும் தம் அலுவலகத்திற்கான வரவு - செலவு அறிக்கைகளையும், மதிப்பீடுகளையும் தயாரிக்கின்றது. இவை துறைத்தலைமை அலுவலகங்களுக்கும், அரசுக்கும் அனுப்பப்படுகின்றன. இத்தகைய வரவு - செலவு அறிக்கைகளும், மதிப்பீடுகளும், திருத்திய மதிப்பீடுகளும், இறுதித்திருத்திய மதிப்பீடுகளும் மிகப்பல அலுவலகங்களில் ஆங்கிலத்திலேயே தயாரித்தனுப்பப்படுகின்றன.

## பயணநிரல், நாட்குறிப்பு

அலுவலர்கள் தங்களுக்குரிய பணிகளைத் திட்டமிட்டுக் கொண்டு அதற்கேற்றவகையில் தங்களது பயணநிரலைத் தயாரிக்கின்றனர். அப்பயண நிரலின்படித் தாங்கள் பணியாற்றிய விவரம், ஏற்பட்ட மாறுதல் முதலியவற்றைக் குறித்து நாட்குறிப்பைத் தயாரிக்கின்றனர். இத்தகைய பயணநிரலும், நாட்குறிப்பும் தொடர்புடைய அலுவலர்களுக்கு அனுப்பி வைக்கப்படுகின்றன. சில அலுவலகங்களில் இவை ஆங்கிலத்தில் அமைந்துள்ளதை ஆய்வின் போது காணமுடிகிறது.

## கூட்ட நடவடிக்கைக் குறிப்பு

அரசு அலுவலகங்களில் பல்வேறு நிலைகளில் பல கூட்டங்கள் நடைபெறுகின்றன. திட்டமிடல், பணி செய்வகை, பணிமுன்னேற்ற ஆய்வு, இன்றியமையா முடிவுகள் போன்றவை தொடர்பாக இக்கூட்டங்கள் நடைபெறுகின்றன. இக்கூட்டம் தொடர்பாக உரியவர்களுக்கு அனுப்பப்படும் அறிவிப்புக் கடிதமும், கூட்டத்தின் பொருள் நிரலும், கூட்டம் நடத்தப்படும் விவரம், கூட்டத்தில் பேசப்பட்ட பொருள், எடுக்கப்பட்ட முடிவுகள் முதலியவை அடங்கிய கூட்ட நடவடிக்கைக் குறிப்பும் பல அலுவலகங்களில் ஆங்கிலத்திலேயே அமைந்துள்ளன.

## தட்டச்சுகள்

ஆட்சிமொழித் திட்டச் செயற்பாடு வெற்றிபெற, அரசு அலுவலகங்களில் போதிய அளவு தமிழ்த் தட்டச்சுகள் இருக்க வேண்டியது இன்றியமையாததாகும். அரசு ஆணையின்படிச் சார்நிலை அலுவலகங்களில் 100 விழுக்காடு தமிழ்த் தட்டச்சுகள் இருத்தல் வேண்டும். துறைத் தலைமை அலுவலகங்களில் 75 விழுக்காடு தமிழ்த் தட்டச்சுகளும் 25 விழுக்காடு ஆங்கிலத் தட்டச்சுகளும் இருத்தல் வேண்டும். தலைமைச் செயலகத்துறைகளில் 65 விழுக்காடு தமிழ்த் தட்டச்சுகளும் 35 விழுக்காடு ஆங்கிலத் தட்டச்சுகளும், தன்னாட்சி நிறுவன அலுவலகங்களில் 50 விழுக்காடு தமிழ்த் தட்டச்சுகளும், 50 விழுக்காடு ஆங்கிலத் தட்டச்சுகளும் இருத்தல் வேண்டும். இவ்வகையில் கீழ்க்காணும் குறைபாடுகள் காணப்படுகின்றன.

1. சார்நிலை / மாவட்டநிலை / மண்டல நிலை அலுவலகங்கள் சிலவற்றில் தமிழ்த் தட்டச்சுகளே இல்லாமல் ஆங்கிலத் தட்டச்சுகள் இருத்தல்.
2. தமிழ்த் தட்டச்சுகள் இருந்தாலும் ஆங்கிலத் தட்டச்சுகளும் இருத்தல்.

3. துறைத்தலைமை அலுவலகங்களில் அவற்றிற்கு அனுமதிக்கப்பட்ட 25 விழுக்காட்டிற்கும் கூடுதலாக ஆங்கிலத் தட்டச்சுகள் இருத்தல். சில அலுவலகங்களில் மூன்றில் இரண்டு பங்கு அளவில்கூட ஆங்கிலத் தட்டச்சுகள் இருத்தல்.
4. தலைமைச் செயலகத்துறைகளில் அவற்றிற்கு அனுமதிக்கப் பட்ட 35 விழுக்காட்டிற்குக் கூடுதலாகவும், தன்னாட்சி நிறுவன அலுவலகங்களில் 50 விழுக்காட்டிற்குக் கூடுதலாகவும் ஆங்கிலத் தட்டச்சுகள் இருத்தல்.
5. அரசு ஒப்பளிப்பு இல்லாத நிலையிலும் வேறு ஏதேனும் ஒரு வகையில் பெறப்பட்ட ஆங்கிலத் தட்டச்சுகளை வைத்துப் பயன்படுத்துதல்.
6. உரிய அளவுக்குமேல் உள்ள ஆங்கிலத் தட்டச்சுகளை உடன் ஒப்படைத்துவிட்டு அவற்றிற்கீடாகத் தமிழ்த் தட்டச்சுகளைப் பெற நடவடிக்கை எடுக்காமலிருத்தல்.
7. ஆங்கிலத் தட்டச்சுகளின் தேவைக்குரிய காரணங்களை அடுக்கிக் கூறி அவற்றைத் தொடர்ந்து வைத்திருத்தல்; தொடர்ந்து வைத்திருக்க அனுமதி / விதிவிலக்கு வேண்டுதல்.

## கையொப்பம்

அரசு அலுவலர்கள், பணியாளர்கள் அனைவரும் அனைத்து இனங்களிலும் தமிழிலேயே ஒப்பமிடல் வேண்டும் என்று அரசு ஆணையிட்டுள்ளது. ஆயினும் இன்னும் பல அலுவலகங்களில் இவ்வாணை முழுமையாகச் செயற்படுத்தப்படவில்லை. பல அலுவலகங்களில் ஆய்வினை மேற்கொள்ளுமபோது கீழ்க்காணும் குறைபாடுகள் இருப்பதைக் காணமுடிகிறது.

1. வருகைப் பதிவேடு, பிற பதிவேடுகள், கோப்புகள், பட்டிகள், செவ்வைப்படிகள் முதலியவற்றில் பலர் ஆங்கிலத்தில் சுருக்கொப்பமிடுதல்.
2. பெயர்களைத் தமிழிலும் - தலைப்பெழுத்துகளை (Initials) ஆங்கிலத்திலும் எழுதுதல்.
3. சம்பளப்பட்டி போன்ற பல்வகைப் பட்டிகள், கருவூலப் பட்டிகள் பதிவேடு போன்ற பல்வகைப் பதிவேடுகள், கடிதங்கள் முதலியவற்றில் ஆங்கிலத்தில் முழு ஒப்பமிடுதல்.
4. தம் கையொப்பத்தை ஆங்கிலத்தில் முத்திரையாகச் செய்து வைத்துக் கொண்டு பயன்படுத்துதல்

5. தமிழ் ஒப்பம், ஆங்கில ஒப்பம் என அறிய இயலாதவாறு ஒரு குறியீடு என்னும் வகையில் ஒப்பமிடுதல்.
6. தமிழில் ஒப்பமிட்டால் ஏற்க மறுக்கிறார்கள் / ஏற்பதில் சிக்கல் ஏற்படும் என்றெல்லாம் ஏதாவது பொருந்தாத காரணங்களைக் கற்பித்துக் கொண்டு தொடர்ந்து ஆங்கிலத்திலேயே ஒப்பமிட்டுவருதல்.
7. ஆங்கிலத்தில் அமைந்த வரைவு / கடிதம் என்பதற்காக அவற்றில் ஆங்கிலத்தில் ஒப்பமிடுதல்.

## சீர்திருத்த எழுத்துகள்

சீர்மை, பயன்படுத்துதற்கு எளிமை முதலியவற்றைக் கருதிப் பொதுவாகவே மொழிகளின் எழுத்து வரிவடிவங்கள் காலந்தோறும் மாற்றம் செய்யப் பெற்று வந்துள்ளன. நம் தமிழ் மொழியிலும் எழுத்து வரி வடிவங்கள் பல்வேறு கால கட்டங்களில் சீர்திருத்தம் செய்யப்பெற்றுள்ளன. இவ்வகையில் தந்தை பெரியார் நீண்ட காலமாகப் பயன்படுத்தி வந்த தமிழ் எழுத்துச் சீரமைப்பை ஏற்றுக் கொண்டு அரசு ஆணையிட்டதை முந்தைய இயலில் கண்டோம்.

அரசு அலுவலக நடைமுறைகளில் இச்சீர்திருத்த எழுத்துகளிலேயே எழுதுதல் வேண்டும். மிகப்பலர் இவ்வெழுத்து களில் எழுதுகின்றனர். ஆயினும் சிலர் 'ௗ', 'ணை' போன்ற பழைய வரிவடிவ அமைப்பிலேயே எழுதுவதையும் காண முடிகிறது.

## திருவள்ளுவராண்டு, தமிழாண்டு, தமிழ்த்திங்கள், நாள் குறிப்பிடல்

அரசு அலுவலகங்களிலிருந்து அனுப்பப்படும் கடிதங்கள், வெளியிடப்படும் ஆணைகள், வெளியீடுகள் முதலியவற்றில் அவற்றிற்குரிய ந.க. எண்ணுடன் ஆங்கில நாள் (நாள், திங்கள், ஆண்டு) மட்டும் குறிப்பிடப்பட்டு வந்தது. அதனுடன் அதற்கு நிகரான தமிழ் ஆண்டு, தமிழ்த்திங்கள் ஆகியவற்றின் பெயரையும், தமிழ்த் திங்களின் நாளினையும், திருவள்ளுவராண்டினையும் குறித்திடல் வேண்டுமென அரசு ஆணையிட்டுள்ளதை முன்பு அறிந்தோம். பல அலுவலகங்களில் இதனைப் பின்பற்றாத நிலை காணப்படுகிறது.

## முத்திரைகள்

ஆட்சிமொழித் திட்டச் செயற்பாட்டின்படி அலுவலகங்களின் செயற்பாடுகள் அனைத்தும் தமிழிலேயே அமைதல் வேண்டும். இதற்கிணங்க அலுவலகப் பயன்பாட்டில் முத்திரைகளும் தமிழிலேயே இடப்படவேண்டியது இன்றியமையாததாகும். முத்திரைகளைப்

பயன்படுத்துவதில் பல அலுவலகங்களில் கீழ்க்காணும் குறைபாடுகள் காணப்படுகின்றன.

1. வரப்பெறும் கடிதங்களில் இடப்படும் நாள் முத்திரை ஆங்கிலத்தில் இருத்தல்.
2. முத்திரை தமிழில் இருந்தாலும் திங்களின் பெயர் ஆங்கில எழுத்துகளில் இருத்தல்.
3. பதிவேடுகள், கோப்புகள், கடிதங்கள் முதலியவற்றில் பதவிப் பெயர்களுக்கான ஆங்கில முத்திரைகள் பயன்படுத்தப்படுதல்.
4. ஊதிய உயர்வு, விடுப்பு ஒப்பளிப்பு, ஈட்டிய விடுப்பு ஒப்புவிப்பு, பணிச்சான்று முதலிய பதிவுகளுக்கு ஆங்கில முத்திரைகளைச் செய்து வைத்துக் கொண்டு பணிப்பதிவேடுகளில் இடுதல்.
5. செலவுச் சீட்டுகள் மீதான அனுமதியாணையையும், வழங்கப்பட்டது, நீக்கப்பட்டது என்பன போன்றவற்றையும் ஆங்கில முத்திரைகளாகச் செய்து வைத்துக் கொண்டு பயன்படுத்துதல்.
6. ஒப்பளிப்பு ஆணை/ செயல்முறை ஆணை தமிழில் இருந்தாலும் அவற்றில் கணக்குத் தலைப்புகளை ஆங்கில முத்திரையாக இடுதல்.
7. காலமுறை அறிக்கைகளில் இடம்பெற வேண்டிய விவரத்தை ஆங்கிலத்தில் முத்திரையாகச் செய்து வைத்துக்கொண்டு அதனை இடுதல்.
8. கடிதங்களை அனுப்பும்போது கடித உறையில் இ.அ.ப. மட்டும், பதிவஞ்சல், ஒப்புகைப் பதிவஞ்சல், அனுப்புகை எழுத்தர் முதலியவற்றிற்குரிய ஆங்கில முத்திரைகளை இடுதல்.

## பெயர்ப்பலகைகள்

அலுவலரின் பெயரையும், பதவிப் பெயரையும் குறிக்கும் பெயர்ப்பலகைகள் அலுவலரின் அறை வாயிலிலும், மேசையிலும் வைக்கப்படுகின்றன. பல அலுவலகங்களில் இப்பெயர்ப்பலகைகள் ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது

## தகவல் பலகை

அலுவலகத்தில் பணியாற்றிய, பணியாற்றும் அலுவலகத் தலைவர்களின் பெயர்கள் விவரம், பணியாற்றும் அலுவலர்கள் விவரம்,

அலுவலகத்தில் மேற்கொள்ளப்படும் பணிகள் - முன்னேற்ற நிலை பற்றிய விவரம் ஆகியவற்றைத் தெரிவிக்கும் தகவல் பலகைகள் அலுவலக நுழைவாயில், அலுவலகத் தலைவரின் அறை ஆகிய இடங்களில் வைக்கப்பட்டிருக்கும். பல அலுவலகங்களில் இவை தமிழில் எழுதி வைக்கப்பட்டிருப்பினும் சில அலுவலகங்களில் ஆங்கிலத்தில் எழுதி வைக்கப்பட்டுள்ளன.

## மேலலுவலர்கள் சுட்டிக்காட்டாமை

பொதுவாக எந்த ஒரு நிலையிலும் அறிந்தோ அறியாமலோ தவறுகள் ஏற்படுவது இயல்பு. அந்நிலையில் பொறுப்பானவர்கள் அத்தவறுகளைச் சுட்டிக் காட்டுதல் வேண்டும். அப்போதுதான் அவை திருத்திக்கொள்ளப்பட வாய்ப்பமையும். ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தைப் பொறுத்தவரையில் பல அலுவலகங்களில் பொறுப்பானவர்களால் தவறுகள் சுட்டிக்காட்டப்படுவதில்லை. பணியாளர்கள் தமிழில் எழுதி அனுப்பினாலும், ஆங்கிலத்தில் எழுதி அனுப்பினாலும் அவற்றை அப்படியே மேலலுவலர்கள் ஏற்றுக் கொள்ளும் நிலை காணப்படுகிறது.

## கடிதப் போக்குவரத்துப் பதிவேடு

ஒவ்வோர் அலுவலகத்திலும் ஒவ்வொரு நாளும் பெறப்படும்/ அனுப்பப்படும் தமிழ்க் கடிதங்களின் எண்ணிக்கை, ஆங்கிலக் கடிதங்களின் எண்ணிக்கை பற்றிய விவரத்தைப் பதிவு செய்து பதிவேடு ஒன்று பேணப்படல் வேண்டும். பல அலுவலகங்களில் இப்பதிவேடு பேணப்படுவதே இல்லை; அல்லது அதில் முறையாகப் பதிவு செய்யப்படுவதில்லை.

### படிவங்கள்

விடுப்புகள், அனுமதிகள், முன்பணங்கள் வேண்டி அலுவலகத்தில் விண்ணப்பிப்பதற்கான விண்ணப்பப்படிவங்கள், செயல்முறை ஆணைகள், காலமுறை அறிக்கைகள் முதலியவற்றிற்குரிய படிவங்கள் ஆகியவற்றை ஆங்கிலத்தில் அச்சு / உருளச்சு செய்து வைத்துக் கொண்டு நீண்ட நாளைக்கு அவற்றைப் பயன்படுத்தி வரும் போக்கு பல அலுவலகங்களில் உள்ளது.

## விதிகள், விதித் தொகுப்புகள், நடைமுறை நூல்கள்

ஒவ்வொரு துறையும் தம் துறை அலுவலர்கள், பணியாளர்கள், பணிகள் பற்றிய விதிகளையும், விதித் தொகுப்புகளையும், நடைமுறை நூல்களையும் கொண்டுள்ளன. பல அலுவலகங்களில் இவை ஆங்கிலத்தில் உள்ளன.

## ஆட்சிச் சொல்லகராதிகள், சிறப்புச் சொல் துணையகராதிகள்

பொதுவாக நிருவாக நடைமுறையில் பயன்படக்கூடிய சொற்களைத் தொகுத்து (ஆங்கிலத்திற்கிணையான தமிழ்ச் சொற்கள்) 'ஆட்சிச் சொல்லகராதி' எனும் நூல் தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் வாயிலாகத் தயாரிக்கப்பட்டு அனைத்துத் துறைகளின் அலுவலகங்களுக்கும் வழங்கப்பட்டுள்ளன. அதேபோன்று ஒவ்வொரு துறைக்கும் உரிய - அத் துறை சார்ந்த சொற்களை மட்டும் தொகுத்துச் 'சிறப்புச் சொல் துணையகராதிகள்' (ஆங்கிலம் - தமிழ்) எனும் நூல்கள் தயாரிக்கப்பட்டு அவ்வத்துறைகளுக்கு வழங்கப்பட்டுள்ளன. பல அலுவலகங்களில் இந்நூல்கள் இல்லாதிருக்கும் நிலை காணப்படுகிறது.

## ஆட்சிமொழித் திட்ட ஆய்வு தொடர்பானவை

அரசு அலுவலகங்கள் தமிழ் வளர்ச்சித் துறையால் ஆட்சிமொழிச் செயலாக்கம் தொடர்பாக ஆய்வு செய்யப்படுகின்றன. இத்தொடர்பில் பல அலுவலகங்களில் பின்வரும் குறைபாடுகள் காணப்படுகின்றன.

1. வாலாயமான ஒரு காரணத்திற்காகக்கூட ஆட்சிமொழித் திட்ட ஆய்வினை ஒத்திவைக்கக் கோருதல்.
2. அலுவலகங்களில் ஆட்சிமொழித் திட்ட ஆய்வு மேற்கொள்ளப்படும் நாளன்று அலுவலகத் தலைவரோ அடுத்த நிலையில் உள்ள பொறுப்பான அலுவலரோ அலுவலகத்தில் இல்லாதிருத்தல்.
3. தமிழ் பயன்படுத்தப்படும் நிலை குறித்து அறிந்து கொள்ளும் நோக்கில் அவ்வலுவலகத்திற்கு முன் கூட்டியே அனுப்பிவைக்கப்பட்டிருந்த வினாப் பட்டியை நிறைவு செய்து ஆய்வு நாளன்று அளிக்காமை.
4. கலந்துரையாடல் கூட்டத்திற்கு ஆவன செய்யாமை அல்லது ஒத்திவைக்கக் கோருதல்.
5. ஆய்வு முடிந்தபின் தமிழ் வளர்ச்சித் துறையால் அனுப்பப்படும் ஆய்வறிக்கைக்குப் பல்வேறு நினைவூட்டுகளுக்குப் பிறகும், பல திங்கள் கழித்தும் குறைகளைவு அறிக்கையை அனுப்பி வைத்தல்.
6. 'குறை களைவு அறிக்கை' பத்திவாரியாகவும், முழுமையானதாகவும் அமையாமல் பொதுப்படையான மறுமொழியாக அமைதல்.
7. உடனடியாகக் களையப்பட வேண்டிய - களையப்படக்கூடிய குறைகளைக்கூடக் களையாமல்,

'இவற்றைக் களைவதற்குரிய நடவடிக்கை எடுக்கப்படும்' என்ற வகையில் மறுமொழி தருதல்.

8. பல்வேறு நினைவூட்டுகளுக்குப் பிறகும் குறைகளைவு அறிக்கையை அனுப்பாமலேயே இருத்தல்.

## பொதுவாகக் காணப்படுவன

மேற்குறிப்பிடப்பெற்ற குறைபாடுகள் மட்டுமன்றி வேறுசில பொதுவான குறைபாடுகளும் உள்ளமையைக் காண முடிகிறது. அவையாவன :

1. 'எனக்குத் தமிழில் சரியாக எழுத வராது' என்று சொல்வதில் ஒரு பெருமை இருப்பதாகக் கருதிக்கொண்டு ஆங்கிலத்தில் எழுதுதல். தமிழில் நன்கு எழுதுகின்ற ஆற்றல் இருந்தாலும் அதில் ஆர்வமில்லாதிருத்தல். ஆங்கிலத்திலேயே எழுதிப் பழகிவிட்டதால் அதில் எழுதுவதுதான் எளிதாக இருக்கிறது எனச் சொல்லிக்கொண்டும், தாம் பிற மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர் என்று சொல்லிக் கொண்டும் சிலர் தொடர்ந்து ஆங்கிலத்திலேயே எழுதுதல்.

2. தமிழில் எழுதினால் தனக்கு ஆங்கிலம் தெரியாது என்று பிறர் கருதுகின்றனர் அல்லது கருதக்கூடும் என்றும், இதனால் தனது மதிப்பு குறைகிறது அல்லது குறையக்கூடும் என்றும் தாழ்வுமனப்பான்மையுடன் தொடர்ந்து ஆங்கிலத்தில் எழுதுதல்.

3. தம் அலுவலகத்தின் / துறையின் உயர் அலுவலர் பிற மாநிலத்திலிருந்து வந்தவர்; அவருக்குத் தமிழ் அவ்வளவாகத் தெரியாது என்பதால் ஆங்கிலத்தில் எழுதியனுப்புகிறோம்'' என்றும், 'அரசுக்கு அனுப்பப்படும் கடிதங்கள் என்பதால் இவற்றை ஆங்கிலத்தில் எழுதுகிறோம்' என்றும் சொல்லிக் கொண்டு ஆங்கிலத்தில் எழுதுதல்

4. ''அரசிடமிருந்தும் , தலைமை அலுவலகங்களிலிருந்தும், பிறதுறை அலுவலகங்களிலிருந்தும் வரும் அரசாணை களும், கடிதங்களும் ஆங்கிலத்தில் உள்ளன; அதனால் அவற்றிற்கு ஆங்கிலத்திலேயே மறுமொழியனுப்பு கிறோம்'' என்று சொல்லிக்கொண்டு ஆங்கிலத்தில் எழுதுதல்.

5. ''இவை தொழில் நுட்பம் சார்ந்த இனங்கள் என்பதால் ஆங்கிலத்தில் எழுத வேண்டியுள்ளது'' எனச் சொல்லிக் கொண்டு தொடர்ந்து ஆங்கிலத்தில் எழுதி வருதல்

6. ''ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச்சொற்கள் தெரியவில்லை; எனவே ஆங்கிலத்திலேயே எழுது கிறோம்'' என்று எழுதுதல்.
7. ''ஆங்கிலத்தில் வரும் கடிதங்களின் பொருட் சுருக்கத்தை - பொருளை நாங்கள் மொழி பெயர்த்து எழுதினால் தவறு வந்துவிடுமோ என்ற அச்சத்தில் நாங்களும் அவ்வினங்களைப் பதிவேடுகளில் ஆங்கிலத்திலேயே எழுதுகிறோம்'' என்று சொல்லி எழுதிவருதல்.
8. ''நாங்கள் புதிதாக எழுதவில்லை; முன்கோப்புகளில் இப்படித்தான் எழுதப்பட்டுள்ளது; அதைப்பார்த்துத் தான் நாங்கள் எழுதுகிறோம்'' என்று சொல்லிக் கொண்டு ஆங்கிலத்தில் எழுதுதல்.
9. ''இவை கணிப்பொறிப் பயன்பாட்டிற்காகத் தயாரித்து அனுப்பப்படுகின்றன : எனவே இவற்றை ஆங்கிலத்தில் தயாரிக்கிறோம்'' என்று சொல்லி ஆங்கிலத்தில் எழுதுதல் முதலியன.

## தொகுப்புரை

அரசு அலுவலகங்களில் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் பற்றிய ஆய்வு தமிழ் வளர்ச்சித் துறையால் மேற்கொள்ளப்படும் விவரம் பற்றியும், இத்திட்டத்தில் காணப்பட்டுள்ள முன்னேற்றம் பற்றியும், பல்வேறு அலுவலகங்களில் ஆய்வின்போது கண்டறியப்பட்ட பொதுவான குறைபாடுகள் பற்றியும் இவ்வியலில் விளக்கப்பட்டன இக்குறைபாடுகளைக் களைவதற்கு மேற்கொள்ளப்படும் நடவடிக்கை விவரங்கள் அடுத்த இயலில் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன.

# இயல் நான்கு

## குறைகளைவு நடவடிக்கைகள்

அரசு அலுவலகங்கள் , அரசுசார் தன்னாட்சி நிறுவனங்களின் அலுவலகங்கள்ஆகியவற்றில் தமிழ் வளர்ச்சித் துறையால் பல ஆண்டுகளாக மேற்கொள்ளப்பெறும் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்க ஆய்வுகளால் இத்திட்டச் செயலாக்கத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம், ஆய்வின்போது காணப்படுகின்ற குறைபாடுகள் ஆகியன பற்றி முந்தைய இயலில் விளக்கப் பெற்றது. திட்டச் செயலாக்கம் முழுமை பெற்றிடக் குறைபாடுகள் களையப் பெற வேண்டியது மிகவும் இன்றியமை யாததாகும். இதனைக் கருத்திற் கொண்டு தமிழ் வளர்ச்சித் துறை பல்வேறு வகையில் குறைகளைவு நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது. அந்நடவடிக்கைகள் பற்றி ஈண்டுக் காணலாம். இவ்வியலில் கூறப்பட்டுள்ள செய்திகள் சில இதற்கு முன்னும் பின்னும் உள்ள இயல்களில் (அரசாணைகள், திட்டங்கள் எனும் நோக்கில்) விளக்கமாக இடம் பெற்றுள்ளன. எனினும் அவை குறைகளைவு நடவடிக்கை களாகவும் அமைவதால் அவற்றின் இன்றியமையாமையும், இயைபும் கருதி இவ்வியலிலும் சுருக்கமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

### ஆய்வுகள் மேற்கொள்ளப் பெறுதல்

திட்டச் செயலாக்கத்தில் உள்ள குறைபாடுகளைக் கண்டறிய அலுவலகங்களில் முறையாக ஆய்வுகள் மேற்கொள்ளப் பெற வேண்டியது இன்றியமையாததாகும். எனவே தமிழ் வளர்ச்சித் துறையால் ஆட்சி மொழித் திட்ட ஆய்வுப் பணிகள் முறையாகவும் தொடர்ச்சியாகவும் மேற்கொள்ளப் பெற்று வருகின்றன. தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் தலையாய பணிகளுள் முதன்மையானதாக ஆய்வுப் பணி விளங்குகிறது. முந்தைய இயலில் கூறப்பட்டவாறு துறைத்தலைமை அலுவலகங்களையும், தன்னாட்சி நிறுவனங்களின் தலைமை அலுவலகங்களையும்,மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களையும் தமிழ் வளர்ச்சி இயக்குநர் முறையாக ஆய்வு செய்கிறார். மண்டலத் தமிழ் வளர்ச்சித் துணை இயக்குநர்களும்,ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்களும் மாவட்டங்களில் உள்ள அலுவலகங்களை முறையாக ஆய்வு செய்கின்றனர்.

### ஆய்வின்போது ஐயப்பாடுகளைப் போக்குதல்

ஆட்சிமொழிச் சட்டம் பற்றியும்,திட்டச் செயலாக்கம் பற்றியும் பலர் முழுமையாக அறிந்து கொள்ளாத நிலையை ஆய்வின்போது

காணமுடிகிறது. தமிழ் வளர்ச்சித் துறை அலுவலர்கள் ஆய்வுக்கு வந்து வற்புறுத்துவதால்தான் தமிழில் எழுத வேண்டியுள்ளது எனப் பலர் எண்ணுகின்றனர். கட்டாயம் தமிழில்தான் எழுத வேண்டுமா? எழுதாவிட்டால் என்ன? தமிழ்நாட்டில்தான் இப்படித் தமிழில் எழுத வேண்டும் என்று சொல்கிறார்கள்; பிற மாநிலங்களில் இப்படியெல்லாம் இல்லை - என்றெல்லாம் பலர் அவரவர் மனம்போன போக்கில் பேசிக்கொண்டும், இத்திட்டச் செயலாக்கம் பற்றிப் பல்வேறு ஐயப்பாடுகளை உருவாக்கிக் கொண்டும் உள்ளனர். இத்தகைய தேவையற்ற ஐயப்பாடுகள் ஆய்வின்போது போக்கப் பெறுகின்றன. மற்ற மாநிலங்களிலும் அம்மாநில மொழிகளிலேயே அரசுப் பணிகள் நடைபெறுவதைச் சுட்டிக்காட்டித் தமிழ்நாட்டில் ஆட்சிமொழிச் சட்டப்படி அனைவரும் தமிழில்தான் எழுத வேண்டும் என வலியுறுத்தப் படுகிறது.

## கலந்துரையாடல் கூட்டம் நடத்துதல்

தமிழ் வளர்ச்சி இயக்குநரும், மண்டலத் துணை இய்க்குநர்களும்,உதவி இயக்குநர்களும் அலுவலகங்களில் ஆய்வு செய்து ஆய்வுக்குறிப்புகளை எடுத்துக் கொள்வதுடன் அவ்வலுவலகங்களில் கலந்துரையாடல் கூட்டங்களையும் நடத்துகின்றனர். அக்கூட்டங்களில் அலுவலகத் தலைவரும், அலுவலர்களும், பணியாளர்களும் கலந்து கொள்கின்றனர். இக்கலந்துரையாடலின்போது :

1. ஆட்சிமொழித் திட்டம் தொடர்பாக அவ்வலுவலகப் பணியாளர்களும், அலுவலர்களும் கொண்டுள்ள ஐயப்பாடுகள் தமிழ் வளர்ச்சி இயக்குநராலும், தமிழ் வளர்ச்சித் துறையின் அலுவலர்களாலும் போக்கப் பெறுகின்றன
2. ஆட்சிமொழி வரலாறு,இந்திய அரசமைப்புச் சட்டம்,தமிழ்நாட்டில் ஆட்சிமொழிச் சட்ட நிறைவேற்றம், இது தொடர்பாக வெளியிடப் பெற்றுள்ள ஆணைகள், விதிவிலக்கு அளிக்கப் பெற்றுள்ள இனங்கள்,அரசு அலுவலகங்களில் ஆட்சி மொழித்திட்டத்தைச் செயற் படுத்துவதில் அலுவலர் - பணியாளர்களுக்குள்ள தவிர்க்க முடியாக் கடமைகள் முதலியவை விளக்கப் பெறுகின்றன.
3. ஆய்வின்போது காணப்பட்ட குறைபாடுகள் நேரில் சுட்டிக் காட்டப்படுகின்றன. அவற்றில் உடனே களையப்பட வேண்டிய குறைகள் பற்றி எடுத்துக் கூறப்படுகிறது.

4. அ) பதிவேடுகள் எவற்றிற்கும் விதிவிலக்கு இல்லை என்பதும், பணம் தொடர்பான பதிவேடுகள் உள்ளிட்ட துறை சார்ந்த பதிவேடுகள் அனைத்தும் தமிழிலேயே எழுதப்பட வேண்டும் என்பதும் வலியுறுத்தப் படுகிறது. சிலர் பதிவேடுகளின் தலைப்புகள்/ கட்டங்கள் தமிழில் இருந்தால் தமிழில் எழுதுகின்றனர்; ஆங்கிலத்தில் இருந்தால் ஆங்கிலத்தில் எழுதுகின்றனர். பதிவேடுகள் எப்படியிருந்தாலும் தமிழும் ஆங்கிலமும் கலந்தும் எழுதுகின்றனர். இத்தகைய நேர்வுகளில் பதிவேடுகள் எப்படியிருப்பினும் அவற்றில் தமிழில் மட்டுமே எழுத வேண்டும் என்றும், புதிதாகப் பதிவேடுகளை அச்சிடும் போது தமிழிலேயே அச்சிட நடவடிக்கை மேற்கொள்ளுமாறும் அறிவுறுத்தப்படுகிறது. பதிவேடுகளை ஆய்வு செய்து அலுவலர்கள் எழுதும் குறிப்புகள், தமிழிலேயே எழுதப்பட வேண்டுமென்றும், கையொப்பங்களும் முத்திரைகளும் தமிழிலேயே அமைதல் வேண்டும் என்றும் வலியுறுத்தப்படுகிறது. மேலும் பதிவேடுகளைத் தமிழில் மட்டுமே அச்சிட்டளிக்க வேண்டும் என்றும், தமிழ் வளர்ச்சி இயக்குநரின் ஒப்புதலின்றி எந்த அலுவலகத்திற்கும் ஆங்கிலத்தில் பதிவேடுகளை அச்சிட்டு வழங்கக் கூடாது என்றும் எழுதுபொருள் துறைக்கு அரசு ஆணையிட்டுள்ளது.

ஆ) கோப்புகளில் அலுவலகக் குறிப்புகள், வரைவுகள் அனைத்தும் முழு அளவில் (விதிவிலக்கினம் தவிர) தமிழிலேயே அமைதல் வேண்டும் என வலியுறுத்தப் படுகிறது. பிற அலுவலகங்களிலிருந்து ஆங்கிலத்தில் கடிதம் வந்தால் ஆங்கிலத்தில் மறுமொழி எழுதும் நடைமுறையைக் கைவிட்டு, அனைத்துக் கடிதங்களுக்கும் தமிழிலேயே மறுமொழி வரைவுகள் அமைய வேண்டுமென வற்புறுத்தப்படுகிறது. பணியாளர்கள் தமிழில் எழுதியிருப்பினும் அலு வலர்கள் ஆங்கிலத்தில் குறிப்புகளையும், ஆணை களையும் எழுதக்கூடாது என்பதும், இந்நிலை ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தைப் பின்னுக்குக் கொண்டுசென்றுவிடும் என்பதும் எடுத்துக் கூறப்படுகிறது. ஆங்கிலத்தில் எழுதிவரும் கோப்பினைப் பிரிவுத் தலைவர்களும், அலுவலர்களும்

ஏற்காது தமிழில் எழுதியனுப்புமாறு தெரிவித்துத் திருப்புதல் வேண்டும் என்றும், இதனை உறுதியாகப் பின்பற்றினால் இவ்வலுவலகத்தில் ஆங்கிலத்தில் எழுதுவது முழுமையாகத் தவிர்க்கப்பட்டுவிடும் என்றும் எடுத்துக் கூறப்பெறுகிறது.

இ) செயல்முறை ஆணைகள்/ஒப்பளிப்பு ஆணைகள் தமிழிலேயே வெளியிடப்பெற வேண்டும் என வலியுறுத்தப்படுகிறது. கருவூலத்திற்குப் பட்டியுடன் வைக்கப்படுகிறது என்பதற்காகவும், மாநிலக் கணக்காயருக்கு ஆணையின் படி (பொது வைப்பு நிதி, முன்பண ஒப்பளிப்பு முதலியன) அனுப்பப்படுகிறது என்பதற்காகவும் செயல்முறை ஆணைகளை ஆங்கிலத்தில் வெளியிடக்கூடாது என்பதும், நமது அலுவலர்களுக்கும்/பணியாளர்களுக்கும் நம் அலுவலகத்தில் வெளியிடும் ஆணைகள் என்பதால் அவை தமிழிலேயே வெளியிடப்பட வேண்டியது இன்றியமையாதது என்பதும் தெளிவுறுத்தப்படுகிறது. இவ்வாணைகளில் கணக்குத் தலைப்புகளும் தமிழிலேயே அமையலாம் என்றும் விளக்கப்படுகிறது.

ஈ) காலமுறை அறிக்கைகள் அனைத்தும் தமிழிலேயே அனுப்பப்படல் வேண்டும் என எடுத்துக் கூறப் பெறுகிறது. தலைமை அலுவலகத்தில் தந்த படிவம் என்பதற்காக அந்தப் படிவத்தில் ஆங்கிலத்திலேயே அறிக்கைகளை அனுப்புதல் கூடாது என்றும், அவற்றைத் தமிழாக்கம் செய்து அறிக்கைகளை அனுப்புதல் வேண்டும் என்றும், தலைமை அலுவலகங்கள் காலமுறை அறிக்கைப் படிவங்களைத் தமிழாக்கம் செய்தனுப்பிச் சார்நிலை அலுவலகங்களி லிருந்து தமிழிலேயே காலமுறை அறிக்கைகளைப் பெறவேண்டும் என்றும் அறிவுறுத்தப்படுகிறது. அறிக்கை விவரம் கணிப் பொறியில் செலுத்தப் பெறுகிறது எனும் காரணத்தைக் காட்டி அறிக்கைகளை ஆங்கிலத்தில் தயாரிப்பது கூடாது என்பதும், தமிழில் அனுப்பப்பெறும் விவரங்களையும் கணிப்பொறியில் செலுத்த முடியும் என்பதும் விளக்கப் பெறுகிறது.

5. சில ஆங்கிலச் சொற்களுக்கு நேரான தமிழ்ச் சொற்கள் தெரியாததால்தான் நாங்கள் ஆங்கிலத்திலேயே கடிதங்களை எழுதி வந்தோம் என ஆய்வின்போது பலர் தெரிவிக்கின்றனர். இதைக் கருத்திற் கொண்டு

அத்தகைய சொற்களுக்கும், மேலும் அத்துறையில் பயன்படுத்தப்படும் ஆங்கிலச் சொற்களுக்கும், கலந்துரையாடல் கூட்டத்தின்போது நேரில் கேட்கப்படும் சொற்களுக்கும் உரிய தமிழாக்கங்கள் தமிழ் வளர்ச்சி இயக்குநராலும், ஆய்வு மேற்கொள்ளும் அலுவலர்களாலும் கலந்துரையாடல் கூட்டத்திலேயே அளிக்கப் பெறுகின்றன. மேலும் ஆட்சிச் சொல் அகராதி, சிறப்புச் சொல் துணையகராதிகள், கழக ஆங்கிலம் - தமிழ்க் கையகராதி முதலியவற்றின் துணையுடன் தமிழில் சிறந்த முறையில் எழுதமுடியும் என்பதும் விளக்கப்பெறுகிறது.

6. தமிழில் எழுதினால் தமக்கு ஆங்கிலம் தெரியாது என்று மற்றவர்கள் நினைப்பர் என்று கருதிக் கொண்டும், ஆங்கிலத்தில் எழுதுவதே பெருமையானது என்ற தவறான எண்ணத்திலும் பலர் ஆங்கிலத்திலேயே தொடர்ந்து எழுதும் அவலநிலையும் தாழ்வுமனப் பான்மையும் அகலும் வகையில் பல்வேறு விளக்கங்களும், தெளிவுரைகளும் வழங்கப் படுகின்றன. தாய்மொழியின் சிறப்பு, குறிப்பாகத் தமிழ் மொழியின் தொன்மை, மேன்மை, சொல்வளம் முதலிய சிறப்பியல்புகள் எடுத்துக் கூறப்படுகின்றன. புலவர்கள், கவிஞர்கள், அறிஞர்கள் போன்றோரின் மேற்கோள்களும் எடுத்துக் கூறப் பெற்றுத் தமிழ்ப் பற்றும், உணர்வும் ஊட்டப் பெறுகிறது. ஆட்சி மொழிச் சட்டத்திற்கிணங்கவும், மிகச் சிறந்த மொழிக்கு நாம் உரிமையுடையவர்கள் எனும் வகையிலும் அரசு அலுவலர்களும்,பணியாளர்களும் தமிழில் எழுது வதையே பெருமையாகவும்,பேறாகவும் கருதிச் செயற்பட வேண்டும் எனவும் எடுத்துக் கூறப் பெறுகிறது. ஆய்வு செய்யப்பட்ட அலுவலகத்தில் காணப்பட்ட பிற குறைபாடுகள் அனைத்தும் சுட்டிக்காட்டப்பட்டு, அவையனைத்தும் உடன் களையப்பட வேண்டும் என வலியுறுத்தப்படுகிறது.

## ஆய்வறிக்கை அனுப்புதல்

ஒவ்வொரு அலுவலகத்தையும் ஆய்வு செய்து வந்தபின் அவ்வலுவலகத்திற்குரிய ஆய்வறிக்கை தவறாது அனுப்பி வைக்கப் பெறுகிறது. ஆட்சிமொழித்திட்டச் செயலாக்கத்தில் அவ்வலுவலகத்தில் காணப்பட்ட குறைபாடுகள், குறைகளைக் களைய எடுக்கப்பட

வேண்டிய நடவடிக்கைகள் ஆகியன இவ்வறிக்கையில் சுட்டிக் காட்டப் பெறுகின்றன. குறைகளைக் களைந்து பத்திவாரியான குறைகளைவு அறிக்கையை விரைந்து அனுப்பிவைக்குமாறு தெரிவிக்கப்படுகிறது. இவ்வறிக்கையின் படி அவ்வலுவலகத்தின் தலைமை அலுவலகத்திற்கும் அனுப்பப்பெறுகிறது. குறைகளைவு அறிக்கையை அனுப்பி வைக்காத அலுவலகங்களுக்கு மீண்டும் நினைவூட்டனுப்பித் தொடர் நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பெறுகின்றன. இத்திட்டச் செயலாக்கத்தில் அக்கறை / ஆர்வம் / முன்னேற்றம் காட்டாத அலுவலர்கள், பணியாளர்கள் பற்றி அவர்களின் மேலலுவலர்களுக்கும், தலைமை அலுவலகத்திற்கும் தெரிவித்து உரிய ஒழுங்கு நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன.

## மொழிபெயர்ப்புப் பணிகள்

ஆட்சிமொழித் திட்டப்படி அலுவலகங்களின் நடைமுறைகள் தமிழிலேயே அமைதல் வேண்டும். இதை வலியுறுத்துவதோடு மட்டும் தமிழ் வளர்ச்சித் துறை அமைந்து விடுவதில்லை. இச் செயற்பாட்டிற்கு உறுதுணைபுரியும் வகையில் அலுவலகங்களுக்குத் தேவையான மொழி பெயர்ப்புகளையும் இத்துறை செய்தளிக்கிறது. இவ்வகையில் ஆய்வின்போது அவ்வலுவலகத்தால் வேண்டப்பெறும் மொழிபெயர்ப்பு கள் உடனுக்குடன் அளிக்கப் பெறுகின்றன. பதிவேடுகளிலும், கோப்புகளிலும், கடிதங்களிலும், அறிக்கைகளிலும் காணப்படும் ஆங்கிலப் பகுதிகளுக்குரிய தமிழ் மொழிபெயர்ப்புகளைக் கூறித் தமிழில் எழுதுமாறு நெறிப்படுத்தப்படுகிறது.மேலும் அலுவலகங்களில் ஆங்கிலத்தில் உள்ள படிவங்கள், நடைமுறை நூல்கள், விதிகள்,விதித் தொகுப்புகள் முதலியவை பெறப்பட்டுத் தமிழில் மொழிபெயர்த்து அளிக்கப்படுகின்றன. ஆட்சிமொழிச் செயலாக்கத்திற்கு மிகவும் இன்றியமையாத இப்பணி தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

## அகராதிகள் தயாரித்து வழங்கல்

### அ) ஆட்சிச் சொல் அகராதி

ஆங்கிலேயர் ஆட்சியின்போது அரசு நிருவாகம் முழுவதும் ஆங்கிலத்திலேயே நடைபெற்றது. இதனால் 'ஆட்சிச் சொற்கள், (Administrative Terms) பலவும் ஆங்கிலத்திலேயே அமைந்திருந்த நிலை இருந்தது. நீண்டகாலமாக நிலைபெற்றுவிட்ட இச்சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களை அறிய இயலாமல் அலுவலர்களும், பணியாளர்களும் பெரிதும் இடருற்றனர். மொழி பெயர்க்கும் ஆற்றல் உள்ளவர்கள்கூடத் தாம் மொழிபெயர்த்தெழுதினால் தவறாகிவிடுமோ என்று அஞ்சினர். இந்நிலை தமிழ் ஆட்சிமொழித் திட்டத்திற்குப் பெரும் முட்டுக்கட்டையாக இருந்தது. இதனை உணர்ந்து, ஆட்சிமொழிக் குழு

செயற்பட்ட காலத்திலேயே ஆட்சிச் சொல் அகராதி தயாரிக்கப்பட்டதை முன்பு அறிந்தோம். இதனைத் தொடர்ந்து தமிழ் வளர்ச்சி இயக்ககமும் 'ஆட்சிச் சொல் அகராதி' எனும் நூலை அவ்வப்போது அச்சிட்டு அனைத்துத் துறைகளைச் சார்ந்த அலுவலகங்களுக்கும் வழங்கி வருகிறது. இதன் நான்காம் பதிப்பின் மறுபதிப்பு நூலில் சற்றொப்ப 9000 ஆட்சிச் சொற்கள் (ஆங்கிலம்-தமிழ்) இடம் பெற்றுள்ளன. மேலும் இதன் கையடக்கப் பதிப்பும், இணைப்பகராதியும் அச்சிடப்பட்டு அலுவலகங் களுக்கு வழங்கப்படுகின்றன. இவ்வகராதிகள் தமிழ் ஆட்சிமொழித் திட்டத்திற்கு மிகவும் பயன்படுகின்றன.

## ஆ) சிறப்புச் சொல் துணையகராதி

மேற்கூறப்பெற்ற ஆட்சிச் சொல் அகராதியில் அனைத்துத் துறைகளுக்கும் பயன்படக்கூடிய பொதுவான ஆட்சிச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு துறையிலும் அத்துறையில் மட்டுமே பெருமளவில் பயன்படுத்தப்படும் சிறப்புச் சொற்கள் மிகுதியாக உள்ளன. எனவே, ஒவ்வொரு துறைக்குமுரிய சிறப்புச் சொற்களை அவ்வத்துறையிலிருந்து பெற்றுத் தமிழாக்கம் செய்து 'சிறப்புச் சொல் துணையகராதி' எனும் பெயரில் நூல்களைத் தயாரித்து அவற்றைத் தமிழ் வளர்ச்சி இயக்ககம் அவ்வத்துறைக்குத் தேவைப்படும் எண்ணிக்கையில் வழங்குகிறது. பொது நூலகத்துறைச் சிறப்புச் சொல் துணையகராதி, காவல்துறைச் சிறப்புச் சொல் துணையகராதி, வேளாண்மைத்துறைச் சிறப்புச் சொல் துணையகராதி என்பன போன்று 78 துறைகளுக்குரிய சிறப்புச் சொல் துணையகராதிகள் தயாரிக்கப்பட்டு அவ்வத்துறைக்கு வழங்கப்பட்டுள்ளன. அனைத்துத் துறைகளுக்கும் இவ்வகராதிகள் தயாரிக்கப்பட்டு வழங்கும் வகையில் பணிகள் தொடர்ந்து நடைபெறுகின்றன.

## இ) கழக ஆங்கிலம் - தமிழ்க் கையகராதி, பிழைநீக்கி எழுதும் முறை - நூல்கள்

அலுவலகங்களில் தமிழில் எழுதும்போது சரியான சொற்களைப் பயன்படுத்துவதும், பிழையில்லாமல் எழுதுவதும் இன்றியமையாத தாகும். இதற்கு உறுதுணைபுரியும் வகையில் அலுவலகங்கள் தம் பயன்பாட்டிற்குக் 'கழக ஆங்கிலம் - தமிழ்க் கையகராதி', 'பிழைநீக்கி எழுதும் முறை' ஆகிய நூல்களை விலைக்கு வாங்கிக் கொள்ள வகை செய்யப்பட்டுள்ளது.

## மாதிரி வரைவுகள் வழங்கல்

தமிழில் அலுவலகக் குறிப்புகளையும், வரைவுகளையும் (கடிதங்கள், செயல்முறை ஆணைகள்) எழுதும்போது அவை சரியானவையாகவும், சீரானவையாகவும் இருத்தல் வேண்டும். அனைத்து

அலுவலகங்களிலும் இவை ஒரே சீராக அமைவதே சிறந்தது. இதற்குத் துணைபுரியும் வகையில் விண்ணப்பங்கள், அலுவலகக் குறிப்புகள், வரைவுகள் முதலியவை எவ்வாறு எழுதப்படல் வேண்டும் என்பதற்கான மாதிரி வரைவுகள் (பல்வேறு இனங்களுக்கும் வகைக்கு ஒன்றாக) தயாரிக்கப்பட்டு நூல் வடிவில் அனைத்துத் துறைகளுக்கும் வழங்கப்படுகின்றன. இதனடிப்படையில் பணியாளர்கள் தமிழில் சிறந்த குறிப்புகளையும் வரைவுகளையும் எழுத முடியும்.

## பயிற்சி வகுப்புகள் நடத்துதல்

அரசு அலுவலர்கள், பணியாளர்கள் அனைவரும் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் பற்றி முழுமையாக அறிந்து கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். எனவே, இளநிலை இந்திய ஆட்சிப் பணி, இந்தியக் காவல் பணி அலுவலர்களுக்கு அவர்களுடைய பயிற்சிக் காலத்தில் ஆட்சிமொழித் திட்டம் பற்றிய பயிற்சி வகுப்புகள் தமிழ் வளர்ச்சி இயக்ககத்திலும், தஞ்சாவூர்த் தமிழ்ப் பல்கலைக் கழகத்திலும் நடத்தப் பெறுகின்றன. பவானிசாகரில் உள்ள குடிமுறைப் பணியாளர் பயிற்சி நிலையத்தில் பயிற்சிபெறும் பணியாளர்களுக்குத் தமிழ் வளர்ச்சித் துறை அலுவலர்களால் இத்திட்டம் பற்றிய பயிற்சி வகுப்புகள் நடத்தப்பெறுகின்றன. மேலும் ஊரக வளர்ச்சித் துறை, பொதுப்பணித்துறை, வணிகவரித்துறை, காவல்துறை, கூட்டுறவுத்துறை, நகராட்சி நிருவாகத்துறை முதலிய துறைகளைச் சார்ந்த அலுவலர்களுக்கும் பணியாளர்களுக்கும் தமிழ் வளர்ச்சித் துறை அலுவலர்களால் ஆட்சிமொழித் திட்டம் பற்றிய பயிற்சி வகுப்புகள் நடத்தப் பெறுகின்றன. இதனால் அலுவலர்களும், பணியாளர்களும் தமிழில் ஆர்வமும் அக்கறையும் காட்டிச் செயற்பட வழியேற்படுகிறது.

## ஆட்சிமொழித் திட்டத் தொடர்பு அலுவலர் நியமனம்

தமிழ் ஆட்சிமொழித் திட்டம் பல்வேறு துறைகளிலும் செவ்வனே நிறைவேற்றப்படுதற்குரிய நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கெனத் துறைத் தலைமை அலுவலகங்களிலும், மண்டல அலுவலகங்களிலும், மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களிலும் அந்தந்த அலுவலகத்தைச் சார்ந்த அலுவலர் ஒருவர் தமிழ் ஆட்சிமொழித் திட்டத் தொடர்பு அலுவலராக அமர்த்தப்பட்டுள்ளார்.

## ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் நடத்துதல்

தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தில் முனைப்பும், முன்னேற்றமும் காணும் நோக்கில் மாவட்டந்தோறும் ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் நடத்தப் பெறுகின்றன. ஒவ்வோராண்டிலும் தற்போது எட்டு மாவட்டங்களில் கருத்தரங்குகள் நடைபெறுகின்றன. மாவட்டத்தில் உள்ள அனைத்துத் துறைகளையும் சார்ந்த அலுவலர்கள்

இக்கருத்தரங்கில் பங்குகொள்கின்றனர். மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்களும், மாவட்டத்தைச் சேர்ந்த மாண்புமிகு அமைச்சர் பெருமக்களும், நாடாளுமன்ற-சட்டமன்ற உறுப்பினர்களும், மாவட்ட ஆட்சியரும், அரசுத் துறைகளின் உயரலுவலர்களும், அறிஞர்களும் கலந்து கொண்டு ஆட்சிமொழித் திட்டம் பற்றிய கருத்துகளைத் தெரிவிக்கின்றனர். இதனால் அலுவலர்கள், பணியாளர்களிடையே இத்திட்டம் பற்றிய விழிப்புணர்வும், முனைப்பும் ஏற்படுகிறது.

## தட்டச்சு வழங்கல்

ஆட்சிமொழித் திட்டம் செவ்வனே செயற்படுத்தப்பட வேண்டியதைக் கருத்திற்கொண்டும், அரசு அலுவலகங்களின் பணித்தன்மையைக் கருதியும் அவற்றில் இருக்க வேண்டிய தமிழ் மற்றும் ஆங்கிலத் தட்டச்சுகளின் எண்ணிக்கை வரையறை செய்யப்பட்டு அரசாணைகள் வெளியிடப் பெற்றுள்ளன. இவ்வரையறைக்குட்பட்டு அலுவலகங்களில் தட்டச்சுகள் இருக்கும் வகையில் நடவடிக்கைகள் தொடர்ந்து மேற்கொள்ளப் பெறுகின்றன.

### அ) தலைமைச் செயலகம்

தலைமைச் செயலகத்தில் உள்ள ஒவ்வொரு துறையும் அத்துறைக்கு அனுமதிக்கப்பட்டுள்ள மொத்தத் தட்டச்சுகளில் 65% தமிழ்த் தட்டச்சுகளையும், 35% ஆங்கிலத் தட்டச்சுகளையும் வைத்திருத்தல் வேண்டும். தலைமைச் செயலகத் துறைகளில் தமிழ்த் தட்டச்சுகளின் எண்ணிக்கை மிகவும் குறைவாகவே இருந்தமை கண்டறியப்பட்டது. மேலும் இத்துறைகளுக்கு உடன் வழங்கப்பட எழுதுபொருள் துறையில் போதிய அளவில் தமிழ்த் தட்டச்சுகள் இருப்பில் இல்லாத நிலை இருந்தது. இதனால் அரசு 1996-97ஆம் ஆண்டில் 50 இலட்சம் உருபாயை ஒப்பளிப்புச் செய்தது. 482 தமிழ்த் தட்டச்சுகள் வாங்கப்பட்டுத் தலைமைச் செயலகத் துறை ஒவ்வொன்றிற்கும் உரிய அளவில் அவை வழங்கப்பட்டுள்ளன. மிகுதியாக இருந்த ஆங்கிலத் தட்டச்சுகள் திரும்பப் பெறப்பட்டுள்ளன.

### ஆ) துறைத் தலைமை அலுவலகங்கள்

துறைத் தலைமை அலுவலகம் ஒவ்வொன்றும், அதற்கு அனுமதிக்கப்பட்டுள்ள மொத்தத் தட்டச்சுகளில் 75% தமிழ்த் தட்டச்சுகளையும், 25% ஆங்கிலத் தட்டச்சுகளையும் வைத்திருத்தல் வேண்டும். பல அலுவலகங்களில் 25%க்கும் கூடுதலாக ஆங்கிலத் தட்டச்சுகள் உள்ளமை கண்டறியப்பட்டது. இவற்றிற்குப் போதிய அளவில் தமிழ்த் தட்டச்சுகள் உடன் வழங்கப்பட வேண்டியதைக்

கருத்திற்கொண்டு, அரசு 1997-98ஆம் ஆண்டில் 40 இலட்சம் உரூபாயை ஒப்பளிப்புச் செய்தது. 500 தமிழ்த் தட்டச்சுகள் வாங்கப்பட்டுத் துறைத் தலைமை அலுவலகங்களுக்கு உரிய அளவில் அவை வழங்கப் படுகின்றன. மிகுதியாக உள்ள ஆங்கிலத் தட்டச்சுகள் திரும்பப் பெறப்படுகின்றன.

## இ) சார்நிலை அலுவலகங்கள்

சார்நிலை அலுவலகங்களில் 100% அளவில் முழுமையாகத் தமிழ்த் தட்டச்சுகளே இருத்தல் வேண்டும். விதிமுறைக்கு மாறாக ஆங்கிலத் தட்டச்சுகளை வைத்துள்ள எந்த ஒரு அலுவலகமும் அவற்றை உடன் எழுதுபொருள் துறையில் ஒப்படைத்துவிட்டு அவற்றிற்கீடாகத் தமிழ்த் தட்டச்சுகளைப் பெற்றுக் கொள்ளுதல் வேண்டும். இதற்குரிய தொடர் நடவடிக்கைகள் தமிழ் வளர்ச்சித் துறையால் மேற்கொள்ளப் பெறுகின்றன.

## ஈ) தன்னாட்சி நிறுவன அலுவலகங்கள்

தன்னாட்சி நிறுவன அலுவலகங்களில் (வாரியங்கள், கழகங்கள், இணையங்கள்) 50:50 எனும் அளவில் தமிழ்த் தட்டச்சுகளும் ஆங்கிலத் தட்டச்சுகளும் இருத்தல் வேண்டும். இதன்படி அமைந்திடத்தக்க வகையில் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன.

## ஊக்கத் திட்டங்கள்

ஆட்சிமொழித் திட்டப்படி அலுவலகங்களில் தமிழில் எழுத வேண்டியது அலுவலர் மற்றும் பணியாளர்களது கடமையாகும். அவ்வாறு எழுதாதவர்கள் உரிய மேல் நடவடிக்கைக்கும், தண்டனைக்கும் உரியவராவர். இருப்பினும் தமிழில் எழுதுவதை ஊக்குவிக்கும் நோக்கில் தமிழ் வளர்ச்சி இயக்ககத்தால் ஊக்கத் திட்டங்களும் செயற்படுத்தப்படுகின்றன.

### அ) கேடயம் வழங்குதல்

ஆட்சிமொழிச் செயலாக்கத்தில் சிறந்து விளங்கும் துறைத்தலைமை அலுவலகம் ஒன்றையும், தன்னாட்சி நிறுவனங்களின் தலைமை அலுவலகம் ஒன்றையும், மாவட்ட ஆட்சியர் அலுவலகம் ஒன்றையும், ஒவ்வொரு மாவட்டத்திலுமுள்ள மாவட்ட நிலை அலுவலகம் ஒன்றையும் ஆண்டுதோறும் தெரிவு செய்து அவற்றிற்கு இத்திட்டத்தின்கீழ்க் கேடயமும், பாராட்டுச் சான்றிதழும் வழங்கப் பெறுகின்றன. துறைத்தலைமை அலுவலகங்களுக்கும், மாவட்ட ஆட்சியர் அலுவலகத்

திற்கும் ரூ.1000/- மதிப்பிலும், மாவட்ட நிலை அலுவலகங்களுக்கு ரூ.250/- மதிப்பிலும் கேடயங்கள் வழங்கப்பட்டு வந்தன. 1996ஆம் ஆண்டு முதல் இத்தொகையினளவு உயர்த்தப்பட்டு முறையே ரூ.1,500/- மதிப்பிலும், ரூ.1,000/- மதிப்பிலும் பெரிய அளவினதாகவும், வேலைப்பாடுடையதாகவும் உள்ள கேடயங்கள் வழங்கப் பெறுகின்றன.

### ஆ) பணப்பரிசு வழங்குதல்

தமிழில் சிறந்த குறிப்புகளையும், வரைவுகளையும் எழுதும் பணியாளர்கள் ஆண்டுதோறும் தெரிவுசெய்யப் பெற்றுப் பணப்பரிசும், பாராட்டுச் சான்றிதழும் வழங்கிச் சிறப்பிக்கப் பெறுகின்றனர். முதற்பரிசு ரூ.500- இரண்டாம் பரிசு ரூ. 300/-, மூன்றாம் பரிசு ரூ.200/- எனுமளவில் வழங்கப் பெறுகிறது. பரிசுகள் பரவலாகவும் முறையாகவும் அமையும் வகையில் இத்திட்டம் செயற்படுத்தப்படுகிறது. இவ்வகையில் தலைமைச் செயலகப் பணியாளர்களுக்கு மூன்று பரிசுகளும், துறைத் தலைமை அலுவலகங்களின் பணியாளர்களுக்கு மூன்று பரிசுகளும், தன்னாட்சி நிறுவனத் தலைமை அலுவலகங்களின் பணியாளர்களுக்கு மூன்று பரிசுகளும் வழங்கப் பெறுகின்றன. அன்றியும் ஒவ்வொரு மாவட்டத்திலுமுள்ள மாவட்டநிலை அலுவலகங்களின் பணியாளர்களுக்கு மூன்று பரிசுகளும், சார்நிலை அலுவலகங்களின் பணியாளர்களுக்கு மூன்று பரிசுகளும், உள்ளாட்சித் துறைச் சார்நிலை அலுவலகங்களின் பணியாளர்களுக்கு மூன்று பரிசுகளும், தன்னாட்சி நிறுவனச் சார்நிலை அலுவலகங்களின் பணியாளர்களுக்கு மூன்று பரிசுகளும் வழங்கப் பெறுகின்றன. இப்பரிசும் பாராட்டிதழும் பணியாளர்கள் ஊக்கமும் முனைப்பும் பெறப் பெரிதும் உதவுகின்றன.

## ஆட்சித்தமிழ்' நூலும் தேர்வும்

தமிழ் ஆட்சிமொழித் திட்டம் பற்றிப் பலர் அறியாமலிருப்பதும், தேவையற்ற ஐயப்பாடுகளைக் கொண்டிருப்பதும் முன்னர் விளக்கப்பட்டது. அனைவரும் குறிப்பாக அரசு அலுவலர்களும், பணியாளர்களும் ஆட்சிமொழித் திட்டம் பற்றி முழுமையாக அறிந்து கொள்வது இத்திட்டச் செயற்பாட்டிற்குப் பெரிதும் உதவும். இதற்கு வகை செய்யும் முகத்தான் தமிழ் வளர்ச்சி இயக்ககத்தால் 'ஆட்சித்தமிழ்' எனும் இந்நூல் தயாரித்து வெளியிடப்பட்டுள்ளது. ஆட்சிமொழித் திட்ட வரலாறு, இத்திட்டம் பற்றிய சட்டம் - அரசாணைகள், ஆட்சிமொழித்

திட்ட ஆய்வில் கண்டறியப்பட்ட உண்மைகள், குறைகளைக் களைவதற்கு மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகள், தமிழ் வளர்ச்சி தொடர்பான பிற பணிகள் பற்றிய செய்திகளை அனைவரும் நன்கறிந்து கொள்ள இந்நூல் பெரிதும் உதவுகிறது. மேலும் தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையம் நடத்தும் தேர்வுகளில் 'ஆட்சித்தமிழ்' பற்றிய தேர்வும் நடத்தப்படும் வகையிலும், அரசு அலுவலர்கள்-பணியாளர்கள் இத் தேர்வினை எழுதித் தேர்ச்சிபெற்றால்தான் அவர்தம் தகுதிகாண் பருவத்தை நிறைவு செய்ய முடியும் எனும் வகையிலும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பெற்றுள்ளன. இதனால் அரசு அலுவலர்களும் பணியாளர்களும் ஆட்சிமொழித் திட்டத்தின் இன்றியமையாமையை நன்கு அறிந்து கொள்ளவும், திட்டத்தை முழுமையாகச் செயற்படுத்தவும் வாய்ப்பமைகிறது.

## பணியிடங்கள் உருவாக்கம் மற்றும் சீராக்கம்

அலுவலகங்களில் ஆட்சிமொழித் திட்டம் பற்றி ஆய்வு செய்வதும், உரிய நடவடிக்கை எடுப்பதும் மிகவும் இன்றியமையாதது என்பது முன்னர்க் கூறப்பட்டது. தமிழ் வளர்ச்சித்துறை அலுவலர்கள் ஒவ்வொரு அலுவலகத்திற்கும் நேரில்சென்று இத்தகைய ஆய்வுகளை மேற்கொண்டு வருகின்றனர். இப்பணி முறையாகவும் முழுமையாகவும் நடைபெறப் போதிய அளவில் அலுவலர்களும், பணியாளர்களும் இருக்க வேண்டியது இன்றியமையாதது. இதனைக் கருத்திற்கொண்டு 1997,98 ஆம் ஆண்டுகளில் அரசு முனைப்பான நடவடிக்கைகளெடுத்துச் சில பணியிடங்களைப் புதிதாகத் தோற்றுவித்துள்ளது; அலுவலகக் கட்டமைப்பில் சீராக்கம் செய்துள்ளது. இவ்வகையில் கீழ்க்காணும் சீரிய பணிகள் குறிப்பிடத்தக்கனவாகும்.

1. பெருகிவரும் தமிழ் வளர்ச்சிப் பணிகளையும் தேவையையும் கருத்திற்கொண்டு தமிழ் வளர்ச்சி இயக்குநருக்குத் துணைபுரியும் வகையில் இயக்ககப் பணிகளை மேற்கொள்வதற்கென இணை இயக்குநர் பணியிடமொன்று புதிதாகத் தோற்றுவிக்கப்பட்டுள்ளது.
2. ஆட்சிமொழித் திட்டத்தை மேலும் முனைப்புடன் நடைமுறைப்படுத்திடச் சேலம், திருநெல்வேலி ஆகியவற்றைத் தலைமையிடமாகக் கொண்ட இரு மண்டலத் தமிழ்வளர்ச்சித் துணை இயக்குநர் அலுவலகங்கள் புதிதாகத் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. இவ்வலுவலகங்களின் செயற்பாட்டிற்கெனத் தமிழ் வளர்ச்சி இயக்ககத்திலிருந்து இரண்டு துணை இயக்குநர், இரண்டு கண்காணிப்பாளர், இரண்டு அலுவலக உதவியாளர் பணியிடங்கள் மாற்றம் செய்யப்பட்டுள்ளன.

உரிய அலுவலர்களாலும் பணியாளர்களாலும் பொறுப்பேற்கப்பட்டு இவ்வலுவலகங்கள் இயங்கி வருகின்றன.

3. மாவட்டங்களிலுள்ள தமிழ் வளர்ச்சித் துறை அலுவலகங்களின் அமைப்பானது தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் அலுவலகம் எனவும், தமிழாய்வு அலுவலர் அலுவலகம் எனவும் வெவ்வேறு வகையில் அமைந்திருந்தது. அலுவலர் பணியாளர் அமைப்பும் மாவட்டத்திற்கு மாவட்டம் வேறுபட்டிருந்தது. ஆட்சிமொழித்திட்ட ஆய்வுப்பணிகள் முறையாகவும், தொடர்ச்சியாகவும் அமைய வேண்டியதைக் கருத்திற் கொண்டு, அனைத்து மாவட்டங்களிலும் ஒரே சீரான அலுவலர் - பணியாளர் அமைப்பு இருக்கும் வகையில் 13 தமிழாய்வு அலுவலர் பணியிடங்கள் 13 உதவி இயக்குநர் பணியிடங்களாகவும், 10 இளநிலை உதவியாளர் பணியிடங்கள் 10 உதவியாளர் பணியிடங்களாகவும் மேனிலைப்படுத்தப்பட்டுள்ளன; 14 தட்டச்சர் பணியிடங்கள் 14 இளநிலை உதவியாளர் - தட்டச்சர் பணியிடங்களாக மாற்றியமைக்கப்பட்டுள்ளன; 4 உதவி இயக்குநர் பணியிடங்களும், 8 உதவியாளர் பணியிடங்களும், 13 இளநிலை உதவியாளர் - தட்டச்சர் பணியிடங்களும், 14 அலுவலக உதவியாளர் பணியிடங்களும் நிலைப்படுத்தப்பட்ட பணியிடங்களாக உருவாக்கப்பட்டுள்ளன. குறிப்பிடத்தக்க இச்சீராக்கத்தினால் அனைத்து மாவட்டங்களிலும் ஆட்சிமொழித் திட்ட ஆய்வுப் பணி இடையீடின்றியும் முறையாகவும் நடைபெற வழிகாணப்பட்டுள்ளது. மேலும், சில ஆண்டுகளாக ஒழிவாக இருந்த பணியிடங்களில் அலுவலர்களும் பணியாளர்களும் அமர்த்தப்பெற்று ஆய்வுப் பணிகள் தொய்வின்றி நடைபெற வழிவகுக்கப் பட்டுள்ளது.

## தலைமைச் செயலகத்தில் முனைப்பு நடவடிக்கைகள்

தலைமைச் செயலகத்தில் ஆட்சிமொழித் திட்டம் முழுமையாகச் செயற்படுத்தப்படப் பல்வேறு முனைப்பான நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பெற்றுள்ளன.

1. மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் வேண்டுகோளும் ஆணையும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும். 22.5.96 ஆம் நாளன்று

நடைபெற்ற அமைச்சரவைக் கூட்டத்தில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் ''அமைச்சர்கள் அனைவரும் இனித் தமிழில்தான் கையொப்பமிட வேண்டும்; அமைச்சர் பெருமக்களைத் தொடர்ந்து தலைமைச் செயலகத்தில் பணியாற்றும் செயலாளர்கள் மற்றும் அரசு அலுவலர்கள் அனைவரும் தமிழில் கையொப்பமிட்டுத் தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தின் முதற்படியை முழுமைப் படுத்த வேண்டும்'' என அறிவுறுத்தியுள்ளார்கள்.

2. முன்னர்க் கூறப்பெற்றுள்ளதுபோல் 50 இலட்சம் உருபாய் செலவில் 482 தமிழ்த் தட்டச்சுகள் புதிதாக வாங்கப்பட்டுத் தலைமைச் செயலகத் துறைகளுக்கு உரிய அளவில் வழங்கப்பட்டுள்ளன.

3. ஒவ்வொரு துறையிலும் உயரலுவலர் ஒருவர் பற்றாளராக **(Nodel Officer)** அமர்த்தப் பெற்றுள்ளார். இவ்வாறு அமர்த்தப்பட்டுள்ள அனைத்துத் துறைகளின் பற்றாளர்கள் கூட்டத்தை அவ்வப்போது கூட்டி மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு, இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் அவர்களும், தமிழ் வளர்ச்சி - பண்பாடு, இந்து சமய அறநிலையத் துறைச் செயலாளர் அவர்களும், தமிழ் வளர்ச்சி இயக்குநர் அவர்களும் தலைமைச் செயலகத்தில் ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கப் பணிகளை முடுக்கி விடுகின்றனர்.

4. தலைமைச் செயலகத் துறைகளில் ஆட்சிமொழிச் செயலாக்கம் பற்றி முறையான ஆய்வு மேற்கொள்ளப் படவும், செயலாக்கம் முழுமையாக அமையவும் பல்வேறு நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பெற்றுள்ளன.

## தமிழுக்கெனத் தனி அமைச்சர்

ஆட்சிமொழிச் சட்டம் நிறைவேற்றப்பட்ட 1956ஆம் ஆண்டிலிருந்து தமிழ் வளர்ச்சித் துறையானது பொதுத்துறை, கல்வித்துறைச் செயலாளர் மற்றும் கல்வி அமைச்சரின் கட்டுப்பாட்டில் செயற்பட்டு வந்தது. 1984 ஆம் ஆண்டில் தலைமைச் செயலகத்தில் தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறையெனத் தனித்துறை தோற்றுவிக்கப் பெற்றது. இத்துறைக்கெனத் தனியே தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறைச் செயலாளர் அமர்த்தப்பட்டார். இதனைத் தொடர்ந்து ஆட்சிமொழித் திட்டத்தின் இன்றியமையாமையையும், இதில் தனிக்கவனம் செலுத்தப் பட வேண்டியதையும், பெருகிவரும் தமிழ் வளர்ச்சிப் பணிகளையும் கருத்திற்கொண்டு 1996ஆம் ஆண்டில் மாண்புமிகு தமிழக முதலவர் அவர்கள் தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாட்டுத் துறைக்கெனத் தனி

அமைச்சகத்தைத் தோற்றுவித்து, இத்துறைக்கெனத் தனி அமைச்சரையும் அமர்த்தினார்கள். இச்செயற்பாடுகள் அரசு அலுவலர்கள், பணியாளர்கள், பொதுமக்கள் ஆகியோரின் கவனத்தைப் பெரிதும் ஈர்த்ததுடன், ஆட்சி மொழிச் செயற்பாட்டிலும் தமிழ் வளர்ச்சியிலும் அரசுக்குள்ள அக்கறையையும் ஈடுபாட்டினையும் அனைவரும் உணரும் வகையிலும் அமைந்தன. குறிப்பாக அரசு அலுவலகங்களில் அலுவலர்களும் பணியாளர்களும் தமிழில் எழுதுவதில் ஒரு புத்துணர்வும், முனைப்பும் பெற்றுள்ள நிலை உருவாகியுள்ளது. துறைக்கெனத் தனி அமைச்சகம், தனி அமைச்சர், அமைச்சரின் தனிக்கவனம், பன்முகச் செயற்பாடு, கூடுதல் நிதி ஒதுக்கீடு போன்றவற்றால் திட்டச் செயலாக்கத்தில் மேன்மேலும் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டு வருகிறது.

## உணர்வும் பற்றுமே உடனடித் தேவை

தமிழ்நாட்டில் தமிழே ஆட்சிமொழி எனும் வகையில் சட்டமியற்றப்பட்டு நாற்பத்திரண்டு ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டன. இதனை நடைமுறைப்படுத்த அரசால் நூற்றுக்கணக்கான அரசாணைகள் வெளியிடப் பெற்றுள்ளன. இவற்றிற்கிணங்கத் தமிழ் வளர்ச்சித் துறையால் பல்வேறு நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பெற்று வருகின்றன. இத்திட்டச் செயலாக்கத்தில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது பற்றியும், இன்னும் பல அலுவலகங்களில் குறைபாடுகள் இருந்துவருவது பற்றியும் முந்தைய இயலில் கூறப்பட்டது. குறைபாடுகளைக் களைவதற்கு எடுக்கப்படும் நடவடிக்கைகள் பற்றி இவ்வியலில் விளக்கப்பட்டது. குறைபாடுகளை நோக்குங்கால் அவை எளிதாகக் களையப்படக் கூடியவையே என்பது தெளிவாகப் புலப்படும். ஆயினும் அக்குறைபாடுகள் ஏன் நீடிக்கின்றன? அலுவலர்கள் - பணியாளர்கள் முழு அளவில் இதில் அக்கறை காட்டாததே இதற்குரிய முதன்மைக் காரணம் என்பது மிகையாகாது. ஆட்சிமொழித் திட்டம் முழுமையாகச் செயற்படுத்தப்பட வேண்டும் என்பதில் அரசு உறுதியாக இருக்கிறது. அனைத்துத் துறைகளின் அலுவலர்களுக்கும், பணியாளர்களுக்கும் இதில் பெரும்பங்கும் பொறுப்பும் உள்ளன. ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் முழுமையாக அரசாணைகளின் அடிப்படையிலேயே அமைகிறது. ஆனால் பலரது செயற்பாடுகள் அரசாணையினை மீறுவதாகவே உள்ளன.

அரசாணையினை மீறி நடந்தால் (1) கண்டனம் (**Censure**) (2) ஊதிய உயர்வை நிறுத்தி வைத்தல் (**Stopage of Increment**) (3) பதவியிறக்கம் செய்தல் (**Reversion**) (4) பணி நீக்கம் (**Removal from service**) போன்ற தண்டனைகளை வழங்கிடச் சட்டத்தில் இடம் உள்ளது. இதனை அரசு அலுவலர்களும் பணியாளர்களும் மனதிற்கொண்டு

செயற்படுவது இன்றியமையாததாகும். அன்றியும் ''நாம் அரசுப் பணி செய்கிறோம்; அரசு மக்களுக்காகச் செயற்படுகிறது. எனவேதான் மக்களுடைய மொழியில் நிருவாகம் நடக்க வேண்டும் எனச் சட்டம் இயற்றி ஆணையிட்டுள்ளது. அவ்வாணைகளின்படி நம் அலுவலக நடவடிக்கைகள் அனைத்தையும் ஆட்சிமொழியாகிய தமிழிலேயே மேற்கொள்ள வேண்டியது நம் கடமையாகும். தமிழில் எழுதவில்லை என்பதற்காகத் தண்டனை எனும் நிலையைத் தவிர்க்க வேண்டும்'' என்ற எண்ணம் அலுவலர் - பணியாளர் ஒவ்வொருவரின் மனத்திலும் ஆழப் பதிய வேண்டும். ''யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்'' என்று பாரதியும், ''இனிமைத் தமிழ்மொழி எமது - எமக்கு இன்பம் தரும்படி வாய்த்தநல் அமுது'' என்று பாவேந்தர் பாரதிதாசனும் பெற்ற தமிழுணர்வை ஒவ்வொருவரும் பெற்றாக வேண்டும். உணர்வு மட்டுமல்ல; ''சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்'' என்றும், ''கலைச்செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்'' என்றும், ''கடல்போலச் செந்தமிழைப் பெருக்க வேண்டும்'' என்றும் அப்பெருமக்கள் காட்டிய வழிமுறைகளைச் செயற்படுத்தவும் வேண்டும். மிக உயரிய மொழிக்கு நாம் உரிமையுடையவர்கள் என்ற பெருமிதமும் பற்றும் ஒவ்வொருவருக்கும் வேண்டும்.

''அரசுத் துறைகளிலெல்லாம் தமிழைப் பயன்படுத்த எல்லோரும் உறுதுணையாக இருக்க வேண்டும்...... தமிழ் நம் இரத்தத்தோடு இரத்தமாகக் கலந்துவிட்ட மொழி; நாம்தான் அதை மறந்திருந்தோமே தவிரத் தமிழ் நம்மை மறக்கவில்லை'' எனப் பேரறிஞர் அண்ணா அவர்கள் தலைமைச் செயலகத்தில் திருவள்ளுவர் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்து அரசு அலுவலர்களிடையே ஆற்றிய கருத்துரையை மனத்திற் கொண்டு ஆட்சி மொழித் திட்டத்தைச் செவ்வனே நிறைவேற்ற வேண்டியது அரசு அலுவலர் - பணியாளர் தம் கடமையாகும்.

# இயல் ஐந்து

# தமிழ் வளர்ச்சித் திட்டங்களும் பணிகளும்

தமிழ் ஆட்சிமொழி வரலாறு, அதன் தொடர்பாக வெளியிடப்பட்ட இன்றியமையா அரசாணைகள், ஆட்சிமொழிச் செயலாக்க ஆய்வில் கண்டறியப்பட்ட உண்மைகள், குறைவு களைவு நடவடிக்கைகள் ஆகிய செய்திகள் முந்தைய இயல்களில் விளக்கப்பட்டன. ஆட்சி மொழிச் செயலாக்கப் பணியைத் தலையாய பணியாக மேற்கொண்டுவரும் தமிழ் வளர்ச்சி இயக்ககம் தமிழ் மொழியின் பன்முக வளர்ச்சி கருதிப் பல்வேறு திட்டங்களையும், பணிகளையும் மேற்கொண்டு வருகிறது. இன்றியமையாத இத்திட்டங்கள், பணிகள் பற்றிய விவரங்களை இந்த இயலில் காண்போம்.

## 1. அகவை முதிர்ந்த தமிழறிஞர் நிதியுதவித் திட்டம்

வறுமையில் வாடும் தமிழறிஞர்களுக்கு நிதியுதவி வழங்கும் திட்டம், 1977-78 ஆம் ஆண்டின் தமிழக அரசு வரவு - செலவுத் திட்ட அறிக்கையில், மாண்புமிகு நிதியமைச்சர் அவர்களால் அறிவிப்புச் செய்யப்பட்டதற்கிணங்க, 2.1.1978 ஆம் நாளிட்ட கல்வித்துறை, அரசாணை எண். 1-இல் தோற்றுவிக்கப்பட்டது.

23.4.91ஆம் நாளிட்ட கல்வித்துறை, அரசு நிலையாணை எண்.690இல் ''அகவை முதிர்ந்த தமிழறிஞர் நிதியுதவி அளிக்கும் திட்டம்'' எனப் பெயர் மாற்றம் செய்து அரசு ஆணையிட்டது.

இத்திட்டத்தின் கீழ் நிதியுதவி பெற விண்ணப்பிப்போருக்கான தகுதிகள்:

1. 58 அகவை கடந்தவராக இருக்க வேண்டும்.
2. குறிப்பிடத்தக்க வகையில் தமிழுக்குத் தொண்டாற்றிய வராக இருத்தல் வேண்டும்.
3. எல்லா வகைகளிலிருந்தும் பெறப்படும் திங்கள் வருவாய் ரூ.400/-க்கு மிகாமல் இருத்தல் வேண்டும்.

இத்திட்டத்தின்கீழ்த் தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் வாயிலாக ஆண்டுதோறும் நாளிதழ்களில் விளம்பரம் வெளியிடப்பெறும். அதன் அடிப்படையில் பெறப்படும் விண்ணப்பங்களை அரசால் அமைக்கப்பெறும் உயர்நிலைக்குழு ஆய்ந்து அரசுக்குக் கருத்துரு அனுப்பி, அரசு ஆணை வெளியிடப்பெறும். ஆண்டுக்கு முப்பது பேருக்கு மிகாமல் தமிழறிஞர்கள் தெரிவு செய்யப்படுவார்கள்.

நிதியுதவி வழங்கத் தெரிவு செய்யப்பெற்ற அகவை முதிர்ந்த தமிழறிஞர்கள், ஆண்டுதோறும் திருவள்ளுவர் திருநாளன்று நேரில் அழைக்கப்பெற்று அரசால் நிதியுதவி ஒப்பளிப்புச் செய்யப்பெற்ற அரசாணைகள் வழங்கிச் சிறப்புச் செய்யப் பெறுவர்.

2.1.78 முதல் திங்கள் தோறும் ரூ.100 நிதியுதவி அளிக்கப் பெற்றது. இத் திட்டத்தின் கீழ் இத்தொகை 1.12.79 முதல் ரூ.250/- ஆகவும், 1.4.90 முதல் ரூ.350/- ஆகவும், 15.1.91 முதல் ரூ.400/- ஆகவும், உயர்த்தி வழங்கப்பட்டது.

1995-96 வரை 441 தமிழறிஞர்கள் இந்நிதியுதவியைப் பெற்று வந்தனர்.

1996-98இல் 11 தமிழறிஞர்கள் இந்நிதியுதவி பெற்றுள்ளார்கள். மேலும் 1999 சனவரித் திங்களில் திருவள்ளுவர் திருநாளன்று எழுவருக்கு நிதியுதவி அளிக்கப்பட்டது.

அரசு, 10.9.96 ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை அரசாணை எண். 222இல், 10.9.96 முதல் இந்நிதியுதவியை ரூ.400/- லிருந்து ரூ.500/- ஆக உயர்த்தி ஆணையிட்டுள்ளது.

மேலும், இந்நிதியுதவியை மூன்றாண்டுகளுக்கொருமுறை வருமானச் சான்றிதழின் அடிப்படையில், புதுப்பித்துக்கொள்ள வேண்டும் என்ற முறையை மாற்றி, 24.4.98ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத்துறை அரசுக் கடித எண்.94/தவ1-2/98-இல், தமிழறிஞர்கள் புதுப்பித்தலின்றி வாழ்நாள் முழுவதும் நிதியுதவி பெற வகை செய்யப்பட்டுள்ளது.

## 2. மொழிக்காவலர் நிதியுதவித் திட்டம்

தமிழ்மொழி, பண்பாட்டு மேம்பாட்டைப் பேணிக் காப்பதிலும், எல்லையைக் காப்பதிலும் ஈடுபாடு கொண்டு சிறை சென்ற மொழி / எல்லைக் காவலர்களின் ஈ(தியா)கத்தை ஊக்குவித்துச் சிறப்பிக்கும் வகையில் உதவித்தொகை அளித்திடும் திட்டத்தினைத் தமிழக அரசு 1984ஆம் ஆண்டில் தோற்றுவித்தது.

20.6.84ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை, நிலையாணை எண்.21-இல் இத்திட்டம் குறித்த விதிமுறைகள் அளிக்கப்பட்டுள்ளன. இவ்விதிமுறைகள் தமிழ்நாடு 1983 ஆம் ஆண்டு தமிழ் அறிஞர்களுக்கு உதவித் தொகை வழங்குதல் - பல்வகை விதித்துறைகள் சட்டத்தின் தமிழ்நாடு சட்டம் 23/1983-9ஆம் பிரிவில் வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களைக் கொண்டு இயற்றப்பட்டனவாகும்.

அவ்வப்போது தமிழக அரசால் அமைக்கப்பெறுகின்ற உயர்நிலைக் குழுவின்முடிவிற்கிணங்க இத்திட்டத்தின்கீழ் நாளிதழ்களில் விளம்பரங்கள் வெளியிடப் பெறுகின்றன. அதன் அடிப்படையில்

வரப்பெறுகின்ற விண்ணப்பங்களை நன்கு ஆய்வு செய்து, சிறைச்சான்றிதழின் அடிப்படையில் நிதியுதவி பெறத்தக்க மொழி / எல்லைக் காவலர்களைத் தெரிவு செய்து இக்குழு அரசுக்குப் பரிந்துரை செய்கிறது. அரசு ஆணை வெளியிடுகிறது. அரசாணையில் குறிப்பிடப் பெற்றுள்ள நாளிலிருந்து, இவ்வாறு தெரிந்தெடுக்கப்படும் ஒவ்வொருவரும் மொழிக்காவலர் / எல்லைக்காவலர் என்ற முறையில் வாழ்நாள் முழுவதும் நிதியுதவியைப் பெறுவர். தெரிவு செய்யப் பெற்ற விண்ணப்பதாரர்கள் தவிரப் பிற விண்ணப்ப தாரர்கள் அனைவரும் தெரிவு செய்யப் பெறாதவர்கள் எனக் கருதப்படுவார்கள்.

விண்ணப்பதாரர்/மொழிக்காவலர் இறந்துவிட்டால் அவரின் துணைவியார்/கணவர் இத்திட்டத்தின்கீழ்த் தொடர்ந்து நிதியுதவி பெறுவார். அவ்வாறு இல்லாத நேர்வில் அரசின் ஓய்வூதிய விதிகளின்படி மரபுரிமையர்கள் இந்நிதியுதவியைப் பெறத் தகுதியுடையவர்களாவர்.

இத்திட்டத்தின் கீழ்த் தெரிவு செய்யப்பெற்ற ஒவ்வொருவருக்கும் 14.4.87 முதல் திங்கள்தோறும் ரூ.250/- நிதியுதவி வழங்கப் பெற்றது. அதன்பின்னர் 1.10.89 முதல் ரூ.350/- ஆகவும், 15.1.91 முதல் ரூ.400/- ஆகவும் நிதியுதவி வழங்கப்பெற்றது.

1997ஆம் ஆண்டுவரை 1936 பேர் இந்நிதியுதவியைப் பெற்றனர்.

இத்திட்டத்தின் கீழ் வழங்கப்பட்டு வந்த நிதியுதவித் தொகை 10.9.96 முதல் ரூ.400/-லிருந்து ரூ.500/- ஆக உயர்த்தப்பட்டது. தமிழ்நாடு சட்டமன்றப் பேரவையில் 28.8.96 இல் நடைபெற்ற 1996-97 ஆம் ஆண்டிற்கான நிதிநிலை அறிக்கை விவாதத்தின் பதிலுரையில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் அறிவித்ததற்கிணங்க வெளியிடப்பெற்ற 10.10.96 ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறை அரசாணை (நிலை) எண்.241-இன்படி, 10.10.96 முதல் இந்நிதியுதவி ரூ.1500/- ஆக-அதாவது மூன்று மடங்காக உயர்த்தி வழங்கப்பட்டதோடு, மருத்துவப் படியாக ரூ.15-ம்; மொழிக்காவலரின் விதவை மனைவி அல்லது கணவர் அல்லது முதிராவயது மரபுரிமைக் குழந்தைகளுக்கு மாதம் ரூ.750/- வீதமும் மருத்துவப்படி ரூ.15/-ம் வழங்கப்பட்டது. மொழிக்காவலர் நிதியுதவி பெறுவோருக்கு இலவசப் பேருந்துப் பயணச்சலுகையும் அனுமதிக்கப்பட்டுள்ளது.

27.8.96ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத்துறை அரசாணை (நிலை) எண்.172இல் தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்களைத் தலைவராகவும், சட்டமன்றப் பேரவை உறுப்பினர்கள் ஐவரை உறுப்பினர்களாகவும் கொண்டு புதிய உயர்நிலைக்குழுவை அரசு அமைத்தது. தமிழ் வளர்ச்சி இயக்குநர் இக்குழுவின் செயற்பாட்டு அமைப்பாளராவார்.

இக்குழு 16.9.96இல் கூடி, நாளிதழ்களில் விளம்பரம் வெளியிட்டு நிதியுதவி வேண்டுவோரிடமிருந்து விண்ணப்பங்களைப் பெற முடிவு செய்ததன்படி, நாளிதழ்களில் விளம்பரங்கள் வெளியிடப் பெற்றன. வரப்பெற்ற ஆயிரக்கணக்கான விண்ணப்பங்கள் தொகுக்கப்பட்டுக் குழுவின் ஆய்வுக்கு வைக்கப்பட்டன. உயர்நிலைக் குழு இவ்விண்ணப் பங்களை முழுவதும் ஆய்ந்து, முடிவு செய்து 386 மொழி / எல்லைக் காவலர்களுக்கு நிதியுதவி வழங்கலாம் என அரசுக்குப் பரிந்துரை செய்தது. அரசாணைகள் வெளியிடப் பெற்றன.

15.8.97 அன்று சுதந்திரத் திருநாள் பொன் விழாவில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் ஆற்றிய உரையின்போது, ''விடுதலைப் போராட்டத் தியாகிகளுக்கு மத்திய அரசு இந்தப் பொன்விழா ஆண்டில் அறிவிக்கும் ஓய்வூதியப் பயன் எவ்வளவோ, அந்த அளவுக்குச் சமமான பயனை மாநில அரசு ஓய்வூதியம் பெறும் தியாகிகளும், மொழிக்காவலர் களும் பெற்றிட வழிவகை செய்யப்படும்'' என அறிவித்தார்கள். அதற்கிணங்க, மொழிக்காவலர் நிதியுதவித் தொகையை இருமடங்காக அதாவது திங்கள் தோறும் ரூ.1,500/-இலிருந்து ரூ.3000/- ஆக உயர்த்தியும், அவர்களின் மரபுரிமையர்களுக்கு ரூ.750/- இலிருந்து ரூ.1500/- ஆக உயர்த்தியும், இவ்விரு வகையினர்க்கும் ரூ.15/- மருத்துவப்படியும் இலவசப் பேருந்துப் பயணச்சலுகையை 15.8.97 முதல் வழங்கியும் அரசு ஆணையிட்டது.

1999 மார்ச்சு வரை இத்திட்டத்தின் கீழ் 2481 பேர் மொழி / எல்லைக் காவலர் நிதியுதவி பெற்று வருகிறார்கள்.

மொழிக்காவலர் நிதியுதவித் திட்டத்தில் நிதியுதவி பெற்று வரும் எவரேனும் இறந்தால் அவரின் ஈமச்செலவுகளுக்காக அவருடைய மனைவிக்கோ மரபுரிமையருக்கோ ரூ.1000/- வழங்க அரசு ஆணையிட்டுள்ளது. தொடர்புடைய வட்டாட்சியர் முறையான நடவடிக்கையை மேற்கொண்டு அத்தொகையினைப் பெற்று வழங்குவார். நிதியுதவி பெற்று வந்து இடையில் இயற்கையெய்தும் மொழிக்காவலரைப் போற்றும் வகையில் அரசின் சார்பில் வட்டாட்சியர் அல்லது அவரின் நிலைக்குக் குறையாத அரசு அலுவலர், அவரின் உடலுக்கு மலர் வளையம் வைத்து இறுதி வணக்கம் செலுத்தவும் அரசு ஆணையிட்டுள்ளமை குறிப்பிடத் தக்கது. (10.8.90 ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறை, அரசாணை நிலை எண்.174).

### 3. சிறந்த தமிழ் நூல்களுக்குப் பரிசு வழங்கும் திட்டம்

''........................தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
அழகு காப்பாய்!
இதுதான் நீ செயத்தக்க
எப்பணிக்கும் முதற்பணியாம்''

என்னும் பாவேந்தரின் முழக்கத்தை அரசு தலைமேற்கொண்டு, தமிழுக்கு அழகூட்டும் நன் முயற்சியின் விளைவாக உருவாக்கம் பெற்றதே இவ்வருந்திட்டம்.

தமிழில் எண்ணற்ற நூல்கள் வெளிவருகின்றன. கால நீரோட்டத்தை எதிர்த்துப் பயன்தரத்தக்கனவாக - திட்பமும் நுட்பமும் நிறைந்தனவாக உள்ளன சிலவே. அத்தகைய நூல்கள் வெளி வருதலின் இன்றியமையாமையை உணர்ந்து, கதை புனைவோரை - காவியம் படைப்போரை - கட்டுரையாளர்களை - ஆய்வு முனைவோரை ஊக்குவித்துத் தமிழக அரசு ஆண்டுதோறும் பரிசு வழங்கிப் பாராட்டி வருகிறது.

தரம்மிகுந்த நூல்களைத் தமிழில் வெளியிட்டு உதவும் தகுதி மிக்காரையும் நெஞ்சார வாழ்த்த வேண்டும் என்ற கடமை உணர்ச்சி மேலீட்டால், பதிப்பகத்தார்க்கும் பாராட்டிதழ் வழங்கிச் சிறப்பித்து வருகிறது.

இத்திட்டம் 1947இல் தோற்றுவிக்கப்பட்டது. முதன்முதலில் சென்னை- தமிழ் வளர்ச்சிக் கழகத்தால் பரிசுகள் கொடுக்கப்பட்டன. ஆண்டுதோறும் இத்திட்டம் தொடர்ந்து நடைபெற்றுவந்தது.

1960 திசம்பரில் தமிழ் வளர்ச்சிக் கழகம் இத்திட்டத்தினைத் 'தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம்' ஏற்றுக் கொள்ள வேண்டும் எனக் கூறியதால், 25.6.1963ஆம் நாளிட்ட கல்வி-பொது உடல்நலத்துறை அரசாணை எண்.2067 இல் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றத்திடம் இத்திட்டம் ஒப்படைக்கப்பெற்று, விதிமுறைகள் தொகுத்தளிக்கப் பட்டன. 20 தலைப்புகளின்கீழ் நூல்கள் தெரிந்தெடுக்கப்பட்டுப் பரிசுகள் அளிக்க முடிவு செய்யப் பெற்றது.

31.5.1971ஆம் நாளிட்ட கல்வித்(தமிழ் வளர்ச்சிப் பிரிவு-2) துறை அரசாணை (நிலை) எண்.842இல், தமிழில் சிறந்த நூல்களுக்குப் பரிசு வழங்குதலுக்கான நடைமுறையையும், விதிமுறைகளையும் திருத்தம் செய்து ஆணை வெளியிடப் பெற்றது. இதன்படி ஒவ்வொரு தலைப்பின் கீழும் இரண்டு பரிசுகள் வழங்கப் பெற்றன. முதற் பரிசாக ரூ.2000/- இரண்டாம் பரிசாக ரூ.1000/- வழங்கப் பெற்றன.

5.3.1990ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை, அரசாணை(நிலை) எண்.50-இல் ஒவ்வொரு தலைப்பின்கீழும் மூன்று பரிசுகள் வழங்க ஆணை வெளியிடப் பெற்றது. முதற் பரிசாக ரூ.5000/-, இரண்டாம் பரிசாக ரூ.3000/-, மூன்றாம் பரிசாக ரூ.1000/- வழங்கப் பெற்றன.

அரசால் புதிதாக அமைக்கப்படும் வல்லுநர் குழு, அரசால் வகுக்கப்பட்ட விதிமுறைகளுக்கேற்ப, நூல்களை ஆய்வு செய்து மதிப்பீட்டாளருக்கு அனுப்பி, நூல்களின் மதிப்பீடுகளைப் பெற்று, ஆண்டுதோறும் பரிசுக்குரிய நூல்களை முடிவு செய்கிறது.

1996ஆம் ஆண்டில் 56 நூல்களுக்கு (57 நூலாசிரியர்களுக்கு - ஒரு நூலினை இருவர் எழுதியதால்) ரூ 1,80,000/- பரிசுத் தொகையாக வழங்கப் பெற்றது.

1997ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்ற நூல்களை 15 தலைப்புகளில் பெறும் வகையில் இத்திட்ட விதியை அரசு மாற்றி அமைத்துள்ளது இதன்படி ஒவ்வொரு நூலுக்கும் நுழைவுக் கட்டணம் ரூ 100/- செலுத்திப் பரிசுத் தேர்வுக்கு அனுப்பப்பெறும் நூல் ஒவ்வொன்றிலும் 6 படிகளைச் சென்னை, தமிழ் வளர்ச்சி இயக்குநருக்கு அனுப்ப வேண்டுமெனவும் அறிவிக்கப்பெற்றது.

தமிழக அரசு 1997ஆம் ஆண்டிலிருந்து பரிசுத் தொகையினை உயர்த்தி ஆணையிட்டுள்ளது. இதன்படி

| | |
|---|---|
| முதற் பரிசாக | ரூ 10,000/- |
| இரண்டாம் பரிசாக | ரூ.5,000/- |
| மூன்றாம் பரிசாக | ரூ.2,000/- |

வழங்கப் பெறுகிறது மாண்புமிகு முதல்வர் அவர்கள் 1999ஆம் ஆண்டு திருவள்ளுவர் திருநாளில் அறிவித்ததற்கிணங்கப் பரிசு பெறும் நூல்களை பதிப்பித்த பதிப்பகத்தார்க்கும் இனிப் பரிசுத் தொகை வழங்கப்படும்.

## 4. ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தில் சிறந்து விளங்கும் அலுவலகங்களுக்குப் பரிசுக் கேடயமும், பாராட்டுரையும் வழங்கும் திட்டம்

1987ஆம் ஆண்டில் இத்திட்டம் தோற்றுவிக்கப்பட்டது.

ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தில் ஊக்கமும், ஆர்வமும், திறமையும் காட்டும் அரசு அலுவலகத்தினைப் பாராட்டும் வகையில் பரிசுக் கேடயமும், பாராட்டுரையும் வழங்கப் பெறுகின்றன. இத்திட்டத்தின்கீழ் ஒவ்வோர் ஆண்டும்

| | | | |
|---|---|---|---|
| 1 | துறைத் தலைமை அலுவலகம் | - | ஒன்றிற்கும் |
| 2. | மாவட்ட ஆட்சியர் அலுவலகம் | - | ஒன்றிற்கும் |
| 3. | ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள ஒரு மாவட்ட நிலை அலுவலகம் எனும் வகையில் | - | 29 மாவட்ட நிலை அலுவலகங்களுக்கும் |

பரிசுக் கேடயமும், பாராட்டுரையும் இத்துறையால் வழங்கப்பெற்று வந்தன

துறைத் தலைமை அலுவலகம் , மாவட்ட ஆட்சியர் அலுவலகம் ஒவ்வொன்றிற்கும் ரூ.1000/- மதிப்பிலும் மாவட்டங்களிலுள்ள மாவட்ட நிலை அலுவலகம் ஒவ்வொன்றிற்கும் ரூ 250/- மதிப்பிலும் கேடயங்கள் வழங்கப் பெற்றன.

9.9.1997 ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை அரசாணை நிலை எண்.229இல், 1996 ஆம் ஆண்டு முதல் மேற்குறிப்பிடப் பெற்ற அலுவலகங்களுடன் தன்னாட்சி நிறுவனத் தலைமை அலுவலகம் ஒன்றிற்கும் பரிசுக் கேடயமும், பாராட்டுரையும் வழங்க அரசு ஆணையிட்டுள்ளது. மேலும் இவ்வாணையில், பரிசுக் கேடயத்தின் தொகையும் உயர்த்தப்பட்டுள்ளது. இதன்படித் துறைத்தலைமை அலுவலகம், மாவட்ட ஆட்சியர் அலுவலகம், தன்னாட்சி நிறுவனத் தலைமை அலுவலகம் ஆகியவற்றிற்குரிய கேடயம் ஒவ்வொன்றும் ரூ.1500/-மதிப்பிலும், 29 மாவட்டங்களிலுள்ள 29 மாவட்ட நிலை அலுவலகங்களுக்குரிய கேடயம் ஒவ்வொன்றும் ரூ.1000/மதிப்பிலும் வழங்கப்படுகின்றன.

## 5. தமிழ்த் திட்டச் செயலாக்கத்தில் ஊக்கமும், ஆக்கமும், திறமையும் காட்டும் அரசுப் பணியாளர்களுக்குப் பரிசு வழங்கும் திட்டம்

இத்திட்டத்தின்கீழ்த் தமிழில் சிறந்த குறிப்புகளையும் வரைவுகளையும் எழுதும் பணியாளர்களை ஆண்டுதோறும் தெரிவுசெய்து அவர்களுக்குப் பணப் பரிசும் பாராட்டுச் சான்றிதழும் வழங்கப்பெறுகின்றன. மாநில அளவிலும், மாவட்ட அளவிலும் கீழ்க்காணும் ஏழு பிரிவிலான அலுவலகங்களின் பணியாளர்களில் ஒவ்வொரு பிரிவுப் பணியாளர்களுக்கும் மூன்று பரிசுகள் வழங்கப் பெறுகின்றன.

**மாநில அளவில் :**

1. தலைமைச் செயலகத்துறைகள்
2. துறைத் தலைமை அலுவலகங்கள்
3. தன்னாட்சி நிறுவனத் தலைமை அலுவலகங்கள்

**மாவட்ட அளவில் :**

1. மாவட்ட நிலை அலுவலகங்கள்
(மாவட்டாட்சியர் அலுவலகம் - உட்பட)
2. சார்நிலை அலவலகங்கள்
3. உள்ளாட்சித் துறையின் சார்நிலை அலுவலகங்கள்
(மாநகராட்சிகள் உட்பட)
4. தன்னாட்சி நிறுவனச் சார்நிலை அலுவலகங்கள்

முதற் பரிசு ரூ.500/-, இரண்டாம் பரிசு ரூ.300/-, மூன்றாம் பரிசு ரூ.200/- ஆக வழங்கப் பெறுகிறது.

தலைமைச் செயலகத்தில் பரிசுக்குரிய பணியாளர்களைத் தமிழ்வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலர் தெரிவு செய்வார்.

மாநில அளவில் துறைத் தலைமை அலுவலகத்திலும், தன்னாட்சி நிறுவனத் தலைமை அலுவலகத்திலும் பரிசுக்குரிய பணியாளர்களைத் தமிழ் வளர்ச்சி இயக்குநர் தெரிவு செய்வார்.

மாவட்ட அளவில் அந்தந்த மாவட்டத் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் பரிசுக்குரிய பணியாளர்களைத் தெரிவு செய்வார்.

## 6. தமிழ் வளர்ச்சிக்கான சிறந்த நூல்களை வெளியிடுவதற்கு நிதியுதவி வழங்கும் திட்டம் (பிற மொழிகள் உட்பட)

துறைதோறும் சிறந்த நூல்கள் வெளிவருவதற்கு ஊக்கமளிக்கும் வகையில், இத்திட்டம், 3.8.1966ஆம் நாளிட்ட பொது (த.வ.-1)த்துறை, அரசாணை எண்.1617இன் வாயிலாகச் செயற்படுத்தப்பட்டு வருகிறது. இதற்கான விதிமுறைகளும் இவ்வாணையில் வெளியிடப்பட்டுள்ளன.

இத்திட்ட விதிகளில் குறிப்பிடப்பட்டுள்ள தலைப்புகளுக் கிணங்க நூலினைஅச்சிட நிதியுதவி வேண்டி, நூலாசிரியர்களிடமிருந்து வரப்பெறும் விண்ணப்பங்கள் இத்திட்டத்தின்கீழ் ஏற்கப்பெறுகின்றன. இதற்கென அரசு வல்லுநர் குழு ஒன்றினை அமைத்துள்ளது.

வல்லுநர் குழு ஆய்ந்துரைத்த பின்னர், துறைசார்ந்த அறிஞர்களுக்கு மதிப்பீடு செய்வதற்காக நூலுக்குரிய மூலப்படி அனுப்பப்பெறும். இம்மதிப்பீட்டின் அடிப்படையில் நிதி யுதவிக்குரியோர் தெரிவு செய்யப்பெற்று அரசுக்குப் பரிந்துரை செய்யப்படுகிறது. அரசாணையினடிப்படையில் நிதியுதவி வழங்கப் பெறுகிறது.

இத்திட்டத்தின்கீழ் நூலாசிரியருக்கு நிதியுதவியாகப் பெரும அளவு ரூ.5000/- மட்டும் வழங்கப்பட்டு வந்தது.

3.11.82ஆம் நாளிட்ட, அரசு, கல்வி அறிவியல் மற்றும் தொழில் நுட்பத்துறை, நிலையாணை எண். 2412இன்படி இத்தொகை பெரும அளவாக ரூ.8000/- அல்லது நூல் அச்சிடுவதற்கு ஆகும் செலவினத்தில் 50% -இவற்றில் எது குறைவோ அத்தொகை மொத்த நிதியுதவியாக வழங்கப்பெற்று வருகிறது. வழங்கப் பெற வேண்டிய மொத்தத் தொகையில் 50% தொகை முதல் தவணையாக வழங்கப்பெறும். நூலை அச்சிட்டு 50 நூல்களையும், உள்ளபடியான செலவின விவரங்களையும் நூலாசிரியர் அளித்த பின்னர் எஞ்சிய தொகை வழங்கப்பெறும்.

இவ்வகையில் 13 தலைப்புகளில் நூல்கள் அச்சிட்டு வெளிவர நிதியுதவி, அளிக்கப்படுகிறது. 1996-லிருந்து 1998 வரை இத்திட்டத்தின்கீழ் நிதியுதவி பெற்ற நூல்களின் எண்ணிக்கை 63.

இந்நூல்களுக்கு வழங்கப்பட்ட தொகை ரூ.3,13,708/- ஆகும். உரிய விண்ணப்பம், விதி முறைகளைச் சென்னை - 108, தமிழ் வளர்ச்சி இயக்ககத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

## 7. அரிய தமிழ் நூல்களை வெளியிட நிதியுதவி வழங்கும் திட்டம்

அரிய தமிழ் நூல்கள் அச்சிடப்பட்டு வெளிவருவதற்கு ஊக்கமளிக்கும் வகையில் நூலாசிரியர் / வெளியீட்டாளர்களுக்கு அரசு நிதியுதவி வழங்கும் இத்திட்டம் 14.4.94ஆம் நாளிட்ட அரசு தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை நிலையாணை எண்.189இன் வாயிலாக 1994ஆம் ஆண்டு முதல் செயற்படுத்தப்பட்டு வருகிறது.

விதிமுறைக்கேற்ப விண்ணப்பித்தவரின் நூலுக்குரிய மூலப் படியை இத்திட்டத்திற்கென அரசால் அமைக்கப்பெறும் வல்லுநர் குழு தெரிவு செய்தவுடன், தமிழ் வளர்ச்சி இயக்குநர் அனுமதிக்கத் தக்க மொத்த நிதியுதவித் தொகையின் அளவினை அறுதியிட்டு அரசுக்குப் பரிந்துரை செய்வார். அரசாணையினடிப்படையில் இத்திட்டத்தின்கீழ் வழங்கப்படும் நிதி இரு தவணைகளில் வழங்கப்படும். நூலொன்றுக்கு ரூ.20,000/- அல்லது நூல் அச்சிடுவதற்கு ஆகும் செலவினத்தில் 60% ஆகிய இவற்றில் எத்தொகை குறைவோ, அத் தொகையே மொத்த நிதியுதவியாக வழங்கப்படுகிறது.

இதில் முதல் தவணையாக 50% தொகை வழங்கப்படும். எஞ்சிய 50% தொகை, நூல் அச்சிடப்பட்டு 50 நூல்படிகள், செலவு விவரங்கள் ஆகியன வரப்பெற்றவுடன் வழங்கப்பெறும்.

1996ஆம் ஆண்டிலிருந்து 1998 வரை இந்நிதியுதவி பெற்ற நூல்களின் எண்ணிக்கை 28. வழங்கப்பட்ட தொகை ரூ.2,04,510/- ஆகும். உரிய விண்ணப்பம், விதிமுறைகளைச் சென்னை-108, தமிழ் வளர்ச்சி இயக்ககத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

## 8. மொழி பெயர்ப்பு நூல்கள் வெளியிட நிதியுதவி வழங்கும் திட்டம்

1996-97 ஆம் ஆண்டு பகுதி-2 திட்டத்தின்கீழ், 20.1.97ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை அரசாணை நிலை எண்.22இன் வாயிலாக, மொழிபெயர்ப்பு நூல்கள் வெளியிட நிதியுதவி வழங்கும் திட்டம் தொடங்கப் பெற்றது.

தமிழிலிருந்து பிறமொழியிலும், பிறமொழியிலிருந்து தமிழிலும் மொழிபெயர்க்கப்படும் சிறந்த நூல்கள் அச்சிட்டு வெளியிடப்பட இத்திட்டத்தின் வாயிலாக நிதியுதவி வழங்கப்படுகிறது.

இதற்கென வல்லுநர் குழு ஒன்று அமைக்கப் பெற்றுள்ளது. விண்ணப்பப்படிவமும், விதிமுறைகளும் உருவாக்கப் பெற்றுள்ளன. வல்லுநர் குழு உறுப்பினர்கள் ஆய்ந்து தெரிவு செய்து பரிந்துரை செய்யும் நூல்களுக்கு அரசாணையினடிப்படையில் பெரும அளவாக ரூ.25,000/- அல்லது நூல் அச்சிடுவதற்கு ஆகும் செலவினத்தில் 60% தொகை இவற்றில் எது குறைவோ அத்தொகை நிதியுதவியாக வழங்கப் பெறுகிறது. உரிய தொகையில் 50% தொகை முதல் தவணையாக வழங்கப் பெறும். நூல் அச்சிட்டு வெளியிடப்பட்ட பின்னர் எஞ்சிய தொகை வழங்கப் பெறும்.

1996ஆம் ஆண்டிலிருந்து 1998 வரை இத்திட்டத்தின்கீழ் 20 நூல்கள் வெளியிடப் பெற்றுள்ளன. வழங்கப்பட்ட நிதியுதவித் தொகை ரூ.37,148/- ஆகும்.

அரசு இத்திட்டத்தின்கீழ், பன்மொழிஅறிஞரும் விடுதலைப் போராட்ட வீரருமான ஜமதக்கினி அவர்கள் தமிழில் மொழி பெயர்த்த (காரல் மார்க்சு எழுதிய) ''மூலதனம்'' நூலின் ஆறு தொகுதிகளை வெளியிட 1998இல் ஒட்டுமொத்த நிதியுதவியாக ரூ.5 இலட்சம் வழங்கியது. [அரசாணை (டி) எண்.25, தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் (தவ-1) துறை, நாள் 30.3.1998].

நிதியுதவி விண்ணப்பம், விதிமுறைகளைச் சென்னை-108, தமிழ் வளர்ச்சி இயக்ககத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

## 9. திருவள்ளுவர் விருது

தமிழ்நாடு அரசு, உலகப் பொதுமறையாம் திருக்குறள் நெறிபரப்பும் பெருநோக்கில் ஆண்டுதோறும் தைத் திங்கள் இரண்டாம் நாளில் திருவள்ளுவர் திருநாள் விழாவினை அரசு விழாவாகச் சீரும் சிறப்புமாகத் தமிழ் வளர்ச்சித் துறையின் வாயிலாக நடத்தி வருகிறது.

1986ஆம் ஆண்டு முதல் ஆண்டுதோறும், திருக்குறள் நெறி பரப்பும் பெருந்தகையாளர் ஒருவரை அரசு தெரிவு செய்து திருவள்ளுவர் விருது வழங்கிச் சிறப்பித்து வருகிறது. ஆண்டுதோறும் திருவள்ளுவர் திருநாள் விழாவில் இவ்விருது வழங்கப் பெற்று வருகிறது.

விருதாளருக்கு விருதுத்தொகையாக ரூ.10,000/-மும், பாராட்டுரையும் வழங்கப்பட்டு வந்தன.

5.3.1990 ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை அரசாணை (நிலை) எண்.50 இல் அரசு, இவ்விருதுத் தொகையை ரூ.20,000/-ஆக உயர்த்தி ஆணையிட்டது.

இவ்விருதுத் தொகை மேலும் உயர்த்தப்பட்டு 1999ஆம் ஆண்டு முதல் உருபாய் ஒரு இலட்சமும், தங்கப் பதக்கமும் வழங்கப் பெறுகிறது.

1999 ஆம் ஆண்டுவரை, 14 பெருந்தகையாளர்கள் திருவள்ளுவர் விருதினைப் பெற்றுள்ளார்கள்.

## 10. திரு. வி.க. விருது

தமிழ்நாடு அரசு, தமிழ்த் தென்றல் திரு.வி.க. விருது வழங்கும் திட்டத்தை 1979ஆம் ஆண்டில் 3.9.79ஆம் நாளிட்ட, கல்வித்துறை அரசாணை நிலை எண்.1657இல் தோற்றுவித்தது.

இத்திட்டத்தின்படி, ஆண்டுதோறும் சிறந்த தமிழ் எழுத்தாளர் ஒருவரைத் தெரிவு செய்து, விருதுத் தொகையாக ரூ.10,000/- வழங்கப்பெற்று வந்தது.

25.10.1996ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத்துறை, அரசாணை எண்.257இல் 1996ஆம் ஆண்டு முதல் இவ்விருதுத் தொகையை ரூ.20,000/- ஆக உயர்த்தி அரசு ஆணையிட்டது.

இவ்விருதுத்தொகை மேலும் உயர்த்தப்பட்டு 1998ஆம் ஆண்டிலிருந்து உருபாய் ஒரு இலட்சமும் தங்கப்பதக்கமும் வழங்கப்பெறுகிறது.

1979-இலிருந்து 1998வரை 20 தமிழ் எழுத்தாளர்கள் இவ்விருதினைப் பெற்றுள்ளார்கள்.

## 11. பாவேந்தர் பாரதிதாசன் விருது

தமிழ்நாடு அரசு, பாவேந்தர் பாரதிதாசன் விருதை 1978ஆம் ஆண்டில் தோற்றுவித்தது. 28.8.1978ஆம் நாளிட்ட செய்தி மக்கள் தொடர்புத்துறை அரசாணை (நிலை) எண். 1609இன்படி ஆண்டு தோறும் பாவேந்தர் பாரதிதாசன் பிறந்தநாள் விழாவில், சிறந்த கவிஞர் ஒருவருக்கு ரூ.10,000/- விருதுத் தொகையும், தகுதியுரையும் வழங்கப் பெற்று வந்தன.

இப்போது இவ்விருது தமிழ் வளர்ச்சித் துறையால் வழங்கப் பெற்று வருகிறது.

1978 இலிருந்து 1998 வரை 19 கவிஞர்களும், 1990ஆம் ஆண்டு பாவேந்தரின் நூற்றாண்டுத் தொடக்க விழாவில் 21 கவிஞர்களும், நூற்றாண்டு நிறைவு விழாவில் 23 கவிஞர்களும் பாவேந்தர் பாரதிதாசன் விருது பெற்றுள்ளனர்.

24.6.1996ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை அரசாணை எண். 125இல், 1996ஆம் ஆண்டு முதல் இவ்விருதுத் தொகையை ரூ.20,000/- ஆக உயர்த்தி அரசு ஆணையிட்டது.

இவ்விருதுத்தொகை மேலும் உயர்த்தப்பட்டு 1998 ஆம் ஆண்டி லிருந்து உருபாய் ஒரு இலட்சமும் தங்கப்பதக்கமும் வழங்கப்பெறுகிறது.

அயல்நாட்டிலுள்ள கவிஞர் / தமிழறிஞர்களையும் சிறப்புச் செய்யும் வகையில் 1998ஆம் ஆண்டிற்கான இவ்விருது அயல்நாட்டறிஞர் ஒருவருக்கு வழங்கப் பெற்றுள்ளது.

## 12. பாரதியார் விருது

8.12.1997ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை அரசாணை எண்.32-இல், 1997ஆம் ஆண்டு முதல் பாரதியார் விருது வழங்கும் திட்டம் தோற்றுவிக்கப்பட்டது.

பாரதியார் படைப்புகளை ஆய்வு செய்வோர், பாரதியார் பற்றித் திறனாய்வு செய்வோர், பாரதியாரின் புகழ் பரப்பும் வகையில் கவிதை - உரைநடை நூல்களை படைப்போர் மற்றும் பிற வகையில் தொண்டு செய்வோர் ஆகியோர் இவ்விருதினைப் பெறத் தகுதி படைத்தவர்களாவர்.

விருதாளருக்கு விருதுத் தொகையாக ரூ.20,000/- மும் தகுதியுரையும் வழங்கப் பெற்றன. இவ்விருதுத்தொகை, மேலும் உயர்த்தப்பட்டு 1998 ஆம் ஆண்டிலிருந்து உருபாய் ஒரு இலட்சமும் தங்கப் பதக்கமும் வழங்கப்பெறுகிறது.

## 13. தமிழ்நாட்டு வரலாற்று வரைவுத் திட்டம்

18.8.1970 இல் கூடிய தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றக் கூட்டத்தில் வரலாற்று வரைவுத் திட்டக் குழுவொன்று அமைக்க முடிவு செய்யப் பெற்றது. இதன் அடிப்படையில் 16.6.75ஆம் நாளிட்ட கல்வி (தமிழ் வளர்ச்சிப் பிரிவு-2)த்துறை அரசாணை(நிலை) எண்.1982இல் டாக்டர் மு.வரதராசனார் அவர்களைத் தலைவராகவும், தமிழ் வளர்ச்சி இயக்குநர் அவர்களை உறுப்பினர் - செயலாளராகவும், எழுவரை உறுப்பினர்களாகவும் கொண்ட வல்லுநர் குழு ஒன்று முதனிலையில் அமைக்கப்பட்டது.

தமிழ்நாட்டு வரலாற்றைப் பின்வரும் ஏழு தொகுதிகளாக வெளியிடத் திட்டமிடப்பட்டுள்ளது.

1. தொல் பழங்காலம்
2. சங்ககாலம் - அரசியல், வாழ்வியல் (இரு பகுதிகள்)
3. பல்லவர்-பாண்டியர் காலம் (இரு பகுதிகள்)
4. சோழப் பெருவேந்தர் காலம் (இரு பகுதிகள்)
5. பாண்டியப்பெருவேந்தர் காலம்
6. பெருவேந்து அமையாக் காலம்
7. வெள்ளையர் ஆட்சிக் காலம் - விடுதலை பெற்றபின் அமையும் காலம் (இரு பகுதிகள்)

1975, 1979, 1983,1989, 1991 ஆகிய ஆண்டுகளில் வரலாற்று வல்லுநர் குழு திருத்தியமைக்கப்பட்டது. 1985 முதல் 1989 வரையிலான 5 ஆண்டுக்காலம் தமிழ்நாட்டு வரலாறு எழுதும் பணி நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது.

1995ஆம் ஆண்டு வரை (25 ஆண்டுகளில்) தமிழ்நாட்டு வரலாற்று வரைவுத் திட்டத்தின்கீழ்ப் பின்வரும் நான்கு நூல்கள் வெளியிடப்பட்டன.

1. தொல்பழங்காலம் - 1975
2. சங்ககாலம் - அரசியல் - 1983
3. சங்ககாலம் - வாழ்வியல் - 1983
4. பல்லவர் - பாண்டியர் காலம் - முதல் பகுதி - 1991

6.6.96ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை, அரசாணை (நிலை) எண்.117இல் வரலாற்று வரைவுத் திட்ட வல்லுநர் குழு திருத்தி அமைக்கப்பட்டது.

12.7.96இல் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு, இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் முன்னிலையில் வரலாற்றுக் குழுக்கூட்டம் நடைபெற்றது. இக்கூட்டத்தில் எஞ்சிய தொகுதிகள் அனைத்தையும் 5 ஆண்டுகளுக்குள் வெளியிட முடிவு செய்யப் பெற்றது.

இக்குழுக்கூட்ட வேண்டுகோளுக்கிணங்க மேலும் அறுவர் வல்லுநர் குழுவில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர்.

மேலும் பதிப்பாசிரியர் இருவர் அமர்த்தப்பட்டனர்.

1996 ஆம் ஆண்டிற்குப் பிறகு இரண்டாண்டுகளில் கீழ்க்காணும் 3 நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன.

1. பல்லவர் பாண்டியர் காலம்-இரண்டாம் பகுதி-1997
2. சோழப் பெருவேந்தர் காலம்-முதற்பகுதி-1998
3. சோழப் பெருவேந்தர் காலம்-இரண்டாம் பகுதி -1998

மேலும் மேற்குறிப்பிடப்பட்ட ஏழு தொகுதிகள் மட்டுமன்றி தமிழ்நாட்டு வரலாறு முழுவதும் அடங்கிய ஒரே தொகுதி நூல் ஒன்றை வெளியிடவும் முடிவு செய்யப் பெற்றுப் பணிகள் நடைபெற்று வருகின்றன. எஞ்சிய நூல்களும் விரைவில் வெளியிடப் பெறும்.

மேற்காணும் அனைத்து நூல்களும் தமிழ் வளர்ச்சி இயக்ககத்திலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திலும், தமிழ்ப் பல்கலைக் கழகத்திலும் விற்பனைக்கு உள்ளன. எஞ்சிய தொகுதிகளும் அடுத்தடுத்து வெளியிடப்பெறும்.

## 14. தமிழ்நூல் விவர அட்டவணை வெளியிடல்

நூல்கள் பதிவுச் சட்டத்தின்படிப் பதிவு செய்யப்பட்ட தமிழ் நூல்கள் சென்னை ஆவணக் காப்பகத்தில் உள்ளன. அந்நூல்களைப் பற்றிய விவரங்களை அறிந்து கொள்ள இயலாத நிலை இருந்து வந்தது. இந்நிலை தமிழ் வளர்ச்சிக்கு-ஆராய்ச்சிக்குத் தடையாக இருப்பதை உணர்ந்து அந்நூல்களைப் பற்றிய முழுவிவரங்களையும் தொகுத்துத் 'தமிழ் நூல் விவர அட்டவணை' எனும் பெயரில் நூல்களாக வெளியிடும் திட்டம் தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் வாயிலாக மேற்கொள்ளப் பெற்று வருகிறது. பதிவு செய்யப்பட்டுள்ள ஒவ்வொரு நூலைப் பற்றியும் கீழ்க்காணும் விவரங்கள் இவ்வட்டவணை நூலில் இடம் பெறுகின்றன.

1. நூற்பெயர் 2.ஆசிரியர் பெயர் 3.பொருள் 4.பதிப்பாசிரியர் 5.பதிப்பகம் 6.ஆண்டு 7.பக்க விவரம் 8.வடிவஅளவு 9.விலை 10.பதிவு எண். 11.விளக்கம்(நூலில் கூறப்படும் செய்திச் சுருக்கம்)

இதுவரை 1867 ஆம் ஆண்டுமுதல் 1935 ஆம் ஆண்டுவரை பதிவு செய்யப்பட்ட பல்லாயிரக்கணக்கான நூல்களுக்கு மேற்கூறப்பெற்ற வகையில் விவரங்கள் தொகுக்கப் பெற்று 24 தமிழ்நூல் விவர அட்டவணை நூல்கள் தயாரித்து வெளியிடப்பட்டுள்ளன. இந்நூல்கள்அரசு அச்சக விற்பனைப் பிரிவு வாயிலாக விற்பனை செய்யப்பட்டுள்ளதுடன், அரசாணையினடிப்படையில் பல்கலைக்கழகங்கள், கல்லூரிகள், நூலகங்கள் முதலியவற்றிற்கு இலவசமாகவும் வழங்கப்பட்டுள்ளன.

இலக்கியம், வரலாறு, மருத்துவம் போன்ற பல்வேறு துறைகள் தொடர்பாகத் தமிழில் வெளிவந்து பதிவு செய்யப்பட்டுள்ள நூல்கள் பற்றிய விவரங்களை அறிந்து கொள்வதற்கும், அவற்றை ஆவணக் காப்பகத்திலிருந்து பெற்றுப் பயன்படுத்திக் கொள்வதற்கும், ஆராய்ச்சிக்கும் இத் தமிழ்நூல் விவர அட்டவணை நூல்கள் பெரிதும் பயன்படுகின்றன. இத்திட்டத்தின்படி 1956ஆம் ஆண்டுவரை பதிவு செய்யப்பட்டுள்ள நூல்களுக்குரிய விவரங்களைத் தொகுத்துத் தமிழ்நூல் விவர அட்டவணை தயாரிக்கும் பணி தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

## 15. வணிக நிறுவனப் பெயர்ப் பலகைகளில் தமிழ்

தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தினை ஓர் ஒருங்கிணைந்த திட்டமாக உருவாக்கிட அரசு கருதியது. அதற்காக மேற்கொள்ளப் பட்ட நடவடிக்கைகளுள் வணிக நிறுவனங்களின் பெயர்ப் பலகைகளில் பெயர்கள் தமிழில் தக்கவாறு இடம் பெறச் செய்வதும் ஒன்றாகும். இம்முயற்சியின் விளைவாகத் தொழிலாளர் துறையானது அரசிதழில் பின்வரும் அறிவிக்கையினைத் தொழிலாளர் துறை விதிகளின் 15ஆம் விதிக்குத் திருத்த ஆணையாக வெளியிட்டது.

1. ஒவ்வொரு நிறுவனத்தின் பெயர்ப்பலகையும் தமிழில் அமைய வேண்டும்; பிற மொழிகள் இடம் பெற வேண்டியிருப்பின் முதலில் தமிழிலும், அடுத்து ஆங்கிலத்திலும், மூன்றாவதாகப் பிறமொழி இடம்பெற வேண்டியிருந்தால் அதனையும் எழுதலாம்.
2. இவ்வாறு பிற மொழிகள் இடம் பெறும் நேர்வில் பெயர்ப் பலகைகளில் 5:3:2 என்ற அளவில் முதலில் தமிழ், அடுத்து ஆங்கிலம், பின்னர் விரும்புகின்ற பிறமொழி இடம் பெறலாம்.
3. பெயர்ப்பலகைகளில் இடம் பெறும் தமிழ் எழுத்துகள் சீர்திருத்த எழுத்துகளாக அமைய வேண்டும்.

(29.7.82ஆம் நாளிட்ட அரசுத் தொழிலாளர் வேலை வாய்ப்புத் துறை நிலையாணை எண்.1541)

பிறகு இந்நடைமுறை ஆணையாகப் பிறப்பிக்கப்பட்டது. (29.12.83 ஆம் நாளிட்ட அரசு தொழிலாளர் துறை நிலையாணை எண்.3312)

'' வாணிகர், தம் முகவரியை
வரைகின்ற பலகையில் ஆங்
கிலமா வேண்டும்?

'மாணுயர்ந்த செந்தமிழால்
வரைக' என அன்னவர்க்குச்
சொல்ல வேண்டும்!

ஆணிவிற்போன் முதலாக
அணிவிற்போன் ஈறாக
அனைவர் போக்கும்

நாணமற்ற தல்லாமல்
நந்தமிழின் நலங்காக்கும்
செய்கை யாமோ?''

எனத் 'தமிழியக்கத்தில்' கட்டளையிட்டு அறிவுறுத்திய பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் நூற்றாண்டு விழா ஆண்டில் தமிழ்ப் பெருமக்களின் விருப்பத்திற்கிணங்க வணிக நிறுவனங்களின் பெயர்ப்பலகைகளில் சரியான தமிழ்ச் சொற்களை இடம் பெறச் செய்ய அரசு வல்லுநர் குழுவொன்றை அமைத்தது. (19.12.90ஆம் நாளிட்ட அரசு தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை நிலையாணை எண்.150)

2.7.96 அன்று மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்துசமய அறநிலையத் துறை அமைச்சர் அவர்கள் தலைமையில் வணிகச் சங்கச் சார்பாளர்கள் கூட்டம் ஒன்று கூட்டப்பெற்றது. அதில்

அரசின் நடவடிக்கைகளுக்கு முழு ஒத்துழைப்பு நல்குவதாக அவர்கள் உறுதியளித்தனர். வணிக நிறுவனங்கள் பெயர்களைத் தமிழில் உரியவாறு எழுத உதவும் வகையில் அரசு சொற்பட்டியல் ஒன்றை அச்சிட்டு அளிக்க வேண்டுகோள் விடுக்கப்பட்டது. அதனடிப்படையில் தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறைச் செயலாளர் அவர்களை அமைப்பாளராகவும், முனைவர் சிலம்பொலி சு.செல்லப்பன், பேராசிரியர் ம.இலெனின் தங்கப்பா ஆகியோரை உறுப்பினர்களாகவும் கொண்ட குழுவொன்று அமைக்கப்பட்டது. (16.7.96ஆம் நாளிட்ட அரசு தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை நிலை ஆணை எண்.150)

இக்குழு மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி , தமிழ்ப் பண்பாடு, இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் தலைமையில் கூடி வணிக நிறுவனங்கள் பற்றிய 515 சொற்களை அறுதியிட்டது. இச்சொற்கள் 'வணிக நிறுவனப் பெயர்ப் பலகைகளில் தமிழ்' எனும் தலைப்பில் நூலாக வெளியிடப்பட்டது. மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு, இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் சீரிய முயற்சியால் உருவாக்கப்பட்ட இந்நூல், வணிக நிறுவனங்கள் தங்கள் நிறுவனப் பெயரை நல்ல தமிழில் எழுதி வைப்பதற்குப் பெரிதும் பயன்படுகிறது. இந்நூலின் இரண்டாம் பதிப்பு 537 சொற்களுடன் 1997இல் வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலின் விலை ரூ.5/-.

## 16. தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் வெளியிடல்

தமிழ்ச் சுருக்கெழுத்துக் கலையைப் பயில்வோருக்கும், பயிற்றுவிப்போருக்கும் பயன்படும் வகையில் தமிழ்ச் சுருக்கெழுத்து நூலினை அவ்வப்போது தேவைக்கேற்பஅச்சிட்டு வெளியிடும் திட்டத்தினைத் தமிழ் வளர்ச்சி இயக்ககம் மேற்கொண்டு வருகிறது. இதன்படி இந்நூலின் முதற்பதிப்பு 1965 ஆம் ஆண்டிலும் (5000 படிகள்), இரண்டாம் பதிப்பு 1977ஆம் ஆண்டிலும் (5000 படிகள்), மூன்றாம் பதிப்பு 1988ஆம் ஆண்டிலும் (5000 படிகள்) அச்சிட்டு வெளியிடப்பட்டன. மூன்றாம் பதிப்பு வெளியிடப்பட்டுப் பத்தாண்டுகள் ஆகிவிட்டதையும், நூல்களனைத்தும் விற்பனையாகி விட்ட நிலையில் கடந்த சில ஆண்டுகளாகவே இந்நூலின் தேவை மிகுந்து வருவதையும் கருத்திற்கொண்டு இதன் நான்காம் பதிப்பினை அச்சிட்டு வெளியிடுவதென அரசு முடிவு செய்தது. தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்(தவ2-1) துறை அரசாணை (நிலை)எண்.302, நாள்:2.07.1998 இன்படித் தமிழ்ச் சுருக்கெழுத்து நூல்(நான்காம் பதிப்பு) 5000 படிகள் அச்சிடப்பெற்று 24.12.98 அன்று மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் வெளியிடப்பெற்றுள்ளது. இந்நூல் சென்னை - தமிழ் வளர்ச்சி இயக்ககத்திலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திலும் விற்பனை செய்யப்படுகின்றது. இதன் விலை ரூ.32 ஆகும். தமிழ்ச்

சுருக்கெழுத்துக் கலை நிலைபெறவும், பரவிடவும் இந்நூல் துணை புரிகிறது.

## 17. இந்திய ஆட்சிப் பணித் தேர்வு - தமிழில் கருவி நூல்கள் தயாரித்தல்

இந்திய ஆட்சிப் பணித் தேர்வில் தமிழ்நாட்டு மாணவர்கள் வெற்றி பெறும் எண்ணிக்கை கடந்த சில ஆண்டுகளாகவே குறைந்துவரும் நிலை உள்ளது. தமிழ்நாட்டு மாணவர்களின் தேர்ச்சி விழுக்காடு பெருகிட வேண்டுமென்ற நோக்கில் இத்தேர்வினைத் தமிழில் எழுதுவது இன்றியமையாதது என உணரப்பெற்றது. இதனால் தமிழ்நாட்டு மாணவர்கள் அதிக எண்ணிக்கையில் வெற்றிபெறும் வாய்ப்பமையும் எனக் கருதிய தமிழக அரசு, இந்திய ஆட்சிப் பணித் தேர்வுகளைத் தமிழில் எழுதுவதற்குத் துணைபுரியும் வகையில் கருவி நூல்களைத் தமிழில் தயாரித்து வெளியிடுவதற்கு 1997இல் ரூ.3/- இலட்சம் அனுமதித்தது. இந்நூல்களை உருவாக்குவதற்குப் பயிற்சி நிலையங்களில் பணியாற்றுகின்ற பட்டறிவு முதிர்ந்தவர்களையும், தேர்வினைத் தமிழில் எழுதி வெற்றி பெற்ற இந்திய ஆட்சிப் பணி அலுவலர்களையும், அவ்வத்துறையைச் சார்ந்த அறிஞர்களையும் உறுப்பினர்களாகக் கொண்ட குழு ஒன்றையும் அரசு அமைத்தது.

15.10.97இல் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் தலைமையில் இந்திய ஆட்சிப் பணித் தேர்வுக்குத் தமிழில் கருவி நூல்கள் தயாரிக்கும் திட்டம் தொடர்பான கலந்துரையாடல் கூட்டம் நடைபெற்றது.

24.11.97இல் மீண்டும் மாண்புமிகு அமைச்சர் அவர்களின் தலைமையில் கூடிய கூட்டத்தில் துறைசார்ந்த நூல்களைத் தயாரிக்கும் பணிக்கெனப் பின்வரும் நான்கு குழுக்கள் அமைக்கப் பெற்றன.

1. மொழியியல் குழு
2. தமிழ் இலக்கியக் குழு
3. வரலாற்றுக் குழு
4. புவியியல் குழு

27.1.98இல் மாண்புமிகு அமைச்சர் அவர்களின் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில், தமிழ் இலக்கியத்தை விருப்பப்பாடமாகக் கொண்டு தேர்வு எழுதும் மாணவர்களுக்கு உறுதுணைபுரியும் வகையில் 'தமிழ்மொழி தாள் - 1 (குறியீடு எண்.64)' பாடத்திட்டத்திற் கிணங்க வல்லுநர்கள் எழுதவேண்டிய கட்டுரைப் பகுதிகள் முடிவு செய்யப் பெற்றன. நூல் உருவாக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது.

## 18. தமிழ் இலக்கணநூல் வெளியிடல்

1998-99 ஆம் ஆண்டிற்கான மானியக் கோரிக்கையின் போது சட்டமன்றப் பேரவையில் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் 'தமிழ் இலக்கண நூலினை மீண்டும் உருவாக்க வல்லுநர்களைக் கொண்ட இலக்கணக்குழு அமைக்கப்படும்' என அறிவித்தார். இதனைத் தொடர்ந்து தொல்காப்பியம், நன்னூல் ஆகிய இலக்கண நூல்களின் அடிப்படையில் இக்காலத் தேவைக்கேற்பவும், பள்ளி/கல்லூரி மாணவர்கள் எளிதில் பயன் கொள்ளத்தக்க வகையிலும் ஒரு புதிய இலக்கணநூலை எழுதி வெளியிடுவதற்காக எட்டு வல்லுநர்கள் எண்மரைக் கொண்ட குழு ஒன்றினை அமைத்து அரசு ஆணையிட்டுள்ளது. [தமிழ் வளர்ச்சி - பண்பாடு (மற்றும்) அறநிலையத் (தவ1-2) துறை அரசாணை (நிலை) எண்:338, நாள்:28.7.1998]

இத்திட்டத்தின்படி நூலில் இடம்பெற வேண்டிய செய்திகள் - கட்டுரைகள் பற்றிக் குழுவில் முடிவு செய்யப் பெற்று நூல் உருவாக்கப் பணி நடை பெற்று வருகிறது.

## 19. சங்கப் புலவர்களுக்கு நினைவுத்தூண் அமைத்தல்

சங்ககாலப் புலவர்களின் தமிழ்த் தொண்டினைப் போற்றும் வகையில் அவர்கள் வாழ்ந்த இடங்களில் நினைவுத்தூண் அமைத்துச் சிறப்புச் செய்வதென அரசு முடிவு செய்தது. இதன்படி நான்கு இடங்களில் சங்கப் புலவர்களுக்கு நினைவுத் தூண்கள் நிறுவப் பெற்றன. விவரம் வருமாறு :

| | | |
|---|---|---|
| 1. ஒக்கூர் மாசாத்தியார், மாசாத்தனார் | - | ஒக்கூர் (சிவகங்கை மாவட்டம்) |
| 2. நல்லூர் நத்தத்தனார் | - | இடைகழி நாட்டு நல்லூர் (காஞ்சிபுரம் மாவட்டம்) |
| 3. மாங்குடி மருதனார் | - | மாங்குடி (திருநெல்வேலி மாவட்டம்) |
| 4. கருவூர்ப் புலவர்கள் பன்னிருவர் | - | கருவூர் (திருச்சிராப்பள்ளி மாவட்டம்) |

மேலும், சங்கப் புலவர்கள் பலருக்கு நினைவுத்தூண்கள் அமைப்பது தொடர்பான நடவடிக்கை இப்போது அரசின் ஆய்வில் உள்ளது. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே' 'உலக மக்களெல்லாம் நம் உறவே' எனக் கூறித் தமிழரின் பண்பாட்டை உலகறியச் செய்த புகழ்பெற்ற சங்கப் புலவர் கணியன் பூங்குன்றனாருக்கு முன்பே நினைவுத்தூண் நிறுவப்பட்டுள்ளது. மேலும்

இப்புலவருக்கு நூலகத்துடன் கூடிய மணிமண்டபம் அமைக்கும் திட்டமும் அரசின் ஆய்வில் உள்ளது.

## 20. வெளிநாடுகளுக்குத் தமிழ் நூல்களை அன்பளிப்பாக வழங்கும் திட்டம்

தேர்ந்தெடுக்கப்பெற்ற வெளிநாடுகளுக்குத் தமிழ்மொழி, இலக்கியம், பண்பாடு தொடர்பான நூல்களை அன்பளிப்பாக வழங்குவதற்கென அரசு ரூ.5 இலட்சம் அனுமதித்துள்ளது. இத்திட்டத்தின்கீழ் நூல்கள் வாங்கப் பெற்று 22 வெவ்வேறு நாடுகளுக்கு அனுப்பப்படும்.

1998 வரை மொரீசியசு, சிங்கப்பூர், ரீயூனியன் ஆகிய நாடுகளுக்கு நூல்கள் அனுப்பப்பட்டுள்ளன. ஒப்பளிப்புச் செய்யப்பட்டுள்ள தொகை ரூ.5 இலட்சத்தில் 1998 முடிய நூல்கள் வாங்கியமை, அனுப்புகைச் செலவு ஆகிய இனங்களில் மொத்தம் ரூபாய் 4,47,780/- செலவு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## 21. தமிழ் வளர்ச்சி மன்றம்

1979ஆம் ஆண்டில் திருத்தி அமைக்கப்பட்ட 'தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம்' 10.1.94ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி- பண்பாட்டுத் துறை அரசாணை (நிலை) எண்.3-இல் 'தமிழ் வளர்ச்சி மன்றம்' என்ற பெயரில் மாற்றி அமைக்கப்பட்டது.

இம்மன்றம் மூன்று முறை கூடி விவாதித்தது. ஆட்சிமொழி, பயிற்றுமொழி, எழுத்துச்சீர்திருத்தம் குறித்த மூன்று குழுக்கள் அமைக்கப்பெற்றன. அக்குழுவினர் அறிக்கைகள் தயாரித்து அரசிடம் அளித்துள்ளார்கள்.

27.8.97ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை அரசாணை நிலை எண்.222 -இல் 'தமிழ் வளர்ச்சி மன்றம்' புதிதாகத் திருத்தியமைக்கப் பெற்றது. மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களைத் தலைவராகவும், மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்களைத் துணைத் தலைவராகவும், தமிழ் வளர்ச்சி இயக்குநர் அவர்களை உறுப்பினர் - செயலராகவும், 36 அறிஞர்களை உறுப்பினர்களாகவும் கொண்டு தமிழ் வளர்ச்சி மன்றம் செயற்படுகிறது.தமிழ் வளர்ச்சி மன்றத்தின் பணிகள் வரையறுக்கப்பட்டுள்ளன.

இம்மன்றத்தின் இரண்டாம் கூட்டம் 1.9.98இலும், மூன்றாம் கூட்டம் 4.11.98இலும் நடைபெற்றது. மூன்றாம் கூட்டத்தில் மாண்புமிகு அமைச்சர் அவர்கள் 13.5.96க்குப் பின் தமிழ் வளர்ச்சித்துறை செய்த பணிகள் குறித்த ஏடு ஒன்றை வெளியிட்டு உறுப்பினர் அனைவருக்கும் வழங்கினார்.

தமிழ் வளர்ச்சி மன்றம் அரசுக்குத் தமிழ் மேம்பாடு தொடர்பான பணிகளில் அறிவுரை வழங்கவும், ஆற்றுப்படுத்தவும் பொறுப்பமைந்த உயர்நிலைக்குழுவாகச் செயற்படுகிறது இதனடிப் படையில், இம்மன்றம் மேற்கொண்டுள்ள சில முடிவுகள் குறிப்பிடத்தக்கனவாகும். தமிழ் மொழியை அரசுத்துறைகளில் முழுமையான அளவில் ஆட்சி மொழியாகச் செயற்படுத்துதல், அரசாணைகளைத் தமிழிலேயே வெளியிடுதல், தமிழை ஒரு பாடமொழியாகச் சொல்லித்தரும் மழலையர்/தொடக்கப் பள்ளிகளுக்கே அரசு ஏற்பு வழங்குதல், வரலாறு, சமூக அறிவியல், கணக்கு போன்ற பாடங்களைத் தமிழில் பயிற்றுவித்தல், இதன் தொடர்ச்சியாக அறிவியல் பாடங்களையும் தமிழில் பயிற்றுவித்தல், இவ்வாறு செயற்படும் பள்ளிகளுக்குக் கட்டணச் சலுகை வழங்குதல், பாடநூல்களை இலவசமாக வழங்குதல் போன்ற சீரிய செயற்பாடுகளை நிறைவேற்றுமாறு இம்மன்றம் அரசுக்குப் பரிந்துரை செய்துள்ளது. இப்பரிந்துரைகளை ஏற்று அரசு அரசாணைகளைப் பிறப்பித்துள்ளது

## 22. கல்லூரி மாணவர்களுக்கான போட்டி - பரிசு

மாணவர்கள் தமிழ் மொழியின்பாற் கொண்டுள்ள ஆர்வத்தை மேம்படுத்தவும், தமிழ்மொழித் தேர்ச்சியை ஊக்குவிக்கும் முறையிலும், தமிழ் ஆட்சிமொழித்திட்டச் செயலாக்கத்திற்கு உறுதுணை புரியும் வகையிலும், அறிவியல் தமிழின் இன்றியமையாமையை எடுத்துரைக்கும் வகையிலும் கல்லூரி மாணவர்களிடையே பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டி நடத்திப் பரிசு வழங்க இத்திட்டம் வகை செய்கிறது. இவ்வகையில் முதற்பரிசு ரூ 1500/- இரண்டாம் பரிசு ரூ.1000/- மூன்றாம் பரிசு ரூ.500/- ஆக வழங்கப்படும். இத்திட்டத்தைச் செயற்படுத்துவதற்கென தமிழ் வளர்ச்சி -பண் பாட்டுத்துறை (த.1 1.) அரசாணை நிலை எண்.198, நாள் 2.9.1996இல் ரூ.2,00,000 ஒப்பளிப்புச் செய்யப் பட்டுள்ளது. இத்தொகை நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கியில் வைப்புத்தொகையாக வைக்கப்பட்டு, அதிலிருந்து பெறப்படும் வட்டித் தொகையைக் கொண்டு இப்பரிசுகளை வழங்க வகை செய்யப்பட்டுள்ளது.

## 23. தமிழர் வாழ்வியல் கையேடு வெளியிடல்

பிறந்தது முதல் இறுதிநாள் வரை வாழ்க்கையின் ஒவ்வொரு கால கட்டத்திலும் தமிழன் கடைப்பிடித்திட வேண்டிய அறிவார்ந்த வாழ்க்கை நடைமுறைகள் தொகுக்கப்பட வேண்டும் என்ற கருத்தினைச் செயற்படுத்தும் நோக்கில் இத்திட்டம் தயாரிக்கப்பட்டுள்ளது இதற்கெனத் 'தமிழர் வாழ்வியல் கையேட்டினைத்' தயாரிக்கக் குழு ஒன்றையும் அரசு அமைத்துள்ளது.

## 24. தமிழ்த் தாத்தா உ.வே.சாமிநாதையர் அவர்களின் பிறந்த நாள் விழா

21.1.1994 ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை அரசாணை எண்.13-இன்படித் தமிழ்த் தாத்தா உ.வே.சாமிநாதையர் அவர்களின் பிறந்த நாளான பிப்ரவரி 19ஆம் நாளன்று, சென்னை மாநிலக் கல்லூரி வளாகத்தில் அமைந்துள்ள தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாதையர் அவர்களின் திருவுருவச் சிலைக்குத் தமிழ்நாடு அரசின் சார்பில், மாண்புமிகு அமைச்சர் பெருமக்கள், தமிழ்ச் சான்றோர்கள் ஆகியோர் மாலை அணிவித்துச் சிறப்புச் செய்யும் நிகழ்வு ஆண்டு தோறும் நடைபெற்று வருகிறது.

## 25. சித்திரை முழு நிலவு விழா

17.4.97ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை அரசாணை நிலை எண்.85-இன்படிச் சென்னை - காமராசர் சாலையில் கடற்கரையில் அமைந்திருக்கும் கண்ணகி சிலைக்கு , ஆண்டுதோறும் சித்திரை முழு நிலவு நாளில், தமிழ்நாடு அரசின் சார்பில், மாண்புமிகு அமைச்சர் பெருமக்களும், தமிழ்ச் சான்றோர்களும் கலந்து கொண்டு மாலை அணிவித்துச் சிறப்புச் செய்கிறார்கள். அந்நாளில் சமூக நலத்துறையின் சார்பாக மகளிர் குழுக்களின் இசை நிகழ்ச்சிகளும் நடத்தப் பெறுகின்றன.

**நல்கைகள்**

## 26. குழந்தைகள் கலைக்களஞ்சியம் - மறுபதிப்பு நிதியுதவி

மக்கள் கற்று அறிய வேண்டிய பொருள்களனைத்தும் அடங்கிய நூல் 'கலைக் களஞ்சியம்' எனப்படும். இது ஆங்கிலத்தில் '**Encyclopaedia**' என்றழைக்கப்பெறும். கலைக்களஞ்சியம் என்று தமிழில் குறிப்பிடும்போது கலை என்னும் சொல் அழகுக் கலைகளையும், அறிவுப்பொருள்களையும் குறிப்பதாகும். 'கலைக் களஞ்சியம்' என்பது அகராதியினின்றும் வேறுபட்டதாகும். ஒரு சொல்லின் பொருள், அதன் வேர்ச்சொல் என அச்சொல்லைப் பற்றி அறிய வேண்டுவனவற்றை மட்டுமே தருவது 'அகராதி'யாகும். இதுவரை மனிதன் அறிந்துள்ள, அறியவேண்டிய அறிவுப் பொருள்களையும் அழகுப் பொருள்களையும் அவற்றின் அனைத்துக் கூறுகளைப் பற்றியும் தனித்தனியாக அகர வரிசையில் தொகுத்துச் சுருக்கமாகக் கூறும் நூலே 'கலைக் களஞ்சியம்' எனப்படும்.

உலகில் முதன்முதலாகக் 'கலைக் களஞ்சியம்' என்னும் நூலைத் தயாரிக்க வேண்டும் என்று எண்ணியவர்கள் சீன மக்களே. ஆனால்

அவர்கள் தயாரித்த நூலின் கட்டுரைகள் இக்காலத்துக் கலைக் களஞ்சியத்தில் அமைவதைப் போன்று அமையவில்லை. சீனர்கள் தொகுத்த நூல் அதுவரை இயற்றப்பட்டுள்ள நூல்களிலிருந்து அரிய பொருள்களைத் திரட்டித் தந்த தொகுப்பு முயற்சியாகவே இருந்தது.

பொருள்கள் அனைத்தையும் கொண்ட நூல் ஒன்றை உருவாக்க வேண்டும் என்ற எண்ணத்தை மேனாட்டில் முதன் முதலாகக் கூறியவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் கிரேக்க நாட்டிலிருந்தவரும், மேனாட்டு அறிவியற் கலைக்கு அடிகோலியவர் என்று கருதப்படுபவருமான அரிஸ்டாட்டில் என்னும் அறிஞர் ஆவார். அவருடைய கருத்தை ஏற்று அறிஞர்கள் பலர் அத்தகைய கலைக் களஞ்சியத்தை உருவாக்கப் பல நாடுகளிலும் முயன்று வந்தார்கள். **"Encyclopaedia"** என்னும் சொல்லை முதன்முதலாகக் கையாண்டவர் 1541 இல் ஜெர்மனியிலிருந்த ரிங்கல்பர் ஜீயஸ் என்பவர் ஆவார். ஆனால், இப்பொழுதுள்ள கலைக் களஞ்சியங்களில் பொருள்களை வரிசைப்படுத்தித் தந்தவர் ஆக்ஸ்டெட் (1588-1638) என்ற ஜெர்மானியரே.

தமிழில் 1902ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் - நாவல் கோட்டம் ஆ. முத்துப்பிள்ளை என்பவர் புராணம், இதிகாசம், இலக்கியம் முதலியவற்றிலிருந்து பொருள்களைத் திரட்டிக் கொடுக்க, அவற்றை அகர வரிசைப்படுத்தி 'அபிதான கோசம்' என்ற நூல் வெளியிடப்பட்டது. இவ்வாறாகத் தென்மொழிகளிலும், வடமொழிகளிலும் கலைக் களஞ்சியங்கள் பல்வேறு பொருள்களில் உருவாயின.

சுதந்திர இந்தியாவின் சென்னை மாநிலத்தில் முதலாவது கல்வி அமைச்சராக இருந்த திரு.தி.சு. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்கள் தமிழ் மொழியின் பன்முக வளர்ச்சி பற்றித் தொலைநோக்குடன் சிந்தித்தார். அந்த நோக்கினை எட்டுவதற்கென 1946இல் அவர் 'தமிழ் வளர்ச்சிக் கழகத்'தைத் தொடங்கினார். அதன் தலையாய குறிக்கோள்களில் ஒன்று, தமிழ்மொழி வளர்ச்சிக்கெனத் தமிழில் 'கலைக் களஞ்சியம்' தயாரிப்பதாகும். இப்பெரும்பணி 1947 அக்டோபரில் விஜயதசமி தினத்தன்று தொடங்கப்பட்டது. அந்நாளைய சிறந்த தமிழ் அறிஞரான திரு. பொ. திரிகூட சுந்தரம் பிள்ளை துணை ஆசிரியராகச் சேர்ந்தார். சென்னைப் பல்கலைக்கழகத்தின் அன்றைய துணை வேந்தரான டாக்டர் ஏ. இலட்சுமணசாமி முதலியாரின் தலைமையின் கீழ், சிறந்த அறிஞர்களான திருவாளர்கள் டி.கே.சிதம்பரநாத முதலியார், இரா.பி. சேதுப்பிள்ளை, மு.வரதராசனார், தெ.பொ.மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஆகியோரைக் கொண்ட குழு ஒன்று அமைக்கப்பட்டது. கல்கி கிருஷ்ணமூர்த்தியும், பேராசிரியர் கே. சுவாமிநாதனும் இக்குழுவின் செயலாளர்களாக இருந்தனர்.

எடுத்துக்கொண்ட பணி மகத்தானது என்பதாலும், அதற்கு முன்னர் அது போன்றதொரு முயற்சி ஏதும் எடுக்கப்பட்டதில்லை என்பதாலும் அதற்குப் பெருமளவில் சரியான திட்டமிடுதல் தேவைப்பட்டது. தகுதிவாய்ந்தவர்கள் பணியாற்றும் ஓர் அலுவலகம் திறக்கப்பட்டது. தேவையான பிற உதவிகளும் வழங்கப்பெற்றன. இந்தத் திட்டத்திற்குத் தேவையான அடிப்படைத் தரவுகளைத் திரட்டுவதற்கு இக்குழுவின் உறுப்பினர்களும், மற்ற அலுவலர்களும் பல ஆண்டுகள் கடுமையாக உழைத்தனர். ஒவ்வொன்றும் 750 பக்கங்களைக் கொண்ட, 10 தொகுதிகளை அகர வரிசையில் கொணர்வதெனத் திட்டமிடப்பட்டது.

கடும் முயற்சிக்குப் பின் 1954இல் முதலாவது தொகுதி வெளிக் கொணரப்பட்டது. அதன் பின்னர், ஒவ்வோர் ஆண்டும் ஒரு தொகுதி வெளிவந்தது. 1958இல் கலைக் களஞ்சியத்தின் 5ஆம் தொகுதி பண்டித ஜவஹர்லால் நேருவினால் வெளியிடப்பட்டது. 1963 திசம்பரில் 9ஆம் தொகுதி வெளிவந்தது. பத்துத் தொகுதிகளுக்குமான பொருளடக்க அகரவரிசை அட்டவணையுடன் கூடிய பத்தாவது இறுதித் தொகுதி 1968இல் வெளிக் கொணரப்பட்டது.

இத்திட்டத்திற்கென நிதியுதவி கோரித் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் தலைவரும், அன்றைய கல்வி அமைச்சருமான திரு. தி. சு. அவினாசி லிங்கம் செட்டியார் அவர்கள் 1947இல் அறிவிக்கை யொன்றை வெளியிட்டார். நல்லெண்ணம் கொண்ட பலர் நிதியுதவி தந்தனர். ஒருசில வாரங்களில், இலட்சக் கணக்கில் பணம் திரட்டப் பட்டது. இப்பணிக்குத் தேவையான நிதியில் பெரும்பங்கினை மத்திய, மாநில அரசுகள் வழங்கின. மத்திய அரசில், அக்காலத்தில் நிதி அமைச்சராக இருந்த திரு.ஆர்.கே. சண்முகம் செட்டியார் அவர்கள் இத்திட்டத்தில் ஆழ்ந்த ஈடுபாட்டுணர்வுடன் இதற்கான நிதியைத் தாராளமாக வழங்கினார்.

எந்த இந்திய மொழியும் அதுகாறும் கண்டிராத, கலைக்களஞ்சியப் பெரும் பணியை நிறைவு செய்த பின்னர், குழந்தைகளுக்கென, அழகிய வண்ணப்படங்களுடன் கூடிய 'குழந்தைகள் கலைக்களஞ்சியம்' தயாரிக்க திரு. தி.சு. அவினாசிலிங்கம் விழைந்தார். இந்தத் திட்டம் 1968இல் தொடங்கப்பட்டது. மாநில, மத்திய அரசுகளின் நிதியுதவியுடன் எட்டு ஆண்டுகளில் 10 தொகுதிகள் வெளிக்கொர்ணரப்பட்டன. பத்தாவது இறுதித் தொகுதி 1976இல் வெளியாயிற்று. இந்த இரண்டு பெரும்பணிகளையும் தொடர்ந்து தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் தலைவரான திரு.தி.சு.அவினாசிலிங்கம் செட்டியார் அவர்கள் கலைக் களஞ்சியத்தின் திருத்தப்பட்ட இரண்டாவது பதிப்பினை ஒவ்வொன்றும் 1000 பக்கங்களைக் கொண்ட 12 தொகுதிகளாக வெளியிட விரும்பினார். பத்தாண்டுக் காலத்தில் இதனைச் செய்து முடிப்பதற்கு ரூ.75 இலட்சம் மதிப்பிலான திட்டம் தயாரித்துத் தமிழக அரசிடம் அளிக்கப்பட்டது. இதற்கிடையே இந்தியாவில் 'அவசரநிலை' அறிவிக்கப்பட்டது. தமிழகம்

குடியரசுத் தலைவரின் ஆட்சிக்குள்ளானது திரு தி சு அவினாசிலிங்கம் அவர்கள் இத்திட்டத்தைச் செயலாக்கக் கடும முயற்சிகளை மேற்கொண்டு, ஆளுநரின் அன்றைய ஆலோசகரான திரு.ஆர் வி. சுப்பிரமணியத்துடன் தொடர்பு கொண்டார் அரசும் அதற்கு இசைந்து, இத்திட்டத்திற்கென முதல் தவணையாக ரூ 2 00 இலட்சம் உதவி வழங்கிற்று.

பின்னர் சட்டமன்றத் தேர்தல் நடைபெற்று டாக்டர் எம் ஜி ஆர் அவர்கள் தலைமையில் புதிய அரசு பதவியேற்றது புதிய முதல்வர் அவர்கள் இத்திட்டத்தில் ஈடுபாடு கொண்டு, திட்டத்தைத் தொடங்கி வைக்க ஒப்புக் கொண்டார்கள் திட்டத்தின தொடக்க விழா தந்தை பெரியார் அவர்களின் 100 ஆவது பிறந்த நாளன்று, அவர் பிறந்த இடமான ஈரோட்டில 17.9 78இல கலைமகள கல்விக் கழக வளாகத்தில் சிறப்பாக நடைபெற்றது

இவ்வாறாகத் தமிழ்க் கலைக்களஞ்சியத்தின் இரண்டாவது பதிப்பிற்கான பணி, கூடுதல் அலுவலர்களுடன் தொடங்கப்பட்டது முதுமை காரணமாகத் திரு தூரன் பணியில் தொடர முடியாததால், பேராசிரியர் ந சுப்புரெட்டியார் ஆசிரியராக நியமிக்கபபட்டார் இப்பணிக்கெனப் புதிய அரசு மேலும ரூ 3 இலட்சம் வழங்கிற்று தயாரிப்புப் பணியினைத் தமிழ் வளர்ச்சிக் கழகம மேற்கொள்வதெனவும் முடிவு செய்யப்பட்டது இதற்கிடையே பத்தாண்டுக் காலத்தில் உரு 75 இலட்சம் மதிப்பில் முடிக்கப்படுவதற்கான திட்டம் அரசின் ஏற்புககுக் காத்திருந்தது. அத்திட்டத்தை முழுமையாக ஏற்றுக் கொண்டு ஆண்டுதோறும் நிதியுதவியளிக்க அரசு ஒப்புக் கொள்ள வேண்டும என்று தமிழ வளர்ச்சிக் கழகத்தின் தலைவர் திரு தி சு. அவினாசிலிங்கம செட்டியார் முனைப்புடன் முயன்றார் எனினும் அரசு இதில் ஈடுபாடு காட்டாமையால் இப்பணியை நிறுத்தி விடுவதெனத் தமிழ்வளர்ச்சிக் கழகம் தீர்மானித்தது ஏற்கனவே இரண்டு தொகுதிகளுக்கான விவரங்கள் திரட்டப்பட்டிருந்தன அரசாங்கம் வழங்கிய ரூ.5 இலட்சத்தில், செலவு போக மீதமாக ரூ 1 67 இலட்சம் தமிழ் வளர்ச்சிக் கழகத்திடம இருந்தது அரசாங்க நிதியில் வாங்கப்பட்ட 2 தட்டச்சுகளும், சில நாற்காலிகளும் மேசைகளும் இருந்தன இவையும, 2 தொகுதிகளாகத் திரடடப்பட்ட விவரங்களும் , மீதததொகை ரூ.1 67 இலட்சத்துக்கான காசோலையும் 24.12.1982 அன்று அரசிடம் ஒப்படைககப்பட்டது

இதையடுத்துத் தமிழ வளர்ச்சிக் கழகத்திடம் இருந்த நிதி மற்றும வசதிகளுடன் குழந்தைகள் கலைக்களஞ்சியத்தின் இரண்டாவது பதிப்பினை வெளியிடுவதறகான பணியைத் தொடங்க முடிவு செய்யப்பட்டது. ஆசிரியர் ஒருவரும், எழுத்தர் ஒருவரும், ஒரு தட்டச்சரும் நியமிக்கப்படடனர் 1981இல் பணி தொடங்கப் பெற்றது. இதற்கிடையே முதுமை காரணமாகத் தொடர்ந்து பணியாற்ற இயலாததால்

திரு. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்கள் தனக்குப் பின்னர் பொறுப்பினை ஏற்று நடத்தத் திரு சி.சுப்பிரமணியம் அவர்களை நியமித்தார். திரு சி. சுப்பிரமணியம் அவர்களின் தலைமையில் தொடங்கப்பட்ட இரண்டாவது பதிப்பிற்கான புதிய திட்டத்தின்படி 1982இல் முதலாவது தொகுதி வெளிக்கொணரப்பட்டது. 10ஆவது தொகுதியை வெளியிட்டு 1988இல் இப்பணி நிறைவு செய்யப்பட்டது. இத்திட்டத்திற்கென மத்திய அரசு ரூ 6 இலட்சம் வழங்கிற்று. மொத்தம் 10 தொகுதிகளையும் வெளியிட ரூ.12 இலட்சம் தேவைப்பட்டது. அதனைத் தனது சொந்த ஆதாரங்களிலிருந்துத் திரட்டி, தமிழ் வளர்ச்சிக் கழகம் அந்தத் திட்டத்தை நிறைவு செய்தது. 1990இல் மராட்டிய மாநில ஆளுநராகப் பதவியேற்றபோது திரு.சி சுப்பிரமணியம் அவர்கள் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் தலைவராக முனைவர் வா.செ குழந்தைசாமி அவர்களை நியமித்தார். அவரது தலைமையில் 10.3.1990இலிருந்து தமிழ் வளர்ச்சிக் கழகம் செயலாற்றி வருகிறது

குழந்தைகள் கலைக்களஞ்சியம், மிக நன்றாக அமைந்துள்ளதால் அதனை மறுபதிப்புச் செய்யத் தமிழ் வளர்ச்சிக் கழகம் விரும்பியது. எனினும் நிதிப் பற்றாக் குறையால் அதனை மேற்கொள்ள இயலவில்லை. எனவே அந்நூல்களை வெளியிட மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் தமிழ் வளர்ச்சிக் கழகத்திற்கு உதவி செய்தார். குழந்தைகள் கலைக்களஞ்சியத்தின் ஒவ்வொரு தொகுதியிலும் 10,000 படிகள் அச்சிடத் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்திற்கு அனுமதி வழங்கப் பட்டது. கரும்பலகைத் திட்டம் மற்றும் முதியோர் கல்வித் திட்டத்தின்கீழ், அவை குழந்தைகளிடையே வழங்கப்பட்டு வருகிறது.

தமிழ் வளர்ச்சிக் கழகத்தால் வெளியிடப்பெற்ற குழந்தைகள் கலைக்களஞ்சியத்தின் இன்றியமையாமையைக் கருத்திற்கொண்டு தமிழ்மொழியை வளப்படுத்தும் நோக்குடன் அரசு குழந்தைகள் கலைக் களஞ்சியத்தின் பத்துத் தொகுதிகளையும் மறுபதிப்பு செய்து வெளியிட ஆணையிட்டு இத்திட்டத்திற்கென ரூ.10 இலட்சம் நிதி ஒதுக்கீடு செய்தது பத்துத் தொகுதிகளும் மறுபதிப்பு செய்யப் பெற்று 24 12.98 அன்று மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் வெளியிடப்பட்டுள்ளன குழந்தைகள் கலைக்களஞ்சியங்களின் (10 தொகுதிகள்) விவரம் வருமாறு :

1. குழந்தைகள் கலைக்களஞ்சியம் தொகுதி 1 அ முதல் இந்தியா வரை- தமிழ் வளர்ச்சிக் கழகம் - கலைக்களஞ்சிய அலுவலகம், சென்னை-5, 1968

2 குழந்தைகள் கலைக்களஞ்சியம் தொகுதி 2 இந்துமதம் முதல் ஔவையார் வரை - தமிழ் வளர்ச்சிக் கழகம் - கலைக்களஞ்சிய அலுவலகம், சென்னை - 5, 1970

3. குழந்தைகள் கலைக்களஞ்சியம் தொகுதி 3 கங்கை முதல் கும்மி வரை -தமிழ் வளர்ச்சிக் கழகம் - கலைக்களஞ்சிய அலுவலகம், சென்னை - 5, 1971.

4. குழந்தைகள் கலைக்களஞ்சியம் தொகுதி 4 குயில் முதல் டார்ஜீலிங் வரை -தமிழ் வளர்ச்சிக் கழகம் - கலைக்களஞ்சிய அலுவலகம், சென்னை - 5, 1972.

5. குழந்தைகள் கலைக்களஞ்சியம் தொகுதி 5 டால்ட்டன் முதல் நாணயங்கள் வரை -தமிழ் வளர்ச்சிக் கழகம்-கலைக்களஞ்சிய அலுவலகம், சென்னை - 5, 1972.

6. குழந்தைகள் கலைக்களஞ்சியம் தொகுதி 6 நாய் முதல் பிரிட்டன் வரை -தமிழ் வளர்ச்சிக் கழகம் - கலைக்களஞ்சிய அலுவலகம், சென்னை-5, 1973.

7. குழந்தைகள் கலைக்களஞ்சியம் தொகுதி 7 பிரீஸ்ட்லி முதல் மலை ஏற்றம் வரை - தமிழ் வளர்ச்சிக் கழகம் - கலைக்களஞ்சிய அலுவலகம், சென்னை - 5, 1974.

8. குழந்தைகள் கலைக்களஞ்சியம் தொகுதி 8 மழை முதல் லியனார்டோ வரை - தமிழ் வளர்ச்சிக் கழகம் - கலைக்களஞ்சிய அலுவலகம், சென்னை-5, 1974.

9. குழந்தைகள் கலைக்களஞ்சியம் தொகுதி 9 லிவிங்ஸ்ட்டன் முதல் வைரஸ் வரை - தமிழ் வளர்ச்சிக் கழகம் - கலைக்களஞ்சிய அலுவலகம், சென்னை-5, 1975.

10. குழந்தைகள் கலைக்களஞ்சியம் தொகுதி 10, வௌவால் முதல் ஹௌரா வரை தமிழ் வளர்ச்சிக் கழகம் -கலைக் களஞ்சிய அலுவலகம், சென்னை-5, 1976.

## 27. தமிழில் மருத்துவக் கலைக்களஞ்சியம் தயாரித்தல்

மருத்துவக் கலைக்களஞ்சியத்தைத் தமிழில் வெளியிட்டுத் தமிழுக்குப் புதிய வளம் சேர்க்கக் கருதிய அரசு தமிழில் மருத்துவக் களஞ்சியம் தயாரிப்பதற்காக உரூ.15 இலட்சத்தை இறுதி நிலைத் தொடராச் செலவினமாக ஒப்பளிப்பு செய்து 98-99இல் உரூ.2/- இலட்சத்திற்கான [அரசாணை (2டி)எண்.7,தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் (த.வ.1-1)துறை, நாள் 4.6.98] செலவினை மேற்கொள்ள அனுமதித்துள்ளது. இக்களஞ்சியம் தயாரிப்பதற்கான ஆயத்தப் பணிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## 28. சொல்லகராதி, அகராதி - மானியம் வழங்கல்

தமிழ்மொழி மேம்பாட்டிற்கு இன்றியமையாத சொல் அகராதிகளும், அகராதிகளும் பெருமளவில் தயாரிக்கப்பட்டு மக்களின்

பயன்பாட்டிற்கு அளிக்கப்படுவது ஏற்புடையதாக அமையும். எனவே இத்தகைய அகராதிகளைத் தயாரிக்க முன்வரும் பல்கலைக் கழகங்களுக்கும், தனிப்பட்டவர்களுக்கும், நிறுவனங்களுக்கும் மானியம் வழங்க அரசு முடிவு செய்தது. இப்பணிக்காக உரூ.10 இலட்சத்தைத் தொடராச் செலவினமாக ஒப்பளிப்பு செய்து, 98-99 ஆம் ஆண்டில் உரூ.2/-இலட்சம் செலவு மேற்கொள்ளவும் அனுமதித்துள்ளது. [அரசாணை (2டி)எண் : 6 : தமிழ்வளர்ச்சி- பண்பாடு மற்றும் அறநிலையத்(தவ1-2) துறை, நாள் 4.6.1998].

இதுமட்டுமன்றி ஆசியவியல் நிறுவனத்திற்கு இவ்வரசு 1996-97இல் உரூ.19 இலட்சமும், 1997-98 இல் உரூ.19 இலட்சமும் வழங்கியுள்ளது. இந்நிறுவனத்தில் 'தமிழ் இலக்கியக் கலைக் களஞ்சியம்', 'தமிழ்-சப்பான்-தெலுங்கு-கன்னடம் அகரமுதலி', ஆகிய பணிகள் நடைபெறுகின்றன.

## தமிழ் மொழியைப் பரப்புதல் மற்றும் தமிழ் வளர்ச்சிப் பணிகளுக்கு நிதியுதவி

தமிழ் மொழியைப் பரப்புதல், தமிழ் மொழி வளர்ச்சி, மேம்பாடு முதலியவற்றை நோக்கமாகக் கொண்டு இத்திட்டம் பின்வருமாறு மூன்று வகைகளில் செயற்படுத்தப்பட்டு வருகிறது.

## 29. பிற மாநிலப் பல்கலைக் கழகங்களில் தமிழிருக்கை நிறுவுதல், பட்டய வகுப்பு நடத்துதல் மற்றும் கல்வி நிறுவனங்களுக்கு மானியம்/நிதியுதவி

பிற மாநிலங்களிலுள்ள தமிழ் மக்கள் தமிழ் மொழியைக் கற்பதற்கான வாய்ப்பினை ஏற்படுத்தும் பொருட்டும், மற்றவர்கள் தமிழ் கற்கும் ஆர்வத்தினை ஊக்குவிக்கும் பொருட்டும் பிற மாநிலங்களிலுள்ள பல்கலைக் கழகங்களில் தமிழிருக்கை நிறுவுவதற்கும், தமிழில் பட்டய வகுப்பு நடத்துவதற்கும் மானியம் / நிதியுதவி வழங்கப் பெறுகிறது. வடமாநிலங்களிலுள்ள பல பல்கலைக்கழகங்களுக்கு இத்தகைய மானியம் / நிதியுதவி வழங்கப் பெற்றுள்ளது. ஆந்திர மாநிலத்தின் திருவேங்கடவன் பல்கலைக்கழகம், மைசூரிலுள்ள இந்திய மொழிகள் மைய நிறுவனம் ஆகியவை தொடர்ந்து நிதியுதவியைப் பெறுகின்றன. பிற மாநிலப் பல்கலைக்கழகங்கள், தமிழ்ச் சங்கங்கள், தமிழ் அமைப்புகள் ஆகியவற்றிலிருந்து அவ்வப்போது வரப்பெறும் கோரிக்கைகளுக்கேற்ப இந்த நிதியுதவி/மானியம் வழங்கப்பெறுகிறது.

## 30. தமிழ்ச்சங்கங்களுக்கு நிதியுதவி

தமிழ் நாட்டிலும், பிற மாநிலங்களிலும், அயல் நாடுகளிலும் உள்ள தமிழ்ச்சங்கங்களிலிருந்து அவ்வப்போது வரப்பெறும் வேண்டு

கோள்களின் அடிப்படையில், அவைகளின் தேவைக்கேற்ப நிதியுதவி வழங்கப் பெறுகிறது. கட்டடம் கட்டுதல், கட்டடச் சீரமைப்பு, சங்கத்தின் சார்பில் நடத்தப்பெறும் பள்ளிகளைப் பராமரித்தல், சங்கத்தின் மேம்பாடு மற்றும் தமிழ்ப் பணித் திட்டங்கள் ஆகியவற்றிற்காகத் தமிழ்ச் சங்கங்களுக்கு நிதியுதவி வழங்கப் பெறுகிறது.

தில்லித் தமிழ்ச் சங்கம், மதுரைத் தமிழ்ச் சங்கம், மும்பைத் தமிழ்ச் சங்கம் ஆகியவை அண்மையில் நிதியுதவி பெற்ற சங்கங்களாகும். மேலும், பெங்களூர்த்.தமிழ்ச் சங்கம் நடத்தும் காமராசர் உயர்நிலைப் பள்ளிக்கு ஆண்டு தோறும் ரூ.15.000/- ஆண்டுமானியம் வழங்கவும் ஆணை பிறப்பிக்கப் பெற்றுள்ளது.

## 31. தமிழாய்வுப்பணிகளில் ஈடுபடும் நிறுவனங்களுக்கு மானியம் வழங்குதல்

தமிழியல், தமிழ்ப் பண்பாடு, மொழி வளர்ச்சி தொடர்பிலான தமிழாய்வுப் பணிகளில் ஈடுபடும் நிறுவனங்களுக்கு அந்நிறுவனங்களின் ஆய்வுத் திட்டம் மற்றும் பணிகளின் தன்மைக்கேற்ப மானியம் வழங்கப் பெறுகிறது.

சென்னையிலுள்ள ஆசியவியல் ஆய்வு நிறுவனம், தென் மொழிகள் புத்தக நிறுவனம், திருவனந்தபுரத்திலுள்ள பன்னாட்டுத் திராவிட மொழியியற் பள்ளிஆகிய நிறுவனங்களுக்கு இவ்வகையில் ஆண்டு மானியம் வழங்கப்பெற்று வருகிறது. அவ்வப்போது நேர்வுகளுக்கேற்ப இதற்குரிய வரையறைகள் முடிவு செய்யப் பெறுகின்றன.

## 32. திராவிடப் பல்கலைக் கழகம் அமைக்கத் தமிழக அரசின் பங்கு

அறிஞர் கால்டுவெல் 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' எனும் ஆய்வு நூலைத் தந்தார். தமிழின் தாய்மைத் தன்மையை, பின்வந்த பாவாணர் போன்ற ஆய்வாளர்களும் உறுதி செய்தனர். இந்நிலையில் தென்னக மொழிகளையும் அவற்றிடையே ஊடாடி நிற்கும் பண்பாட்டுக் கூறுகளையும் உறுதி செய்யும் வகையில் ஆந்திர மாநில முதல்வர் மாண்புமிகு திரு. சந்திரபாபு நாயுடு அவர்களின் முயற்சியில் 'குப்பம்' எனும் நகரில் 'திராவிடப் பல்கலைக்கழகம்' தொடங்கப்பட்டது. இது குறித்து மடல் வந்ததுமே மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள். தமிழக அரசின் சார்பில் உருபா 50 இலட்சம் பங்குத் தொகையாக வழங்கியுள்ளார்.

## 33. வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களில் தமிழிருக்கை தோற்றுவித்தல்

தமிழ்மொழி உயர்தனிச் செம்மொழியாக விளங்குகிறது என்பதும், தமிழ் பற்றிய ஆய்வின்றி இந்தியப் பண்பாட்டை நன்கு அறிந்து கொள்ள முடியாது என்பதும் பல்வேறு நாட்டு அறிஞர்கள் கருத்தாக அமைவதுடன் தமிழ் மொழியைக் கற்றுக் கொள்ளும் ஆர்வமும் தற்போது வளர்ந்துள்ளது. எனவே வெளிநாடுகளில் தமிழர்கள் மிகுதியாக வாழும் பகுதிகளில் தமிழ்க் கல்விக்கு வாய்ப்பளிக்கும் வகையிலும், தமிழ்மொழியின் ஆற்றலை, தமிழ்ப் பண்பாட்டின் பெருமையை, தமிழ்க் கலையின் சிறப்பினை, இலக்கிய வளத்தினை, அறிவியல் கூறுகளை அறிந்துணரத் தக்க வகையிலும், நற்பெயர் பெற்ற ஏதாவது ஒரு பல்கலைக் கழகத்தில் தமிழிருக்கையினைத் தோற்றுவிக்கக் கருதியும், மேலைப் பண்பாட்டுக்குப் பழக்கமாகிவிட்ட இக்காலகட்டத்தில் தமிழின் பெருமையையும், அதன் சிறப்புக் கூறுகளையும் எடுத்துக் காட்டுவது இன்றியமையாத தேவை என்பதைக் கருதியும் அயல்நாட்டுப் பல்கலைக்கழகம் ஒன்றில் தமிழிருக்கை தோற்றுவிக்கத் தமிழக அரசு ரூ.50 இலட்சம் அறக்கட்டளை மானியம் வழங்க முடிவு செய்து ஆணையிட்டுள்ளது. (இதற்கிணையான தொகையைத் தொடர்புடைய பல்கலைக்கழகம் வழங்க வேண்டும்). [அரசாணை 1டி எண். 60, தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் (தவ1-1) துறை, நாள் 17.7.1998]. இவ்வகையில் மலேயப் பல்கலைக் கழகத்தில் தமிழிருக்கை தோற்றுவிப்பதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## 34. பிற மாநிலங்களில் 'தமிழ் மையம்' அமைத்தல்

தமிழ் மொழி வளர்ச்சிக்காகப் பிற மாநிலங்களில் 'தமிழ் மையம்' அமைக்க அரசு முடிவு செய்தது. முதற்கட்டமாக மேற்கு வங்காளம், மராட்டியம் ஆகிய இரண்டு மாநிலங்களில் 'தமிழ் மையம்' அமைத்துச் செயற்படுத்துவதற்காக 1998-99 ஆம் ஆண்டில் ரூ.12 இலட்சம் ஒப்பளிப்பு செய்தது. [அரசாணை(2டி) எண்8,தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலைய.(தவ1-1)த்துறை, நாள் 5.6.1998] இதன் தொடர்பான பணிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## 35. நூல்கள் நாட்டுடைமையாக்கல்

### 1. பாரதியின் படைப்புகள்

தேசியக் கவி - பாட்டுக்கொரு புலவன் பாரதியின் படைப்புகள் அனைத்திற்கும் விலை கொடுத்து வெளியீட்டுரிமை பெற்றிருந்த ஏ.வி.எம். திரைப்படத் தயாரிப்பு நிறுவன உரிமையாளர் திரு. ஏ.வி. மெய்யப்பன் அவர்கள் பாரதியார் படைப்புகள் தொடர்பான அனைத்து

உரிமைகளையும் தமிழக அரசுக்கு இலவசமாக அளித்தார். அதன் அடிப்படையில் பாரதியின் படைப்புகள் நாட்டுடைமையாக்கப் பெற்றன. இத்தொடர்பில் தமிழ்நாடு அரசுக்குச் செலவினம் எதுவும் அமையவில்லை.

## 2. சிலம்புச் செல்வர் டாக்டர் ம.பொ. சிவஞானம் அவர்களின் நூல்

சிலம்புச் செல்வர் டாக்டர் ம.பொ. சிவஞானம் அவர்கள் எழுதிய 'விடுதலைப் போரில் தமிழகம்' என்னும் நூல் 1984ஆம் ஆண்டில் நாட்டுடைமையாக்கப்பட்டு அவருக்குப் பரிவுத் தொகையாக ரூ.1,00,000/- வழங்கப்பட்டது. (அரசாணை நிலை எண்.22, தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை, நாள் : 25.6.84). இத்தொகைக்குரிய வருமானவரியையும் (ரூ.54,192) அரசே ஏற்றுக் கொண்டது. [அரசாணை நிலை எண். 181, தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை, நாள் : 7.10.92]

## 3. பாவேந்தர் பாரதிதாசன் நூல்கள்

'தமிழியக்கம்' கண்ட புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களின் நூல்கள் அனைத்தும் 1990ஆம் ஆண்டில் நாட்டுடைமையாக்கப்பட்டன. (அரசாணை நிலை எண்.286, தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை, நாள் : 13.12.90) பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் மரபுரிமையர்க்கு ரூ.8,00,000/-மும், இந்நூல்களின் பதிப்புரிமை பெற்றிருந்த இரு பதிப்பகங்கள் ஒவ்வொன்றிற்கும் ரூ.1,00,000/-மும் வழங்கப்பட்டன. இவ்வகையில் மொத்த பரிவுத் தொகை ரூ.10,00,000/- ஆகும்.

## 4. பேரறிஞர் அண்ணா நூல்கள்

தமிழின உயர்வுக்குப் பாடுபட்ட ஒப்பில்லாத் தலைவர் பேரறிஞர் அண்ணா அவர்கள் தம் பேச்சாலும், எழுத்தாலும் கோடிக்கணக்கான தமிழர்களின் நெஞ்சில் நீங்கா இடம் பெற்றவர். பேரறிஞர் அண்ணா அவர்களால் மேடைத் தமிழ் மேன்மை பெற்றது. எழுதும் முறையில் ஒரு புதிய பரம்பரையே உருவானது. பகுத்தறிவு, இன உணர்வு, சமுதாயச் சீர்திருத்தம் எனப் பன்முகப்பாங்கில் இவர் எழுத்தும், பேச்சும் இன்முகம் காட்டித் தமிழர்களை எழுச்சி கொள்ளச் செய்தன. அரசியல் வரலாற்றிலும், தமிழ்மொழி இலக்கிய வரலாற்றிலும் 'அண்ணாகாலம்' எனக் குறிப்பிடத்தக்க சிறப்பினை இவருடைய தமிழ்த் தொண்டு உருவாக்கியது. பேரறிஞர் அண்ணாவின் படைப்புகள் அனைத்தும் 1995ஆம் ஆண்டில் நாட்டுடைமையாக்கப்பட்டுப் பேரறிஞர் அண்ணா அவர்களின் துணைவியார் திருமதி. இராணி அண்ணாதுரை அவர்களிடம் பரிவுத் தொகையாக ரூ.75,00,000 வழங்கப்பட்டது. (அரசாணை நிலை எண்.128, தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை, நாள் 2.6.95)

## 5. பட்டுக்கோட்டை கலியாணசுந்தரம் பாடல்கள்

பகுத்தறிவும், பொதுவுடைமையும் தழைக்கப் பாடுபட்ட கவிஞர் பட்டுக்கோட்டை கலியாணசுந்தரம் அவர்கள். திரைப்படப்பாடல்கள் மூலம் இக்கொள்கைகளை மக்கள் நெஞ்சில் பதியச் செய்தவர். இவருடைய பாடல்கள் அனைத்தும் 1995ஆம் ஆண்டில் நாட்டுடைமை யாக்கப்பட்டு இவருடைய மரபுரிமையர்க்கு ரூ.10,00,000 பரிவுத் தொகையாக வழங்கப்பட்டது.(அரசாணை நிலை எண்.186, தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை, நாள் 14.7.95; அரசாணை நிலை எண்.218 தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை, நாள் :25.8.95)

## 6. மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் நூல்கள்

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் தொண்டுகளால் தமிழினம் தலைநிமிர்ந்தது எனில் அது மிகையன்று. 'தமிழே உலகின் முதன்மொழி; தமிழரே உலகின் மூத்த குடிமக்கள்' எனும் கொள்கையை நிலைநாட்டிய பெருமை பெற்றவர் பாவாணர். வடமொழிக் கலப்பாலும், பிறமொழிக் கலப்பாலும் நாம் இழந்த சொற்செல்வங்களை மீட்டளித்த மொழி ஞாயிறாய், வேர்ச்சொல் வித்தகராய் விளங்கியவர் இவர்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்குநராகப் பணியேற்றுத் திறம்படப் பணியாற்றியுள்ளார். இவருடைய நூல்கள் அனைத்தும் 1996ஆம் ஆண்டில் நாட்டுடைமையாக்கப்பட்டு இவர் தம் மரபுரிமையர்க்கு ரூ.20,00,000 பரிவுத் தொகையாக வழங்கப்பட்டது. (அரசாணை நிலை எண்.167, தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை, நாள் : 23.8.96)

## 7. மறைமலையடிகளாரின் நூல்கள்

மறைமலையடிகளார் தனித்தமிழ் இயக்கத் தந்தையாய் விளங்கியவர்; புதுச்சொல்லாக்க நெறிமுறைக்கு வித்திட்டவர்; 'தனித்தியங்கும் தன்மை தமிழுக்குண்டு' என்பதை மெய்ப்பித்த பைந்தமிழ் வித்தகர். 'தமிழர்கள் தம்மொழியாம் தமிழைக் காத்துப் பேண வேண்டும்' என்ற உணர்வைப் பெறுவதற்காக வாழ்நாளெல்லாம் உழைத்தவர். மறைமலை அடிகளாரின் நூல்கள் அனைத்தையும் அரசு 1997ஆம் ஆண்டில் நாட்டுடைமையாக்கி அவர்தம் மரபுரிமையர்க்குப் பரிவுத் தொகையாக ரூ.30,30,000/ வழங்கியது. (அரசாணை நிலை எண்.180, தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை, நாள் 8.7.97; அரசாணை நிலை எண். 218, தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை, நாள் 26.8.97).

## 8. திரு.வி. கலியாணசுந்தரனாரின் நூல்கள்

தமிழ்த் தென்றல் திரு.வி.க, காங்கிரசுப் பேரியக்கத்தவராய், தொழிற்சங்கத்தலைவராய், மேடைத்தமிழ் வளர்த்த மேன்மையராய்த்

திகழ்ந்தவர். புதுச்சொற்களை உருவாக்கியும், புது நூல்களைப் படைத்தும் தமிழுக்கு வளம் சேர்த்தவர் விடுதலைப் போராட்ட காலத்தில் 'வட்டாரமொழி' எனக் கூறப்பட்ட தமிழ் வளர்ச்சி பெறக் காரணமாய் விளங்கியவர். இவருடைய நூல்கள் அனைத்தையும் அரசு 1998ஆம் ஆண்டில் நாட்டுடைமையாக்கி அவர்தம் மரபுரிமையர்க்குப் பரிவுத் தொகையாக ரூ 18,50,000மும், பதிப்பகத்தினர்க்கு ரூ 1,50,000மும் வழங்கியது. [அரசாணை நிலை எண் 117, தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத் (தவ1.1 ) துறை, நாள் 13.5.98]

## 9. பேராசிரியர் கல்கி நூல்கள்

பேராசிரியர் கல்கி புதின இலக்கிய வரலாற்றில் பொனனெழுத்து களால் பொறிக்கப்பட்டவர். 'பொன்னியின் செல்வன்', 'சிவகாமியின் சபதம்' போன்ற வரலாற்றுப் புதினங்களைத் தந்து வரலாற்றில் வாழ்பவர் 'மகுடபதி', 'அலைஓசை' போன்ற சமுதாயப் புதினங்களாலும் சிந்தனையைத் தூண்டியவர். தம் எழுத்து முறையாலும், கதை மாந்தர்களை உருவாக்கும் கைவண்ணத்தாலும் பாமரர்களையும் படிக்கத் தூண்டியவர். இவருடைய நூல்களை அரசு 1998ஆம் ஆண்டில் நாட்டுடைமையாக்கி இவர்தம் மரபுரிமையரான திரு கி இராஜேநதிரன் அவர்களுக்கு பரிவுத் தொகையாக ரூ.20,00,000/- வழங்கியது. [அரசாணை நிலை எண்.118, தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத் (தவ1.1) துறை, நாள் 13 5.98]

## 10. தேசிய எழுத்தாளர்களின் நூல்கள்

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் 28 5 98இல் சட்டப் பேரவையில் அறிவித்ததனைத் தொடர்ந்து, பினவரும் தேசிய எழுத்தாளர்களின் நூல்கள் நாட்டுடைமையாக்கப்பெற்றுப பின்வருமாறு ஈட்டுத்தொகைகள் வழங்கப் பெறறுள்ளன

| | | | |
|---|---|---|---|
| 1 | கவிமணி தேசிக விநாயகம பிள்ளை | தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத(தவ1 1) துறை, அரசாணை (3டி)எண் 4, நாள் 12.8 98. | உரூ 5,00,000/- |
| 2 | திரு.ப. ஜீவானந்தம் | தமிழ் வளர்ச்சி - பணபாடு மற்றும் அறநிலையத (தவ1.1) துறை, அரசாணை (3டி) எண் 4, நாள 12 8 98) | உரூ 5,00,000/- |

| | | |
|---|---|---|
| 3. நாமக்கல் கவிஞர் திரு. வெ. இராமலிங்கம் பிள்ளை | தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் (தவ1.1) துறை, அரசாணை (3டி) எண்.5, நாள் : 12.8.98 | உரு.5,00,000/- |
| 4. திரு.வ.உ. சிதம்பரனார் | தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் (தவ1.1) துறை, அரசாணை (3டி)எண்.5, நாள் : 12.8.98. | உரு.5,00,000/- |
| 5. திரு. சுத்தானந்த பாரதி | தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்(தவ 1.1) துறை, அரசாணை (3டி) எண். 6 நாள் : 12.8.98 | உரு. 5,00,000/- |
| 6. திரு.ஏ.எஸ்.கே. அய்யங்கார் | தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்(தவ 1.1) துறை, அரசாணை (3டி) எண். 6 நாள் : 12.8.98 | உரு. 5,00,000/- |
| 7. கவிஞர் கா.மு.ஷெரீப் | தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்(தவ 1.1) துறை, அரசாணை (3டி) எண். 6 நாள் : 12.8.98 | உரு. 5,00,000/- |
| 8. திரு.வ.ராமசாமி | தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்(தவ 1.1) துறை, அரசாணை (3டி) எண். 6 நாள் : 12.8.98 | உரு. 5,00,000/- |

9. நாவலர் சோம
சுந்தர பாரதியார் — தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்(தவ 1.1) துறை, அரசாணை (3டி) எண். 6 நாள் : 12.8.98 — உரு. 5,00,000/-

10. பரலி சு.
நெல்லையப்பர் — தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்(தவ 1.1) துறை, அரசாணை (3டி) எண். 6 நாள் : 12.8.98 — உரு. 5,00,000/-

11. திரு.வ.வே.சு.
ஐயர் — தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்(தவ 1.1) துறை, அரசாணை (3டி) எண். 6 நாள் : 12.8.98 — உரு. 5,00,000/-

12. காரைக்குடி திரு. சா.
கணேசன் — தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்(தவ 1.1) துறை, அரசாணை (3டி) எண். 6 நாள் : 12.8.98 — உரு. 5,00,000/-

13. திரு.எஸ்.டி.எஸ்.
யோகி — தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்(தவ 1.1) துறை, அரசாணை (3டி) எண் 6 நாள் : 12.8.98 — உரு. 5,00,000/-

திரு. அகிலன், மூதறிஞர் இராஜாஜி ஆகியோரின் நூல்கள் நாட்டுடைமையாக்கப் பெறுவதற்கு அவர்களுடைய மரபுரிமையினர் இசைவளிக்காததால் அரசாணைகள் ஏதும் வெளியிடப் பெறவில்லை.

மேற்குறிப்பிடப் பெற்ற திட்டங்களும் - பணிகளும் மட்டுமன்றி, தமிழ் மேம்பாட்டிற்காக அரசு நிலையில் ஆற்றப்பட்டுள்ள வேறுசில இன்றியமையாப் பணிகளையும் இங்குக் கருதுவது பொருத்தமாகும்.

## 36. மக்கள் செய்தி வாயில்களில் தமிழ்

26.7.96ஆம் நாளன்று வானொலி, தொலைக்காட்சி, நாளிதழ்கள், வார இதழ்கள் போன்ற - மக்களுடன் நெருங்கிய தொடர்புடைய நிறுவனங்களின் தலைவர்களுடன் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு, இந்துசமய அறநிலையத் துறை அமைச்சர் அவர்கள் கலந்துரையாடிப் பொதுமக்கள் கேட்கும், காணும் நிகழ்ச்சிகள் நல்ல தமிழில் அமைய வேண்டுமெனவும், செய்தித்தாள் களிலும் திங்கள் இதழ்களிலும் அத்தகைய முயற்சிகள் மேற்கொள்ளப் பெற வேண்டும் எனவும் வலியுறுத்தினார்கள். புதிய தமிழ்ச் சொற்களை அறிமுகப்படுத்து மாறும், கையாளுமாறும் கேட்டுக் கொண்டார்கள். அதன்படி அனைத் திந்திய வானொலியில் 1.11.97 முதல் 'நாளொன்று பிறக்கச் சொல் லொன்று அறிவோம்' என்ற நிகழ்ச்சி மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்துசமய அறநிலையத் துறை அமைச்சர் அவர்களால் தொடங்கி வைக்கப் பெற்றது. பின்னர் இந்நிகழ்ச்சி 'தமிழறிவோம்' எனும் தலைப்பில் தொடர்ந்து ஒலிபரப்பாகி வருகிறது.

## 37. அயல்நாடுகளில் அஞ்சல்வழித் தமிழ்க் கல்வி

சென்னைப் பல்கலைக்கழக அஞ்சல் வழிக் கல்வி வாயிலாக மொரீசியசு, ரீயூனியன், டர்பன், மடகாசுகர் ஆகிய பகுதி மக்களுக்குத் தமிழ்க் கல்வியைப் பயிற்றுவிப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. மொரீசியசில் உள்ள மகாத்மா காந்தி நிலையம் இதன் தொடர்பகமாக விளங்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

## 38. இணையம் (Internet)

'இணையம்' என்பது இப்போது உலகமெங்கும் மேலோங்கியுள்ள தகவல் தொடர்புக் கருவியாகிவிட்டது. '1997-98ஆம் ஆண்டு வரவு-செலவுத் திட்டம்' தமிழகச் சட்டமன்றத்தில் படைக்கப்பட்ட சிறிது நேரத்தில் இணையத்தின் மூலம் உலகெங்கும் உள்ளவர்கள் தெரிந்து கொள்ளும்படி ஏற்பாடு செய்யப்பட்டது.

மாண்புமிகு தமிழக முதல்வர், மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு, இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் அறைகளில் இத்தொடர்புக் கருவி அமைக்க ஏற்பாடாகி ரூ.7.50 இலட்சம் நிதி அனுமதிக்கப்பட்டது. 25.3.1998 முதல் மாண்புமிகு முதலமைச்சர் மற்றும் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு, இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் அலுவலகங்களில் இயங்கிடத் தொடங்கியுள்ளது. இவ்விணையத்தில் தமிழக வரலாறு, தமிழ் இலக்கிய வரலாறு, தமிழ்க் கலைகளின் சிறப்பு, சுற்றுலா வருபவர்கட்கான

வழிகாட்டுதல் ஆகியவை 'செய்திப்பக்கம்' (Home page) எனும் முறையில் தமிழிலும் ஆங்கிலத்திலும் தரப்படும்.

இதுபற்றிய முழுமையான இணைப்புக்காகச் சிங்கப்பூரில் நடைபெற்ற மாநாட்டுக்குத் தமிழக அரசு தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமய அறநிலையத்துறை அமைச்சரை அனுப்பி வைத்தது

தமிழக அரசின் சாதனைகள் அனைத்தையும் அறிந்து கொள்ள இவ்விணையம் வகை செய்கிறது உலகத் தமிழர்களும், தமிழ் பற்றி அறிய விரும்பும் பிற மொழியாளரும் இதனால் பயன் பெறுவர்

முதன் முதலில் இணையத்தில் வாழ்த்துச் செய்தி வழங்கிய பெருமை இந்தியாவிலேயே மாண்புமிகு தமிழக முதலமைச்சர் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்களுக்குத்தான் உண்டு இந்தியாவிலேயே இணையத்தில் அதிகப் பக்கங்களைக் (Home pages) கொண்ட மொழி தமிழ்தான் என்று புள்ளி விவரங்கள் தெரிவிக்கின்றன உலகில் உள்ள தமிழர்கள் அனைவரையும் இணையம் இணைக்கிறது.

## 39. செம்மொழி முயற்சி

'இந்தியாவின் செம்மொழிகளில் தமிழும் ஒன்று', என அறிவிக்க வேண்டித் தமிழக அரசு, நடுவண் அரசுக்கு மடல்கள் எழுதியுள்ளது. எனினும் அதற்கான விடைகள் ஏதும் வரப் பெறவில்லை தொடர்ந்து தமிழக அரசு இது தொடர்பாக முயற்சி செய்து நடவடிக்கை எடுத்து வருகிறது.

## 40. எல்லா மொழிகளிலும் 'சென்னை' எனும் பெயர்

'மெட்ராஸ்' என்பதற்குப் பதிலாகச் 'சென்னை' என்ற பெயர் எல்லா மொழிகளிலும் வழங்கப்பட வேண்டும் என்று மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் செய்த அறிவிப்பிற்கிணங்கப் பெங்களூரில் உள்ள மைய அரசு நில அளவைத்துறை (தெற்குமண்டலம்)யின் குறிப்புரை 12 8.96இல் கோரப்பட்டது. இது தொடர்பாக மாண்புமிகு முதலமைச்சர் அவர்களாலேயே சட்ட முன் வடிவு அறிமுகப் படுத்தப்பட்டு ஒரு மனதாகவும் நிறைவேற்றப்பட்டது. நடுவண் அரசின் ஒப்புதலுடன் எல்லா இடங்களிலும் 'சென்னை' எனும் பெயர் ஆங்கிலத்திலும் பிறமொழிகளிலும் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

## 41. தமிழ் வளர்ச்சி வளாகம்

இரண்டு கோடி ரூபாய் செலவில் சென்னை, அருங்காட்சியகப் பகுதியில் 'தமிழ் வளர்ச்சி வளாகம்' ஒன்று உருவாகின்றது தமிழ் வளர்ச்சி இயக்ககம், தொல்பொருள் ஆய்வுத்துறை, ஓலைச் சுவடி நூலகம், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலி இயக்ககம் ஆகிய அனைத்தும் இவ்வளாகத்திலேயே செயற்படுமாறும் உள்நாட்டினரும், வெளி

நாட்டினரும் இவ்வளாகத்தில் தமிழ்ப் பணிகள் பற்றிய விளக்கங்களைப் பெறும் வகையிலும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

## 42. தொடர் வண்டிகளில் தமிழ்

தமிழகஅரசு எடுத்த முயற்சியின் விளைவாக நடுவணரசுக்கு உட்பட்ட தொடர் வண்டித்துறையில் திரு. அக்னி கோத்ரி என்பவர் உடனடியாகச் செயற்பட்டு, அனைத்துத் தொடர்வண்டிகளிலும் தமிழில் பெயர்ப் பலகைகளை வைத்துள்ளார். அதன்படிக் 'கம்பன் விரைவு வண்டி', 'மலைக்கோட்டை விரைவு வண்டி' என்பன போன்ற பெயர்ப் பலகைகளையும், 'விரைவுத் தொடர் வண்டி' என்ற சொற்றொடர்களையும் இப்போது காணலாம்.

## 43. நீதிமன்றங்களுக்குத் தட்டச்சுகள் வழங்கல்

உயர்நீதிமன்றம் சார்பு நீதிமன்றங்கள் ஆகியவற்றில் நகல் எடுப்பவர்கள் 862 பேர் உள்ளனர். இவர்கள் அனைவரும் பயன்படுத்தும் வகையில் 862 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வாங்கிடத் தமிழக அரசு ரூ.65 இலட்சம் ஒதுக்கி ஆணை பிறப்பித்துள்ளது.

## 44. கருநாடகத்தில் தமிழ்

கருநாடக மாநிலத்தில் ஆசிரியர் பயிற்சிப் பள்ளித் தேர்வு எழுதுபவர்களுக்குக் கன்னடம், தெலுங்கு, மலையாளம், மராத்தி, உருது, இந்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் எழுத வாய்ப்பு அளிக்கப்பட்டது. ஆனால், தமிழில் மட்டும் எழுத அனுமதி யில்லை.

காவிரிப் பேச்சு முடிந்த பின்னர் மாண்புமிகு தமிழக முதல்வர் உருது, மராத்தி, மலையாளம் போன்ற பிற மொழிகளில் நுழைவுத் தேர்வு எழுத மாணவர்களை அனுமதிக்கும் கருநாடக அரசு, தமிழ் மொழியிலும் தேர்வு எழுத அனுமதியளிக்க வேண்டும் எனக் கோரினார்.

அவரது கோரிக்கையை ஏற்றுக் கொண்ட கருநாடக முதல்வர் மாண்புமிகு திரு. ஜே.எச். படேல் இனித் தமிழிலும் நுழைவுத் தேர்வு எழுத அனுமதிக்கப்படும் என்று தெரிவித்தார்.

## 45. தமிழில் அறிவியல் நூல்கள்

வருங்காலத்தில் பொறியியல் கல்வியைத் தமிழில் பயிலவும், வேறு வகையான பயன்பாட்டிற்கும் அறிவியல் நூல்களைத் தமிழில் கொண்டுவரும் முயற்சியை அரசு மேற்கொண்டது. 15 பல்கலைக் கழகங்களுக்கு உரூ.64 இலட்சம் பிரித்து வழங்கப்பட்டு, அதனடிப்படையில் அனைத்து நூல்களும் வெளியிடப்பட்டுள்ளன.

## 46. தமிழில் மருத்துவம்

அரசு வெளியிடும் மாத்திரைகளுக்கான உறைகளில் தமிழ் இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது. மருந்துச் சீட்டுகள் அனைத்தும் தமிழில் எழுதப்படவேண்டும் என்று அரசு ஆணை பிறப்பித்துள்ளது

## 47. தமிழில் வழிபாடு

தமிழில் வழிபாடு என்பதை நாடெங்கிலும் தெளிவுபடுத்தி முறையான அறிஞர் குழு - உயர்மட்டக் குழுவின் இசைவு - சிவாச்சாரியார், பட்டாச்சாரியார், ஓதுவார்கள் முன்னிலையில் அரங்கேற்றம் - ஆதீனகர்த்தர்கள வழங்கிய திருத்தங்கள் ஏற்பு எனும் நிலையில் விநாயகர், முருகவேள் போற்றிப் பாடல் நூல்கள் அச்சிடப்பட்டு வழங்கப்பட்டுள்ளன திருமால், சிவன் உமையம்மை, நாச்சியார், மாரியம்மன், தென்முகக் கடவுள், அனுமன், கோதண்டராமர், நடராசர் ஆகிய கடவுளரின் மீதான போற்றிகளும் அச்சிட்டு வழங்கப்பட்டுள்ளன

## 48. தமிழில் வேள்வி

வேள்வி என்பது ஆகம விதிகளுக்கு உட்பட்டது என்றும் அதனை யாகம எனும் பெயரால் வடமொழியில் நடத்துவதே முறை என்றும் சிலர் விடாப்பிடியாக வலியுறுத்தி வந்தனர் எனினும் ஆகம விதிகளுக்கு மாறுபடாமல் தமிழில சிவ வேள்வியை நடத்திட முடியும் எனும் அடிப்படையில் அதனைக் கோவை மாவட்டத்தில் சாந்தலிங்க அடிகளார் போன்றவர்கள் நடத்திக் காட்டியுள்ளனர்

## 49. தருமபுரிப் பகுதிகளில் தமிழ்

தருமபுரி மாவட்டத்தில் ஓசூர், தளி, கெலமங்களம், தேன்கனிக் கோட்டை ஆகிய பகுதிகளில் தெலுங்கும், ஆங்கிலமும மட்டுமே பயிற்றுவிக்கப்படும் பள்ளிகளில் மாணவர்களின் விருப்பத்தை நேரிடையாகக் கேட்டறிந்து அவர்களுக்குத தமிழ சொல்லிக கொடுக்க ஏற்பாடுகள் நடந்து வருகின்றன அன்றியும தமிழகத்திலுள்ள சிறுபான்மையர் மொழிகளைக் கொண்ட 1008 பள்ளிகளிலும் தமிழாசிரியர்கள் அமர்த்தப்பட்டால் தமிழ் படிககாமலேயே தமிழ்நாட்டில் பட்டம் பெறக்கூடிய நிலை இராது எனும் அடிப்படையில் முயற்சிகள் எடுக்கப்பட்டு வருகின்றன

## 50. மேற்படிப்பு உதவி

பதினொன்று, பன்னிரெண்டாம் வகுப்புகளில் பலர் பகுதி 1இல் தமிழைப் பாடமாக எடுத்துப் படிக்காமல பிரெஞ்சு அல்லது சமற்கிருத மொழியைப பாடமாக எடுத்துப் படித்தனர். பிரெஞ்சு மொழிப்பாடம

முதல் வகுப்புக்கான (Preliminary French) தகுதி நிலையில் அமைந்தது. எனவே இப்பாடங்களில் 200க்கு 200 அல்லது 195 என்று மதிப்பெண்கள் வாங்கும் நிலை இருந்தது. மொத்த மதிப்பெண்களைக் கூட்டும்போது தமிழை முதல் மொழியாக எடுத்தவர்கள் பின்னுக்குத் தள்ளப்பட்டுப் பிரெஞ்சு அல்லது சமற்கிருதம் படித்தவர்கள் விருதும், பரிசுகளும், படிப்பு உதவிகளும் பெறும் நிலை இருந்தது.

மேற்காணும் நிலையை மாற்றித் தமிழக அரசு எடுத்த முயற்சியின் காரணமாக, 10 மற்றும் 12ஆம் வகுப்பில் தமிழை முதன்மொழியாக எடுத்துத் தேறி உயர் மதிப்பெண் பெறுபவர்களுக்கு மட்டும் தமிழக அரசின் முதற்பரிசும், மேல்படிப்புக்கான உதவியும் கிடைக்கும் என அறிவிக்கப்பட்டது. இதன்படி, 10ஆம் வகுப்பில் தமிழை முதன்மொழியாக எடுத்து உயர் மதிப்பெண் பெற்றோர் 11, 12ஆம் வகுப்புப் படிக்க அரசின் படிப்பு உதவித் தொகையைப் பெற்று வருகின்றனர். 12ஆம் வகுப்பில் தமிழை முதன் மொழியாக எடுத்து உயர்மதிப்பெண்கள் பெற்றுக் கல்லூரிக்கோ, தொழில்நுட்ப, மருத்துவப் படிப்புக்கோ செல்பவர்கள் அரசின் படிப்புதவி பெறுகின்றனர்.

## தொகுப்புரை

'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' எனும் கொள்கைக்கேற்ப மேற்காணும் வகையிலெல்லாம், தமிழின் பன்முக வளர்ச்சி கருதி, அரசு பல்வேறு வகையில் சிறப்புறச் செயலாற்றி வருகிறது. இன்னும் பல்வகைகளிலும் செயற்பட உள்ளது. அரசோடிணைந்து அரசு அலுவலர்களும், பணியாளர்களும், அறிஞர்களும், தமிழ் அமைப்புகளும், பொதுமக்களும் ஒத்துழைப்பு நல்கி நம் அன்னைத் தமிழை மேன்மேலும் வளம் பெறச் செய்ய வேண்டுமென்பதே அரசின் விழைவாகும்.



இணைப்பு : 1

# 1956 ஆம் ஆண்டு தமிழ்நாடு ஆட்சிமொழிச் சட்டம்

## (தமிழ்நாடு சட்ட எண். XXXIX/1956)

(1957 ஆம் ஆண்டு சனவரி 19 அன்று ஆளுநரின் இணக்கமளிப்பைப் பெற்று, முதலாவதாக 1957ஆம் ஆண்டு சனவரி 23 அன்று புனித ஜார்ஜ் கோட்டை அரசிதழில் வெளியிடப்பட்டது)

தமிழ்நாடு மாநிலத்தின் அலுவல்முறை நோக்கங்களில் பயன்படுத்தப்பட வேண்டிய மொழியாகத் தமிழை ஏற்றுக் கொள்வதற்கு வகை செய்வதற்கான ஒரு சட்டம்.

ஒரு மாநிலத்தின் சட்டமன்றம் சட்டத்தின் வாயிலாக அந்த மாநிலத்தில் வழங்கிவருகிற மொழிகளில் ஏதேனும் ஒன்றை அல்லது ஒன்றுக்கு மேற்பட்டவற்றை அந்த மாநிலத்தின் அலுவல்முறை நோக்கங்கள் எல்லாவற்றுக்கும் அல்லது அவற்றில் எதற்கும் பயன்படுத்தப்பட வேண்டிய மொழியாக அல்லது மொழிகளாக ஏற்றுக்கொள்வதையும், சட்டமுன் வடிவுகள், சட்டங்கள், அவசரச் சட்டங்கள், ஆணைகள், விதிகள், ஒழுங்குமுறை விதிகள், துணைவிதிகள் ஆகியவற்றில் பயன்படுத்துவதற்காக ஆங்கில மொழி அல்லாத பிறமொழி எதையும் வகுத்துரைப்பதையும் அரசமைப்பு இயல்விப்பதால்:

இந்தியக் குடியரசின் ஏழாம் ஆண்டில் பின்வருமாறு சட்டம் இயற்றப்படுவதாகுக:-

1. (1) இந்தச் சட்டம், 1956ஆம் ஆண்டு தமிழ்நாடு ஆட்சிமொழிச் சட்டம் என்று வழங்கப்பெறும். **குறுந்தலைப்பும் அளாவுகையும்.**

(2) இது தமிழ்நாடு மாநிலம் முழுவதையும் அளாவி நிற்கும்.

2. தமிழ்நாடு மாநிலத்தின் ஆட்சிமொழியாகத் தமிழ் இருத்தல் வேண்டும். **மாநிலத்தின் ஆட்சிமொழியாகத் தமிழ் இருத்தல் வேண்டும்.**

3. 2 ஆம் பிரிவில் என்ன இருந்தபோதிலும், மற்றும் அரசமைப்பின் 346, 347 ஆகிய உறுப்புகளின் வகைமுறைகளுக்கு ஊறின்றியும், ஆங்கில மொழியானது, அது இந்தச் சட்டத்தின் தொடக்க **அரசு வேறு வகையில் பணிக்கும் வரை அலுவல் முறை**

நிலைக்கு முன்பு மாநிலத்தின் எந்த அலுவல்முறை நோக்கங்களுக்குப் பயன்படுத்தப்பட்டு வந்ததோ அந்த நோக்கங்கள் எல்லாவற்றிலும், மாநில அரசு 4ஆம் பிரிவின் படி அறிவிக்கை வாயிலாக, அந்த அறிவிக்கையில் குறித்துரைக்கப்படும் அலுவல் முறை நோக்கம் எதைப் பொறுத்தும், வேறு வகையில் பணிக்கும் வரை, தொடர்ந்து பயன்படுத்தப்படுதல் வேண்டும்.

**நோக்கங்களுக்கு ஆங்கிலம் தொடர்ந்து பயன்படுத்தப்படுதல் வேண்டும்.**

4. மாநில அரசு, அவ்வப்போது பிறப்பிக்கும் அறிவிக்கை வாயிலாக அந்த அறிவிக்கையில் குறித்துரைக்கப்படலாகும் அலுவல் முறை நோக்கங்களைப் பொறுத்துத் தமிழ் பயன்படுத்தப்படுதல் வேண்டும் என்று பணிக்கலாம்.

**எந்த அலுவல்முறை நோக்கங்களுக்குத் தமிழ் பயன்படுத்தப் பட வேண்டுமோ அந்த அலுவல்முறை நோக்கங்களை அறிவிக்கை செய்ய அரசுக்குள்ள அதிகாரம்.**

1/4அ இந்தச் சட்டத்தின் 2,3,4 ஆகிய பிரிவுகளில் அல்லது 1908 ஆம் ஆண்டு உரிமை வழக்கு விசாரணைமுறைத் தொகுப்புச் சட்டத்தில் (மையச் சட்டம் V/1908) அல்லது 1973 ஆம் ஆண்டு குற்ற விசாரணைமுறைத் தொகுப்புச் சட்டத்தில் (மையச் சட்டம் 2/1974) என்ன அடங்கியிருந்தபோதிலும், எல்லா நடவடிக்கைகளிலும் சான்றைப் பதிவு செய்யும் நோக்கத்திற்காக,-

**எல்லா நடவடிக்கைகளிலும் சான்றைப் பதிவு செய்வதற்காகத் தமிழை நீதி மன்ற மொழியென விளம்புதல்.**

(i) உயர் நீதிமன்றத்துக்குக் கீழமைந்த உரிமை வழக்கு நீதி மன்றங்கள் மற்றும் குற்றவழக்கு நீதிமன்றங்கள்.

(ii) தீர்ப்பாயங்கள், மற்றும்

(iii) குத்தகை நீதிமன்றங்கள் மற்றும் வருவாய்த்துறை நீதிமன்றங்கள்.

எல்லாவற்றின் மொழியாகத் தமிழ் இருத்தல் வேண்டும்.

ஆனால் அத்தகைய நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் எதிலும் தலைமை வகிக்கும் அலுவலர், தமிழில் சான்றைப் பதிவுசெய்கையில் சரியான கருத்தையும் பொருளையும் வெளிக்கொணர்வதற்குத்

---

1. 1976ஆம் ஆண்டு தமிழ்நாடு ஆட்சிமொழி (திருத்தம்) சட்டத்தின் (சட்ட எண். 41/1976) 3ஆம் பிரிவினால் புகுத்தப்பட்டது.

தேவையென அவர் கருதுகின்ற இடத்திலெல்லாம், ஆங்கிலச் சொற்களையும் சொற்றொடர்களையும பயன்படுத்தலாம்.

மேலும உயர்நீதிமன்றம், பொது அல்லது சிறப்பு ஆணை வாயிலாக,-

(i) உரிமை வழக்கு அல்லது குற்றவழக்கு நீதிமன்றங்களில் அல்லது தீர்ப்பாயங்களில் தலைமை வகிக்கும அலுவலர்களில் எந்த வகையினருக்கும், அல்லது

(ii) அத்தகைய நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் எதிலும் தலைமை வகிக்கும் அலுவலா எவருக்கும்

அத்தகைய ஆணையில் குறித்துரைக்கப்படலாகும் சூழ்நிலைகளிலும் அதில் குறித்துரைக்கப்படலாகும் காலஅளவுக்கும் சான்றை ஆங்கிலத்தில் பதிவு செய்வதற்கு இசைவளிக்கலாம்

அத்துடன், வருவாய்த்துறை வாரியம், பொது அல்லது சிறப்பு ஆணை வாயிலாக-

(i) குத்தகை நீதிமன்றங்களில் அல்லது வருவாய்த்துறை நீதிமன்றங்களில் தலைமைவகிக்கும் அலுவலர்களில் எந்த வகையினருக்கும், அல்லது

(ii) அத்தகைய நீதிமன்றம் எதிலும் தலைமை வகிக்கும் அலுவலர் எவருக்கும்

அத்தகைய ஆணையில் குறித்துரைக்கப்படலாகும் சூழ்நிலைகளிலும் அதில் குறித்துரைக்கப்படலாகும் காலஅளவுககும் சான்றை ஆங்கிலத்தில் பதிவு செய்வதற்கு இசைவளிக்கலாம்

**விளக்கம்**-இந்தப் பிரிவிலும் 4 அ பிரிவிலும் ''குத்தகை நீதிமன்றம்'' அல்லது ''வருவாய்த்துறை நீதிமன்றம்'' என்பது, வருவாய்த்துறை அலுவலர் ஒருவரால் தலைமை வகிக்கப்படும் நீதிமன்றம் எதுவும் என்று பொருள்படுதல் வேணடும

**தீர்ப்புகள், தீர்ப்பாணைகள், ஆணைகள் ஆகிய வற்றை எழுது வதற்காகத் தமிழை நீதிமன்ற மொழி என விளம்புதல்**

1/4 அ (1) இந்தச் சட்டத்தின் 2,3,4 ஆகிய பிரிவுகளில் அல்லது 1908 ஆம் ஆண்டு உரிமை வழக்கு விசாரணைமுறைத் தொகுப்புச் சட்டத்தில் (மையச் சட்டம் V/1908) அல்லது 1973 ஆம் ஆண்டு குற்ற விசாரணைமுறைத் தொகுப்புச் சட்டத்தில் (மையச் சட்டம் 2/1974) என்ன அடங்கியிருந்தபோதிலும், மற்றும் (2) ஆம் உட்பிரிவின் வகை முறைகளுக்கு உட்பட்டுத் தீர்ப்புகள், தீர்ப்பாணைகள், ஆணைகள் ஆகிய வற்றை எழுதும் நோக்கத்திற்காக,-

1 1976ஆம் ஆண்டு தமிழ்நாடு ஆட்சிமொழி (திருத்தம்) சட்டத்தின் (சட்ட எண் 41/1976) 3ஆம பிரிவினால் புகுத்தப்பட்டது

(i) உயர் நீதிமன்றத்துக்குக் கீழமைந்த உரிமை வழக்கு நீதி மன்றங்கள்,

(ii) உயர் நீதிமன்றத்துக்குக் கீழமைந்த குற்றவழக்கு நீதிமன்றங்கள்.

(iii) தீர்ப்பாயங்கள், மற்றும்

(iv) குத்தகை நீதிமன்றங்கள் மற்றும் வருவாய்த்துறை நீதிமன்றங்கள்.

எல்லாவற்றின் மொழியாகத் தமிழ் இருத்தல் வேண்டும்:

ஆனால் அத்தகைய நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் எதிலும் தலைமை வகிக்கும் அலுவலர்,தீர்ப்புகளை, தீர்ப்பாணைகளை மற்றும் ஆணைகளைத் தமிழில் எழுதுகையில், சரியான கருத்தையும் பொருளையும் வெளிக்கொணர்வதற்குத் தேவையென அவர் கருதுகின்ற இடத்திலெல்லாம், ஆங்கிலச் சொற்களையும் சொற்றொடர்களையும் பயன்படுத்தலாம்:

மேலும் உயர்நீதிமன்றம், பொது அல்லது சிறப்பு ஆணை வாயிலாக,-

(i) உரிமை வழக்கு அல்லது குற்றவழக்கு நீதிமன்றங்களில் அல்லது தீர்ப்பாயங்களில் தலைமை வகிக்கும் அலுவலர்களில் எந்த வகையினருக்கும், அல்லது

(ii) அத்தகைய நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் எதிலும் தலைமை வகிக்கும் அலுவலர் எவருக்கும்

அத்தகைய ஆணையில் குறித்துரைக்கப்படலாகும் சூழ்நிலைகளிலும் அதில் குறித்துரைக்கப்படலாகும் காலஅளவுக்கும் தீர்ப்புகள், தீர்ப்பாணைகள், ஆணைகள் ஆகியவற்றை ஆங்கிலத்தில் எழுதுவதற்கு இசைவளிக்கலாம்.

மேலும், வருவாய்த்துறை வாரியம், பொது அல்லது சிறப்பு ஆணை வாயிலாக,-

(i) குத்தகை நீதிமன்றங்களில் அல்லது வருவாய்த்துறை நீதிமன்றங்களில் தலைமைவகிக்கும் அலுவலர்களில் எந்த வகையினருக்கும், அல்லது

(ii) அத்தகைய நீதிமன்றம் எதிலும் தலைமை வகிக்கும் அலுவலர் எவருக்கும்

அத்தகைய ஆணையில் குறித்துரைக்கப்படலாகும் சூழ்நிலைகளிலும் அதில் குறித்துரைக்கப்படலாகும் காலஅளவுக்கும் தீர்ப்புகளையும், ஆணைகளையும் ஆங்கிலத்தில் எழுதுவதற்கு இசைவளிக்கலாம்.

(2). (1).ஆம் உட்பிரிவின் வகைமுறைகள், மாநில அரசு அறிவிக்கை வாயிலாகக் குறிக்கலாகும் தேதியில் நடைமுறைக்கு வருதல் வேண்டும்; மற்றும்-

(i) உயர் நீதிமன்றத்துக்குக் கீழமைந்த உரிமை வழக்கு நீதி மன்றங்கள்,

(ii) உயர் நீதிமன்றத்துக்குக் கீழமைந்த குற்றவழக்கு நீதிமன்றங்கள்.

(iii) தீர்ப்பாயங்கள், மற்றும்

(iv) குத்தகை நீதிமன்றங்கள் மற்றும் வருவாய்த்துறை நீதிமன்றங்கள்.

பொறுத்து வெவ்வேறு தேதிகள் குறிக்கப்படலாம்.

**சட்ட முன் வடிவுகள் முதலியவற்றில் பயன் படுத்தப்பட வேண்டிய மொழி.**

5. மாநில அரசு அறிவிக்கை வாயிலாகக் குறித்துரைக் கலாகும் தேதியன்றும் அது முதற் கொண்டும்,-

(i) தமிழ்நாடு மாநிலச் சட்டமன்றத்தில் அறிமுகப்படுத்தப்படும் சட்டமுன் வடிவுகளில் அல்லது அவை பொறுத்து முன் மொழியப்படும் திருத்தங்களில் அலலது அந்தச் சட்ட மன்றத்தால் நிறைவேற்றப் படும் சட்டங்களில்.

(ii) அரசமைப்பின் 213 ஆம் உறுப்பின்படி சாற்றாணை செய்யப்படும் அவசரச் சட்டங்களில்,

(iii) அரசமைப்பின்படி அல்லது நாடாளு மன்றத்தால் அல்லது மாநிலச் சட்டமன்றத் தால் இயற்றப்பட்ட ஏதேனும் சட்டத்தின் படி மாநில அரசால் பிறப்பிக்கப்படும் ஆணைகளில், விதிகளில் ஒழுங்குமுறை விதிகளில் மற்றும் துணை விதிகளில்

பயன்படுத்தப்பட வேண்டிய மொழி தமிழாக இருத்தல் வேண்டும்.

ஆனால், (i) முதல் (iii) வரையில் உள்ள கூறுகளில் குறிப்பிடப்பட்டுள்ள வெவ்வேறு இனங்களைப் பொறுத்து வெவ்வேறு தேதிகளை மாநில அரசு குறிக்கலாம்.

6. 4, 5 ஆகிய பிரிவுகளின்படி பிறப்பிக்கப்படும் அறிவிக்கைகள் அனைத்தும் அவை பிறப்பிக்கப்பட்ட பின்பு கூடிய விரைவில் மாநிலச் சட்டமன்றத்தின் ஈரவைகளின் முன்பும் வைக்கப்படுதல் வேண்டும்; மற்றும் அந்த அறிவிக்கைகள், சட்டமன்றப் பேரவை, அது ஒரே கூட்டத் தொடரிலோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கூட்டத் தொடர்களிலோ, உள்ளபடியே அமர்கிற நாளிலிருந்து பதினான்கு நாட்களுக்குள் செய்யலாகும் திருத்தங்கள் என்னும் முறையிலான மாறுதல்களுக்கு அல்லது நீத்தறவுக்கு உட்படுபவையாயிருத்தல் வேண்டும்.

**4,5 ஆகிய பிரிவுகளின்படி பிறப்பிக்கப்படும் அறிவிக்கைகள் சட்ட மன்றத்தின் முன்பு வைக்கப் படுதல் வேண்டும்.**

இணைப்பு - 2

## GOVERNMENT OF MADRAS

## ABSTRACT

Correspondence - Tamil as Official Language - Implementation Committee - Constituted.

---

## PUBLIC (GENERAL - M) DEPARTMENT

G.O. Ms. No. 192 Dated 21st January 1957.

**ORDER**

The Government have undertaken legislation to provide for the adoption of Tamil as the language to be used for official purposes in the State of Madras. The Bill has received the approval of the Legislatures and is awaiting assent. The Government have decided to constitute a Committee to advise the Government as to the steps that should be taken to implement the provisions of the enactment referred to above. They accordingly constitute a Committee consisting of the following Memebrs :

1. Sri S. Venkateswaran, I.C.S.,
   Member, Board of Revenue,
   Madras : Chairman

2. Sri R.A. Gopalaswamy, I.C.S.,
Secretary, Health,
Education and Local Administration
Department, Madras : Member

3. Sri M. Anantanarayanan, I.C.S.,
Director of Legal Studies,
Madras :

4. Sri T.K. Sankaravadivelu, I.A.S.,
Secretary, Revenue Department,
Madras. :

2. The Committee is requested to set about its work immediately and submit its report to Government within a period of two months.

(By order of the Governor)

**W.R.S. SATTHIANADHAN**
Chief Secretary to Government.

---

இணைப்பு - 3

Copy of G.O.Ms.No.225, Public (General - M), dated the 13th February 1964.

---

ABSTRACT

Official Language - Tamil - Introduction in the offices of Heads of Departments and some regional offices partial scheme of Tamil correspondence - Proposals of the Official Language Committee - Orders issued.

Read the following :

From the Secretary, O.L.C. Ref. No. 1284/62, dated 30th August 1962.

**ORDER**

At its meeting held on 2nd March 1962 the Tamil Development and Research Council urged that the scheme

of Tamil Correspondence should be introduced quickly in the offices of the Heads of Departments while the Council was willing to wait for three years for the submission of letters in Tamil from the Heads of Departments to the Departments of the Secretariat it wanted the scheme to be introduced without any avoidable delay in respect of correspondence between the Heads of Departments and their subordinate offices and the public. The Official Language Committee consulted the Heads of departments regarding difficulties if any anticipated their offices, and considered their views in detail at the special meeting held on 12th July 1962. The Committee came to the conclusion that in as much as the "Tamil Scheme' is working satisfactorily in Government offices upto the end inclusive of the district level steps can be taken confidently to introduce by easy stages the scheme in the offices of the Heads of Departments. The Official Language Committee has accordingly proposed that the scheme of Tamil correspondence may be introduced in the offices of the Heads of Departments in four stages as mentioned below :

**First Stage :**

As a first compulsory step Tamil should be introduced in the offices of the Heads of Departments in respect of communications sent from the Departments to the general public. For this purpose a notification has to be issued by Government under the Madras Official Language Act directing that Tamil shall be used in respect of all official communications issued from the offices of Heads of Departments under the Government of Madras to any person other than :

i) an officer of a State or Central Government

and

ii) a local authority;

Provide that English may be used :

a. in communications --

i) firms and institutions which generally correspond in English

ii) Foreign Embassies, consulates and persons belonging to foreign diplomatic services;

and

iii) other foreigners;

b. in communications which are replies to letters received in English from other individuals;

and

c. in communications relating to cases involving the exercise of statutory powers.

To implement this notifications, the Heads of Departments may require only one or two Tamil typists as the communications going to public will not be many. One or two Standard Tamil typewriters will have to be supplied in accordance with the need of the departments in addition to the existing number of English typewriters. But additional posts of typists are not necessary as the existing English typists who have had training in Tamil typewriting can handle the Tamil machines also.

**Second Stage :**

The Second stage will be correspondence in Tamil from the Heads of Departments with subordinate and district offices (in which the Tamil scheme has already been introduced) as and when Tamil typists become available. This can be secured by Executive instructions to be issued by the Government to Tamil may be smooth and elastic.

**The Heads of Departments may use English :**

i) In the preparation of pay bills, travelling allowance bills, contingent bills, stipend bills and other communications addressed to the treasuries and the Accountant General,

Madras the Pay and Accounts Officer and other Audit Officers.

ii) In all correspondence addressed to other Heads of Departments the State Government Courts other than Village Courts, Central Government offices and offices in other States.

iii) in correspondence relating to any matter in respect of which the head of the department concern has to exercise statutory powers

and

iv) In communications dealing with technical matters subordinate and District Offices in which the Tamil scheme has been introduced should reply in Tamil to all communications received in Tamil from the Heads of Departments.

**Third Stage :**

The third stage will be correspondence with the other Heads of Departments in Tamil. This will be taken up after the correspondence with subordinate and district offices has been switched over to Tamil to the fullest extent possible.

**Fourth Stage :**

The Fourth Stage will be reached when the Tamil scheme is introduced in the Secretariat Departments when letters from the Heads of Departments may be switched over to Tamil except in communications dealing with highly technical matters and any other matters which may be specified in this behalf by the Government.

2. The Official Language Committee has suggested that the progress made under the various stages of the scheme may be watched through half yearly reports to be submitted to the Government and that if progress is made on the lines suggested the partial scheme can be achieved fully within three years. Then the posting will be that English can be used only.

(i) In the preparation of pay bills, travelling allowance bills, contingent bills and other communications addressed to the Treasuries, the Accountant General, Madras, the Pay and Accounts Officer and other officers;

(ii) In all correspondence addressed to the State Government Courts other than Village Courts, Central Government Offices and in other States;

(iii) In all statutory orders which are subject to appeal to or revision by the Government or any courts; and

(iv) In communications in which highly technical matters have to be dealt with, letters from the Heads of Departments, to the State Government may be switched over to Tamil except in regard to item (iv) above and any other matters which may be specified in this behalf by the Government when the Tamil scheme is introduced in the Secretariat Department.

3. The objections raised by some of the Heads of departments to the introduction of the scheme in their offices nor are based on one or more of the following grounds;

1. Correspondence with many firms and Institutions has to be carried on in English;
2. In many cases, statutory powers have to be exercised and statutory orders have to be issued.
3. Much of the work in the offices is technical in nature.

**Ground 1:**

There is no difficulty on this account, as it is proposed to permit the use of English in communications to firms and institutions which generally correspond in English as well as those to foreign embassies, consulates, foreign diplomats and other foreigners.

**Ground 2:**

There is no difficulty on this account either as it is proposed to permit the use of English in communications relating to all cases involving the exercise of statutory powers.

**Ground 3 :**

There can be no objection on this account as those of English will be permitted in all communications in which the highly technical matters have to be dealt with and as Supplementary Glossaries have been prepared in respect of technical terms peculiar to each Department.

4. The Government have carefully examined the proposals of the Official Language Committee and have also considered whether the scheme should be deferred for the present in view of the present national emergency. The Government observe that ample provision has been made for the gradual implementation of the various stages of the scheme that only the first stage relating to correspondence with the members of the General Public and that too in respect of only letters received in Tamil is to be implemented now and that the further stages will be staggered to the extent necessary. The Government have therefore decided to accept the scheme as proposed by the Official Language Committee and introduce it with effect from 1st March 1963 in respect of the first stage.

5. The appended notification (Appendix I) will be published in the *Fort St. George Gazette*.

6. The attention of the Heads of Departments is invited the instructions contained in Appendix II to this orders and are requested to bear them in mind while implementing the scheme orders in regard to the supply of the required number of Tamil typewriters to the offices as in the list in Appendix III will be issued separately in the Public Works Department.

7. The Heads of Departments are requested to submit half yearly progress reports for the half years ending 31st August and 28th February not later than the 1st of the succeeding month. Copies of these reports should be sent simultaneously to the Secretary, Official Language Committee. The progress reports should be indicated clearly the progress so far achieved in the implementation of the scheme and particular difficulties if any which require the attention of the Government.

## APPENDIX - I

### NOTIFICATION

In exercise of the powers conferred by Section 4 of the Madras Official Language Act, 1956 (Madras Act XXXIX of 1956) the Governor of Madras hereby directs that with effect from first day of March 1963 Tamil shall be used in respect of all official communications from the Government offices specified in the schedule below to any person other than;

i) an officer of a State Government or of the Central Government.

ii) a Local Authority;

Provided that English may be used;

i) in communications to:-

firms and institutions which generally correspond in English.

ii) Foreign Embassies, Consulates and person belonging to foreign deplomatic services;

and

iii) other foreigners;

(a) In communications which are replies to letters received in English from other individuals

and

(b) in communications relating to cases involving the exercises of statutory powers.

## SCHEDULE

***Serial number and Name of Office***

1. Office of the Director of Agriculture, Madras
2. Office of the Board of Revenue (Land Revenue), Madras.
3. Office of the Board of Revenue (Civil Supplies), Madras.
4. Office of the Board of Revenue (Food Production), Madras.
5. Office of Board of Revenue (Settlement of Estates), Madras.
6. Office of the Commissioner of Agriculture, Income Tax, Madras.
7. Office of the Director of Animal Husbandry, Madras.
8. Office of the Board of Revenue (Commercial Taxes), Madras.
9. Office of the Registrar of Co-operative Societies, Madras.
10. Office of the Director of Public Instruction, Madras.
11. Office of the Director of Fisheries, Madras.
12. Office of the Chief Conservator of Forests, Madras.
13. Office of the Director of Harijan Welfare, Madras.
14. Office of the Chief Engineer (Highways and Rural Works), Madras.
15. Office of the Director of Industries and Commerce, Madras.
16. Office of the Inspector General of Prisons, Madras.

17. Office of the Commissioner of Labour, Madras.
18. Office of the Commissioner of Labour (Factories Wing), Madras.
19. Office of the Additional Development Commissioner, Madras.
20. Office of the Examiner of Local Fund Accounts, Madras.
21. Office of the Director of Medical Services, Madras.
22. Office of the Inspector General of Police, Madras.
23. Office of the Inspector General of Police (Fire Services), Madras.
24. Office of the Commissioner of Police, Madras.
25. Office of the Deputy Inspector General of Police, Madras.
26. Office of the Police Radio Officer, Madras.
27. Office of the State Fort Officer, Madras.
28. Office of the Director of Public Health, Madras.
29. Office of the Chief Engineer, P.W.D. (General), Madras.
30. Office of the Chief Engineer (Irrigation), Madras.
31. Office of the Inspector General of Registration, Madras.
32. Office of the Transport Commissioner, Madras.
33. Office of the Director of Statistics, Madras.
34. Office of the Controller of Stationery and Printing, Madras.
35. Office of the Chief Inspector of Approved Schools and Vigilance Service, Madras.
36. Office of the Director of Women's Welfare, Madras.

37. Office of the Commissioner, Hindu Religious and Charitable Endowments (Adms.), Madras.

38. Office of the Official Language Committee, Madras.

## APPENDIX II

Under the scheme recommended by the Official Language Committee and approved by the Government, Tamil will be introduced in easy stages and only the first stage has been ordered now.

2. In the first stage only communications with the Public will be required to be in Tamil, and even here English may continue to be used in cases falling under the proviso to the notification in Appendix I supra. Nothing else is required this stage, and all other work including nothing and passing of orders on notes may continue to be done in English as hitherto and indulgences are allowed under the proviso to the notification and there will be no difficulty in practice in implementing the scheme.

In the Offices of the Heads of Departments there will be a difficult in finding a sufficient number of men who can prepare the simple drafts going to private parties. Orders have been issued in G.O.Ms.No.2450 Public (General-M), dated 26th December 1962 for helding instruction classes for coaching up Government servants who are unable to draft in Tamil now. But there is no need to wait for the training of such persons as there is adequate staff in the offices of Heads of Departments who can assist in drafting in Tamil the replies which have to be sent to private parties in Tamil under the scheme.

3. What is most important under the scehme is that communications to private parties should go in Tamil. If this is done, the public will have no grievance about the implementation of the scheme. The rest of the work done in Government offices with regard to maintenance of Registers, noting, etc., concerns only the internal working of those

offices of the correspondence as between Government offices and the public do not come into the picture and they will not be interested in more or less of English being used in such work.

4. As regards statutory orders, though they are permitted to be sent in English, the gist of such orders has to be communicated to the party concerned in Tamil as required by the General orders of the Government. Only a brief gist of such orders is required and it can easily be prepared in Tamil and sent.

5. The further stages will be achieved through executive instructions as recommended by the Official Language Committee. In the second stage, Tamil will be introduced progressly in correspondence with the subordinate offices and other district offices. The Heads of offices can select every half year, the subject in which they will correspond in Tamil with subordinate and district offices from the date specified by them in this behalf and from such date, these latter offices can send in Tamil their communications on these objects to the Head of the Department concerned. It is only at this stage that the question of correspondence in technical matters will really arise and the scheme permits the use of English in communications dealing with technical matters. Actually at all stages, the scheme provides for the use of English when highly technical matters have to be dealt with the ideas cannot be expressed with the necessary precision in Tamil.

In the third stage correspondence in Tamil will be extended to correspondence with other Heads of Departments.

It is only in the final stage correspondence in Tamil will be extended to communications sent to the State Government and this is proposed to be alone only when the Tamil scheme is introduced in the departments of the Secretariat. Even then correspondence in regard to technical

matters and any other matters which may be specified by the Government in this behalf may continue to be in English.

6. The main thing to be achieved under the Tamil Scheme is the use of Tamil in communications leaving the Government Offices. This is what has to be aimed at, and if this is achieved to the utmost extent practicable and as quickly as possible the use of English with or as between Government offices, for other work need not be objected to. Each office will be left to phase its programme for making the scheme comprehensive to regard with reference to its peculiar difficulties. If any and the maintenance of Registers and noting. In the early stages, there will be no objection to noting being done in English and even orders on notes being passed in English. But noting should be switched over to Tamil as early as possible IN THE SECOND AND SUBSEQUENT STAGES. Officers who cannot deal with note and put up to the in Tamil can always have the notes put up to them in English and pass orders in English leaving the office to draft and send the communications in Tamil when so required under the scheme. If the subject clerk is unable to draft satisfactorily in Tamil he can draft in English with reference to the orders on the notes and a Tamil translation of the draft can be got prepared by some competent person in the office. The scheme is thus elastic and provides for all the necessary indulgences for persons who are weak in Tamil.

7. The Heads of Departments are normally expected to send self contained communications for the orders of the Government. But in a number of cases, in accordance with long standing practice the Head of the Department forwards with his remarks and recommendations the communication received by him from his subordinate officer concerned. In such cases, in the second and subsequent stages of the scheme in the forwarding the letter from the Head of Department will be in English and Tamil.

இணைப்பு - 4

# GOVERNMENT OF MADRAS

## ABSTRACT

Official Language - Tamil - Introducion in the Offices of Heads of Departments and some Regional Offices - Second Stage of the Scheme - Orders issued.

---

PUBLIC (GENERAL.M), DEPARTMENT

G.O. Ms. No.603 Dated 24th March 1965

Read the Following :-

i) G.O. Ms.No.225, Public (General.M), dated 13.2.1963.

ii) Governement Memorandum No. 1056/63-1, Public (General.M), dated 20.2.1963.

iii) G.O.Ms.No.609, Public (General-M), dated 23.3.1963

iv) G.O.Ms.No.912, Public (General.M), dated 18.5.1963

v) G.O.Ms.No.1759, Public (General.M), dated 13.11.1963

vi) From the Secretary, Official Language Committee Letter No. Ref.422/64-A, dated 14.7.1964.

vii) From the Secretary Official Language Committee Letter No.422/64-A, dated 12.10.1964.

**ORDER**

In G.O.Ms.No. 225, Public (General-M), dated 13.2.1963, the Government laid down the Scheme of Introducing Tamil correspondence in the offices of Heads of Departments in four stages. In the G.Os cited, the Government introduced the first stage of the partial scheme of Tamil correspondence in the offices of Heads of Departments and in certain Regional Offices by Notifications

issued under section 4 of the Madras Official Language Act, 1956 (Madras Act XXXIX of 1956). According to the First stage of the scheme, communications in Tamil received from the general public will be replied to in Tamil. It was pointed out in G.O.Ms.No.225, Public (General-M), dated 13.2.1963, that in the second stage, Tamil would be introduced progressively in correspondence with the subordinate offices and other District Offices. As a second stage, the Heads of Departments were requested to select every half year the subjects in which they would correspond in Tamil with the Subordinate and District Offices from the dates specified by them in this behalf. The G.O. first cited, contemplates the introduction of the second and subsequent stages of Tamil scheme by means of Executive instructions to be issued by Government instead of a formal notification so that the change over to Tamil may be smooth and elastic.

2. The Secretary, Official Language Committee in his references sixth and seventh cited has sent the Committee's recommendations on the reports received from the various Heads of Departments in regard to the introduction of Second stage of the scheme of Tamil Correspondence. Final reports are still due from certain other Heads of Departments as indicated in Annexure II to this order and the Secretary, Official Language Committee has promised to send further recommendations in the matter.

3. After examination of the recommendations of the Official Language Committee, the Government issue the following directions which will take effect from the 13th April 1965 (Tamil New Years Day) :

(i) Correspondence by all the Heads of Departments with the subordinate offices and other district offices should be in Tamil on all simple matters such as reminders, endorsements and other non-technical matters.

(ii) Such of the Heads of Departments indicated in Annexure I to this order should correspond in Tamil with the

subordinate offices and other district offices on the subjects specified against each of them.

4. The Chief Conservator of Forests in his report has stated, that he has proposed inter-alia, to send replies to the petitions received in Tamil. He is informed that this should have already been enforced as per orders in G.O. Ms. No.225, Public (General-M), dated 13.2.1963.

5. The Commissioner, Hindu Religious and Charitable Endowments (Administration) Department in his report has stated that he has already issued instructions to subordinate offices to submit reports in Tamil in regard to Revenue and administrative matters and that all N. Dis. endorsements and replies to reminders should be in Tamil. His acting in having issued the above instructions prior to the issue of executive instruction is approved.

6. The Inspector General of Police has asked for large additional staff for implementing the second stage. He is requested to watch the working of the implementation of the second stage for about six months. If in the light of the experience in the working of the second stage for six months, he feels that the additional staff is necessary, he may submit proposals then to Government in the Home Department for consideration.

7. The Heads of Departments are requested to submit half-yearly progress reports for the half-year ending 30th September and 31st March not later than the 20th of the succeeding month on the implementation of the second stage of the scheme of Tamil corrrspondence in their respective offices.

8. Such of these Heads of Departments who have not sent their final reports are requested to expedite their reports to the Official Language Committee.

(By order of the Governor)

**C.A. RAMAKRISHNAN,**
Secretary to Government (Ex-Officio)

## இணைப்பு - 32

# தமிழ்நாடு அரசு

பொருளடக்கம்

தமிழ் வளர்ச்சி விழா - தமிழ் வளர்ச்சி இயக்ககம் - ஆட்சிமொழி முனைப்புத் திட்டம் விழா நடத்துதல் மற்றும் தொடர் நடவடிக்கைகள் குறித்து - ஆணை வெளியிடப்படுகிறது.

---

கல்வித் துறை

அரசாணை நிலை எண் 432 நாள் 10.3.1981

பார்வை.

1. தமிழ் வளர்ச்சி இயக்குநரின் (சென்னை-1) 6.6.90 -ஆம் நாளிட்ட கடிதம் ந.க. எண் ஆ3/07729/80.
2. அரசாணை நிலை எண் 2595, கல்வித் துறை, நாள் 4.12.1980.

**ஆணை**

ஆட்சிமொழித் திட்டம் 1957ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்று கடந்த 23 ஆண்டுகளில் மேற்கொள்ளப்பட்ட பல்வேறு நடவடிக்கைகளின் விளைவாக எதிர்பார்த்த அளவு முன்னேற்றம் விளையவில்லை. அரசு அலுவலகங்களில் ஆட்சிமொழித் திட்டம் நிறைவேற்றப் படுவதில் மெத்தனமான போக்கு காணப்படுகிறது. இந் நிலையினைப் போக்கவும் அரசு அலுவலகங்களில் ஆட்சிமொழித் திட்டம் செம்மையாகவும், முழுமையாகவும் நிறைவேற்றப்படவும், ஆட்சிமொழி மூவாண்டு முனைப்புத் திட்டம் ஒன்றினைத் தயாரித்து அதனைச் செயற்படுத்த கீழ்கண்ட கருத்துக்களை தமிழ் வளர்ச்சி இயக்குநர் அனுப்பியுள்ளார்.

**1) நோக்கம் :**

குறிப்பிட்ட சில துறைகளைத் தேர்ந்தெடுத்து அத்துறைகளில் ஆட்சிமொழித் திட்டத்தை முழுமையான அளவில் குறிப்பிட்ட காலவரையறைக்குள் சோதனைத் திட்டமாக ஒரு திட்டத்தை உருவாக்கி ஓராண்டு காலத்தில் அத்திட்டம் செயற்படும் முறையிலிருந்து அனுபவங்களின் அடிப்படையில் பின்னர் மற்ற துறைகளுக்கும் அத்திட்டத்தினை நீட்டித்தல் சிறந்த பயன் விளைவிப்பதாக அமையும்.

1. பத்திரப் பதிவுத் துறை
2. சீர்திருத்தப் பணித் துறை,
3. தீயணைப்புத் துறை
4. சிறைத் துறை
5. கால்நடை பராமரிப்புத் துறை

ஆகிய ஐந்து துறைகளும் ஆட்சி மொழி முனைப்புத் திட்டத்தின் கீழ் முதலில் தேர்வு செய்யப் பெறலாம்.

## 2) திட்டத்தின் கோட்பாடுகள்

### (அ) தட்டச்சுகள்

ஆட்சிமொழித் திட்டத்தின் ஆணிவேராகக் கருதப் பெறுகின்ற அடிப்படைத் தேவை, போதிய அளவில் ஒவ்வொரு அரசுத் துறைக்கும் தமிழ்த் தட்டச்சுகள் வழங்குதல் ஆகும். தமிழ்த் தட்டச்சுகளில் பற்றாக்குறை, திட்டத்தின் முன்னேற்றத்தை வெகுவாகப் பாதித்துள்ளது. ஒவ்வொரு துறையிலும் தேவைப்படுகின்ற மொத்தத் தமிழ்த் தட்டச்சுகளின் எண்ணிக்கையை அந்தந்தத் துறைத் தலைவர்கள் கவனித்து, திட்டம் துவங்கிய நாளிலிருந்து ஒரு திங்கள் காலத்திற்குள் அரசுக்குத் தெரிவித்து விட வேண்டும். அரசின் ஒப்பளிப்பு கிடைத்த மூன்று திங்கள் காலத்திற்குள் எழுதுபொருள் அச்சுத் துறை இயக்குநர் தமிழ்த் தட்டச்சுகளை அந்தந்தத் துறைத் தலைமை அலுவலகங்களுக்கு வழங்கிட வேண்டும். பிற துறைகளுக்குத் தமிழ்த் தட்டச்சுகள் வழங்கு வதற்காக மேற்கொள்ளப்படும் வாலாயமான முறையில் அல்லாது இத்திட்டத்தில் வருகின்ற ஐந்து துறைகளுக்கும் தனியாகச் சிறப்பு அடிப்படையில் கேட்கப்பெற்ற அனைத்துத் தமிழ்த் தட்டச்சுகளையும் மூன்று திங்கள் காலவரையறைக்குள் வழங்கிட வேண்டும்.

தட்டச்சுகளைப் பொறுத்தவரையில் கீழ்க்கண்ட கோட்பாடுகள் நிறைவேற்றப்பட வேண்டும்.

(1) எந்த ஒரு துறையிலும் துறைத் தலைமை அலுவலகம் தவிர ஏனைய சார்நிலை அலுவலகங்கள் அனைத்திலும் உள்ள ஆங்கிலத் தட்டச்சுகள் திரும்பப் பெறப்பட வேண்டும்

(2) ஏற்பளிப்பு வழங்கப்பெற்ற கடித வரைவுகளை செல்லைப் படி எடுக்கும்போது ஆங்கில வரைவுகள் தட்டச்சின் உதவி யின்றி கையினால்தான் எழுதவேண்டும் என்ற நிலை தோற்றுவிக்கப்பட வேண்டும் அப்போதுதான் ஆங்கிலம் மிகுதியாக எழுதப்படும் நிலை மாறும் என்பது வெளிப்படை

### ஆ) கடிதப் போக்குவரத்து :

கடிதப் போக்குவரத்தைப் பொறுத்தமட்டில் ஆங்கிலத்தில் ஒரு கடித வரைவினைத் தயாரிக்க வேண்டுவது இன்றியமையாததென்று கருதப்பட்டால் தொடர்புடைய பிரிவுத் தலைவரின் முன் அனுமதியின்றி அதனை ஆங்கிலத்தில் தயாரிக்க அனுமதித்தல் கூடாது. அவ்வரைவு விதிவிலக்குப் பெற்ற இனத்தைச் சேர்ந்ததா என்பதை ஆய்ந்து பிரிவுத் தலைவர் அனுமதித்த பின்னரே ஆங்கில வரைவுகள் எழுதப்பட வேண்டும். இதைத் தவிர நினைவூட்டுகள், ஒப்பளிப்புக் கடிதங்கள்,

இடைக்கால மறுமொழிகள், அசல் திருப்பு முடிவுகள் ஆகிய நான்கு வரைவுகளும் ஆங்கிலத்தில் இருக்கக்கூடாது என்ற கட்டுப்பாடு விதிக்க வேண்டும்.

**இ)பதிவேடுகள் பராமரிப்பு :**

ஆட்சிமொழித் திட்டத்தில் விதிவிலக்குகள் எனக் கருதப் படுபவை அனைத்தும் கடிதப் போக்குவரத்துக்குப் பொருந்துமேயன்றி பதிவேடுகள் பராமரிப்புக்குப் பொருந்தா. எனவே மேற்குறித்த ஐந்து துறைகளைச் சார்ந்த அனைத்துச் சார்நிலை அலுவலகங்களிலும் பதிவேடுகள் யாவும் தமிழில் எழுதப் பெற்று இத்திட்டம் துவங்கிய ஒரு திங்கள் கால வரையறைக்குள் இவ்வலுவலகத்தில் அனைத்துப் பதிவேடுகளும் தமிழுக்கு மாற்றம் செய்யப் பெற்றுவிட்டன என்ற சான்றினை ஒவ்வொரு அலுவலகத் தலைவரும் தமக்கு நேரடியாகத் தொடர்புடைய மேலலுவலருக்கு அனுப்பவேண்டும். இம்மேல லுவலர்கள் சான்றினைப் பெற்றவுடனே சார்நிலை அலுவலகங்களில் ஆட்சிமொழித் திட்ட ஆய்வினை மேற்கொண்டு குறைகளைவு அறிக்கையைத் துறை மேல்நிலை அலுவலருக்குத் தெரிவிக்க வேண்டும்.

**ஈ) துறைத் தலைமை அலுவலகத்தில் பொறுப்புகள்**

ஒவ்வொரு துறைத் தலைமை அலுவலகத்திலும், ஆட்சிமொழித் திட்டச் செயற்பாட்டினைக் கவனிப்பதற்கென்று தனியாகத் துறைத் தலைமை அலுவலருக்கு அடுத்த நிலையில் உள்ள ஒரு தொடர்பு அலுவலர் நியமிக்கப் பெற்றுள்ளார். அவரே ஆட்சிமொழி முனைப்புத் திட்டத்தை ஓராண்டுக்குள் செயற்படுத்தி நிறைவு செய்யக் கடமைப்பட்டவர் ஆவார்.

**3. தமிழ் வளர்ச்சி இயக்கத்தின் ஆய்வு :**

தமிழ் வளர்ச்சி இயக்குநர் ஒரு துறைத் தலைமை அலுவலகத்தை ஆய்வு செய்து, குறைகளைச் சுட்டிக்காட்டிய பின்னர் அதன் பின்வரும் ஒவ்வொரு திங்கள் முடிவிலும், தொடர்பு அலுவலர் அனைத்துப் பணியாளர்களையும் கூட்டி எந்தெந்தக் குறைகள் களையப்பெற்றன, எவையெவை இன்னும், களையப்படாமல் உள்ளன என்பவற்றை ஆய்ந்து அவற்றைக் களைவதற்குரிய நடிவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டும். தமிழ் வளர்ச்சி இயக்ககத்திலிருந்து மாவட்ட ஆய்வு உதவி இயக்குநர் தலைமையில் ஒரு குழுவினர் ஒவ்வொரு திங்களிலும் அவ்வலுவலகத்திற்கு நேரில் சென்று குறை களைவு நடவடிக் கைகளுக்குத் தேவையான உதவிகளை நல்கிட வேண்டும். ஒவ்வொரு திங்களிலும் எட்டப் பெறுகின்ற முன்னேற்றம் பற்றிய அறிக்கைகள் தமிழ் வளர்ச்சி இயக்குநருக்கும் துறைத் தலைமை அலுவலருக்கும் அனுப்பப்பட வேண்டும். முன்னேற்ற அறிக்கைகளில் கீழ்க்காணும் இனங்கள் இடம் பெற வேண்டும்.

1. தமிழ்க் கடிதப் போக்குவரத்து
2. பதிவேடுகளில் தமிழ்ப் பதிவுகள்
3. தமிழில் தட்டச்சு செய்யப் பெற்ற அளவு.
4. கோப்புகளில் அலுவலகக் குறிப்புகள் தமிழில் எழுதுதல்
5. சீர்திருத்தப்பெற்ற எழுத்துக்களை நடைமுறைக்குக் கொண்டு வருதல்.
6. சொல்லகராதி, கையகராதி போன்ற நூல்களைப் போதிய அளவில் பெறுதல்.
7. பெயர்ப் பலகைகளையும், இரப்பர் முத்திரைகளையும், உலோக முத்திரைகளையும் தமிழில் செய்தல்.

மாவட்டங்களில் அந்தந்தத் துறையைச் சார்ந்துள்ள சார்நிலை அலுவலகங்களில் ஏற்படும் முன்னேற்றத்தைத் தமிழ் வளர்ச்சி இயக்ககத்தைச் சேர்ந்த மாவட்ட உதவி இயக்குநர்கள் ஒவ்வொரு திங்களிலும் ஆய்வு செய்து திங்கள் அறிக்கைகளைத் தமிழ் வளர்ச்சி இயக்குநருக்கும், துறைத்தலைமை அலுவலருக்கும் அனுப்பவேண்டும்.

ஓராண்டுக்குப் பின்னர் ஓராண்டில் அடைந்த சாதனைகளைக் கணக்கிட்டுப் பின்னர் அந்த அனுபவங்களின் அடிப்படையில் பிற துறைகளுக்கும் இத்திட்டத்தை விரிவுபடுத்தி இரண்டாம் ஆண்டில் இதன் இரண்டாம் கட்டத்தை நிறைவேற்றி முடிக்கலாம். மூன்றாம் ஆண்டில் முந்திய இரண்டாண்டுத் திட்டச் செயற்பாடுகளில் ஏற்பட்ட குறைகளை நிறைவு செய்து விடுபட்ட பிற அலுவலகங்களில் இதனைச் செயற்படுத்தி இத்திட்டத்தை நிறைவேற்றி முற்றுவிக்கலாம்

தமிழ் வளர்ச்சி இயக்குநரின் மேற்கூறிய கருத்துக்களை அரசு ஏற்று அதன்படி இந்த முனைப்புத் திட்டம் கீழ்க்கண்ட துறைகளில் 1.4.81 முதல் செயற்படுத்த வேண்டுமென்று ஆணை பிறப்பிக்கின்றது

1. பத்திரப் பதிவுத் துறை
2. சீர்திருத்தப் பணித்துறை
3. தீயணைப்புத் துறை
4. சிறைத் துறை
5. கால்நடைப் பராமரிப்புத் துறை

இதனைச் செவ்வனே நிறைவேற்றச் சம்பந்தப்பட்ட துறைத் தலைவர்கள் ஆவன செய்யக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

3. மேற்பிறப்பிக்கப்பட்ட ஆணையின்படி ஆட்சிமொழி முனைப்புத் திட்டத்தை மேற்குறிப்பிட்ட 5 அரசுத் துறைகளிலும் முழுமை யாக நிறைவேற்றி முடித்து அது குறித்த அறிக்கை ஒன்றினை அரசுக்கு

அனுப்புமாறும், 1982-83ஆம் ஆண்டில் எந்தெந்தத் துறைகளில் இதனைச் செயற்படுத்தலாம் என்பதற்கான செயற்குறிப்பினை அரசுக்கு 1.1 82க்குள் அனுப்புமாறும் தமிழ் வளர்ச்சி இயக்குநர் கேட்டுக் கொள்ளப்படுகிறார்.

(ஆளுநரின் ஆணைப்படி)

**செ.ராம்தாஸ்.**
ஆணையர் மற்றும் அரசுச் செயலாளர்

## இணைப்பு - 33

## தமிழ்நாடு அரசு

தமிழ் வளர்ச்சி விழா - ஆட்சிமொழி மூவாண்டு முனைப்புத் திட்டம் - விழா நடத்துதல் மற்றும் தொடர் நடிவடிக்கைகள் குறித்து ஆணைகள்.

கல்வி, அறிவியல் மற்றும் தொழில்நுட்பவியல் துறை

அரசாணை (நிலை)எண் 968 நாள்: 21.5.82.

தி.ஆ.2013/துந்துபி/வைகாசி 7.

பார்வை :

1. அரசாணை (நிலை) எண் 432, கல்வி, நாள் 10.3.81.
2. அரசுக் கடிதம் எண் 43050/தவ1/81-1, நாள் 2.6.81.
3. தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கடிதம் ந.க. எண்.இ2/197/82, நாள் 7.1.81 மற்றும் 18.2.82.

**ஆணை**

அரசு அலுவலகங்களில் ஆட்சிமொழித் திட்டம் செம்மையாகவும்,முழுமையாகவும் நிறைவேற்றப்பட மூவாண்டு ஆட்சிமொழி முனைப்புத் திட்டத்தை 1.4.81 முதல் ஐந்து அரசுத் துறைகளில், முதலாண்டில் செயல்படுத்த 10 3.81 ஆம் நாளிட்ட, கல்வித் துறையின் அரசாணை நிலை எண் 432 இல் ஆணையிடப்பட்டது. மேலும், பன்னிரெண்டு அரசுத் துறைகளில் இத்திட்டதைச் செயல்படுத்த 2.6.81ஆம் நாளிட்ட கல்வித் துறையின் அரசுக் கடிதம் எண் 43050/தவ1/81-1இல் ஆணையிடப்பட்டது.

2. ஓராண்டில் அடைந்த சாதனைகளைக் கணக்கிட்ட பின்னர், அந்த அனுபவங்களின் அடிப்படையில், பிற துறைகளுக்கும், இத் திட்டத்தை விரிபடுத்தி இரண்டாம் ஆண்டில் இதன் இரண்டாம்

கட்டத்தை நிறைவேற்றி முடிக்கலாம் என்னும் கருத்துப்படி இத்திட்டம் முதலாண்டில் பதினேழு துறைகளில் செம்மையாகச் செயற்படுத்தப்பட்டு வருகிறது. முதலாண்டில் இடம் பெற்ற பதினேழு துறைகள் நீங்கலாக உள்ள பிற எல்லாத் துறைகளிலும், ஆட்சிமொழி மூவாண்டு முனைப்புத் திட்டத்தை விரிவுபடுத்தும் பொருட்டுத் தலைமைச் செயலகத் துறைகளின் கீழ் செயல்படும் துறைகளுக்கும் ஆட்சிமொழித் திட்டத்தை விரிவுபடுத்த தமிழ் வளர்ச்சி இயக்குநர் அரசுக்குக் கருத்துத் தெரிவித்துள்ளார்.

3. தமிழ் வளர்ச்சி இயக்குநரின் மேற்குறிப்பிட்ட கருத்துகளை அரசு ஏற்று இணைப்பில் உள்ள அரசுத் துறைகள் அனைத்திலும் செயலாக்க கீழ்க்காணும் வகையில் ஆணை பிறப்பிக்கப்படுகிறது.

அ) அரசாணை நிலை எண் 432 கல்வி, நாள் 10.3.81 மற்றும் அரசின் கடிதம் 43050/தவ1/81-1, கல்வித் துறை, நாள் 2.6.81 ஆகியவற்றில் இடம் பெற்ற பதினேழு அரசுத் துறைகள் நீங்கலாக இணைப்பில் கொடுக்கப்பட்டுள்ள அனைத்துத் துறைகளுக்கும் ஆட்சிமொழி மூவாண்டு முனைப்புத் திட்டத்தை 1.4.82 முதல் விரிவு படுத்தி ஆணையிடப்படுகிறது.

ஆ) செயலகத் துறைகள் எல்லாத் துறைத் தலைமை அலுவலகங்க ளோடும் ஆட்சிமொழியாகிய தமிழில் மட்டுமே தொடர்பு கொள்ளும்படிச் செய்ய வேண்டும். இதற்கு தலைமைச் செயலகத் துறைகளில் உள்ள அனைத்து ஆணையர் - அரசுச் செயலாளர்களும் அனைத்துத் துறைத் தலைவர்களும் மூவாண்டு முனைப்புத் திட்டம் முழுமையாகவும், செம்மையாகவும் செயல்பட உறுதுணைபுரிய வேண்டும்.

இ) தட்டச்சுப் பொறிகளைப் பொறுத்தவரை, ஒவ்வொரு துறையிலுள்ள தட்டச்சுகளின் மொத்த எண்ணிக்கையில், 1982 மே திங்களுக்குள் 50 விழுக்காடும், ஆகஸ்டு திங்களுக்குள் 75 விழுக்காடும் கண்டிப்பாகத் தமிழ்த் தட்டச்சுகளாக மாற்றிக் கொள்ள, துறைத் தலைவர்கள் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.

ஈ) எழுதுபொருள் அச்சுத் துறை இயக்குநர் ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளுக்கு பதிலாகத் தமிழில் தட்டச்சுப் பொறிகளாக மாற்றும் துறைகளுக்கு உடனுக்குடன் தமிழ் தட்டச்சுப் பொறிகளை, முட்டுப் பாடின்றி வழங்க வேண்டும். எத்துறைகளுக்கும் புதியதாக ஆங்கிலத் தட்டச்சுகளை வழங்குவது கூடாது. தவிர்க்க இயலாத நேர்வுகளில், நிலைமையை விளக்கித் தமிழ் வளர்ச்சி இயக்குநரின் ஒப்புதலைப் பெற்றே ஆங்கிலத் தட்டச்சுகளை வழங்க வேண்டும்.

உ) இவ்வாணை வெளியிடும நாள் முதல் எத்துறைகளும், ஆங்கிலத் தட்டச்சுப் பொறியைப் பெறவேண்டித் துறைத் தலைவர்களிட மிருந்து வரும் கருத்துக்களை ஏற்காது, தமிழ் தட்டச்சுப் பொறிகளை மட்டுமே பெறுவதற்குரிய நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு

அவ்வத்துறைத் தலைவர்களுக்கு அறிவுறுத்துமாறு சம்பந்தப்பட்ட தலைமைச் செயலகத் துறைகள் அறிவுறுத்தப்படுகின்றன.

ஊ) ஆட்சிமொழி மூவாண்டு முனைப்புத் திட்டம் எல்லாத் துறைகளுக்கும் விரிவுபடுத்தப்பட்டுள்ளதால், அரசால் வெளியிடப் பெறுகின்ற ஆணைகள் ஆங்கிலத்தில் அமைந்திருப்பது ஏற்புடையதாக அமையாதென்பதால் அரசு வெளியிடும் ஆணைகள் மற்றும் எல்லா கடிதப் போக்குவரத்துக்களையும் தமிழிலேயே வெளியிட தலைமைச் செயலகத் துறைகளின் செயலாளர்கள், தக்க துரித நடவடிக்கை மேற்கொள்ள கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

(ஆளுநரின் ஆணைப்படி)

**செ.ராம்தாஸ்,**
ஆணையர் மற்றும் அரசுச் செயலாளர்.

**இணைப்பு - 34**

## தமிழ் நாடு அரசு

சுருக்கம்

ஆட்சிமொழி - தமிழ் - தட்டச்சு ஆங்கிலத் தட்டச்சுகள் அரசு அலுவலகங்களுக்கு வழங்குவதை நிறுத்தி வைத்தல் - தமிழ் வளர்ச்சித் துறையின் இசைவு பெறுதல் - ஆணை வெளியிடுதல்.

---

தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை

அரசாணை நிலை எண். 9 நாள் 9.1.86

தி. அ. 2016 / குரோதன / மார்கழி-25.

பார்வை :

1. 10.3.81ஆம் நாளிட்ட அரசுக் கல்வித் துறை அரசாணை நிலை எண். 432.
2. 21.5.82ஆம் நாளிட்ட அரசுக் கல்வி, அறிவியல் மற்றும் தொழில் நுட்பவியல் துறை. அரசாணை நிலை எண். 968.
3. 31 1.85 மற்றும் 3.7.85ஆம் நாளிட்ட தமிழ் வளர்ச்சி இயக்குநர் கடிதம் எண். இ4/16200/82.

**ஆணை**

பார்வையில் குறிப்பிட்டுள்ள அரசாணைகளில் தமிழ் ஆட்சிமொழி முனைப்புத் திட்டச் செயலாக்கம் தொடர்பாக உரிய ஆணைகள் வெளியிடப்பட்டுள்ளன.

2. அரசின் கொள்கையான தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தைச் செயற்படுத்த பார்வை 3இல் கண்ட தமிழ் வளர்ச்சி இயக்குநர் கடிதத்தில் குறிப்பிட்டுள்ள செயற்குறிப்பினை அரசு பரிசீலித்து கீழ்க்காணும் ஆணைகளை வெளியிடுகிறது :-

அ) அலுவலக நடைமுறைகள் யாவும் ஆட்சிமொழியான தமிழில் நடைபெறுவதால் அதனை வற்புறுத்தும் நிலையில் அரசு சார்பு அலுவலகங்களில் அனைத்துமே தமிழ்த் தட்டச்சுப் பொறிகளாகவும் அரசு துறைத் தலைமை அலுவலகங்கள் 75 விழுக்காடு எனும் அளவுக்குத் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளும் இருத்தல் வேண்டும்.

ஆ) மேலே (அ) பிரிவில் குறிப்பிட்டுள்ள இலக்கினை அடையவும், குறிப்பிட்ட இலக்கைவிட அதிகமாக ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகள் இருப்பின் அவற்றை எழுதுபொருள் அச்சுத் துறைக்கு அனுப்பி, தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பெற்றுக் கொள்ள துறைத் தலைவர்கள் உடனடி நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

இ) மேலே 'அ' பிரிவில் குறிப்பிட்ட இலக்கைக் காட்டிலும் எந்தவொரு சார்நிலை மற்றும் துறைத் தலைமை அலுவலகமும் கூடுதலாக ஆங்கிலத் தட்டச்சுப் பொறியினைப் பெறவோ, வைத்திருக்கவோ கூடாது. தவிர்க்க இயலாத நேர்வுகளில் விலக்களிப்புப் பெறுவதற்காக நிலைமையை விளக்கித் தமிழ் வளர்ச்சி இயக்குநரின் இசைவினைப் பெற்றே ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளைத் தனி நேர்வாகவோ, தற்காலிகமாகவோ தக்க வைத்துக் கொள்ளவோ புதிதாகப் பெற்றுக் கொள்ளவோ அரசுச் செயலகத்தின் தொடர்புடைய நிருவாகத் துறையின் வாயிலாகத் தலைமைச் செயலக தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை மற்றும் போக்குவரத்துத் துறைகளின் இசைவினைப் பெற்றாக வேண்டும். அவ்வாறு முறைப்படி இசைவினைப் பெற்று வெளியிடப்படும் ஆணைகளின் இறுதிப் பத்தியில் தமிழ் வளர்ச்சி - பண்பாடு, போக்கு வரத்துத் துறைகள் இசைவு தெரிவித்த விவரங்களைக் குறிப்பிட வேண்டும். தமிழ் வளர்ச்சி இயக்குநரின் இசைவு பெறாத செயற் குறிப்புகளை அரசு துறைத் தலைவர்கள் அரசின் பரிசீலனைக்கு அனுப்புதல் கூடாது.

ஈ) தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தினைக் கருத்திற் கொண்டு ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகள் பெற வேண்டித் துறைத் தலைவர்களிடமிருந்து வரும் கருத்துருக்களை

ஏற்காது, தமிழ்த் தட்டச்சுப் பொறிகளை மட்டுமே பெறுவதற்குரிய நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு துறைத் தலைவர்களுக்கு அறிவுறுத்துமாறு உரிய தலைமைச் செயலகத் துறைகள் கேட்டுக் கொள்ளப்படுகின்றன.

மேலே குறித்தவாறு நடைமுறைகளை கைக்கொள்ளுமாறு அனைத்துத் துறைத் தலைவர்கள் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

(ஆளுநரின் ஆணைப்படி)

**(ஒம்.) ஔவை. நடராசன்,**
அரசு செயலாளர்

**இணைப்பு - 35**

## தமிழ் நாடு அரசு

சுருக்கம்

தமிழ் வளர்ச்சி - ஆட்சிமொழி செயலாக்கம் ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளுக்கு பதில் தமிழ் தட்டச்சுகள் பயன்படுத்துதல் - நடைமுறைப்படுத்திட செயல்முறைகள் - ஆணை வெளியிடுதல்

தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை

அரசாணை நிலை எண் 9

நாள் : 13.1.1988
மார்கழி 29, பிரபவ
திருவள்ளுவராண்டு 2018

படிக்க .

1. தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கடிதம் எண்.இ2/197/82 நாள் 3.8.82
2. தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கடிதம் எண்.இ4/18060/82, நாள் 10.2.84 மற்றும் 17.10.84

மேலும் படிக்க :

1. அரசாணை (நிலை) எண்.764, போக்குவத்துத் துறை, நாள் 8.9.78
2. அரசாணை (நிலை) எண்.908, கல்வி, அறிவியல் மற்றும் தொழில்நுட்பவியல் துறை, நாள் 21.5.82.

**ஆணை**

தமிழ் ஆட்சிமொழித் திட்ட செயலாக்கத்தின்படி எல்லாத் துறைத் தலைமை அலுவலகங்களோடும் ஆட்சி மொழியாகிய தமிழில் மட்டுமே தொடர்பு கொள்ள வேண்டும் என்று ஆட்சிமொழி முனைப்புத் திட்டம்

எல்லாத் துறைகளுக்கும் விரிவுபடுத்தப்பட்டுள்ளதால், அரசால் வெளியிடப்படுகின்ற ஆணைகள் ஆங்கிலத்தில் அமைந்திருப்பது ஏற்புடையதாக அமையாதென்பதால் அரசு வெளியிடும் ஆணைகள் மற்றும் எல்லாக் கடிதப் போக்குவரத்துகளும் தமிழிலேயே வெளியிடப்பட வேண்டும் என்றும் தலைமைச் செயலகத் துறைகள் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளன.

2. இத்திட்டம் முழுமையாகச் செயல்படத் துவங்கிவிட்டது முனைப்புத் திட்ட அரசாணையின்படி, துறைத் தலைமை அலுவலகங்களில் 100க்கு 75 விழுக்காடும், சார்நிலை அலுவலகங்களில் 100க்கு 100 விழுக்காடும் தமிழ் தட்டச்சுகளாக இருக்கவேண்டும். இந்நிலையில் தமிழ் வளர்ச்சி இயக்குநர், தலைமைச் செயலகத் துறைகளில் உள்ள தட்டச்சுகளில் 50 விழுக்காடு மட்டும் ஆங்கிலத் தட்டச்சுகளாக இருக்கலாம் என்றும் அதற்குமேல் உள்ள ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளை எழுதுபொருள் அச்சுத் துறையிடம் ஒப்படைத்து விட்டு, அவற்றுக்கு ஈடாக தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பெற்று முழுவதும் பயன்படுத்தலாம் என்றும் கேட்டுக் கொண்டுள்ளார்.

3. அரசு தமிழ் வளர்ச்சி இயக்குநரின் செயற்குறிப்பினை ஆய்ந்து, பரிசீலனைக்குப்பின் ஏற்று தலைமைச் செயலகத் துறைகளில் பயன்பாட்டிலுள்ள மொத்த (ஆங்கிலம் மற்றும் தமிழ்) எண்ணிக்கையில் 50 விழுக்காடு தமிழ்த் தட்டச்சு இருக்கவேண்டும் என அரசு கொள்கையாக அறிவிக்கின்றது. அதனையொட்டி தலைமைச் செயலகத்தில் தற்போது பயன்பாட்டிலுள்ள 50 விழுக்காடு அளவிற்குமேல் உள்ள ஆங்கிலத் தட்டச்சுகளை தமிழ்த் தட்டச்சுகளாக உடனடியாக மாற்றப்படவேண்டும் இப்போதைய தமிழ்த் தட்டச்சுகளின் இருப்பு நிலை கருதி அதன் 30 (முப்பது) விழுக்காடு அளவிற்கு ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகள் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளாக உடனடியாக மாற்றப்படவேண்டுமென அரசு ஆணையிடுகிறது. தற்போது எழுது பொருள் அச்சகத்தில் கைவசமுள்ள 180 தமிழ் தட்டச்சுப் பொறிகளை தலைமைச் செயலகத் துறைகளுக்கு (ஆங்கில தட்டச்சுகளைத் திரும்பப் பெற்றுக் கொண்டு) மாற்றாக முதற்கண் வழங்கிட வேண்டுமெனவும், பின்னர் இலக்கினை அடைய எழுதுபொருள் அச்சுத்துறையில் மேற்கொண்டு பெறப்படும் தமிழ் தட்டச்சுப் பொறிகளின் மூலம் மேற்கொண்டு நிறைவு செய்யப்பட வேண்டுமெனவும் எழுதுபொருள் அச்சுத்துறை இயக்குநர் கேட்டுக் கொள்ளப் பெறுகிறார்.

பத்தி 3-ல் கண்டுள்ள ஆணையை செயற்படுத்த அரசாணையுடன் இணைக்கப்பட்டுள்ள படிவத்தில் தேவைப்பட்டியலை பூர்த்தி செய்து ஆணை வெளியிடப்பட்ட ஒரு திங்களுக்குள் தலைமைச் செயலகத் துறைகள் இயக்குநர், அரசு எழுதுபொருள் கிடங்கிற்கு அனுப்பி வைக்க

வேண்டும். தேவைப்பட்டியல்கள் தொடர்பாக ஒப்படைக்கப்படும் ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளுக்கு ஈடாக தமிழ் தட்டச்சுப் பொறிகள் தலைமைச் செயலகத் துறைகளுக்கு உடனடியாக மாற்றி வழங்கிட அரசு எழுதுபொருள் இயக்குநர் கேட்டுக் கொள்ளப்படுகிறார். மொத்தக் கேட்புப் பட்டியலில் எந்த அளவிற்கு தட்டச்சுகள் உடன் மாற்றம் செய்து கொடுக்கப்பட்டது என்றும் மீதி தட்டச்சுப் பொறிகளை மேலும் மாற்றித் தருவது குறித்து அரசிற்கு அறிக்கை அனுப்பிவைக்குமாறும் அரசு எழுதுபொருள் இயக்குநர் கேட்டுக் கொள்ளப்படுகிறார்.

5. இவ்வாணை நிதித்துறை அ.சா.எண்.150066/கல்வி, நாள் 8.12.87இல் பெற்ற ஒப்புதலுடன் வெளியிடப்படுகிறது.

(ஆளுநரின் ஆணைப்படி)

**எஸ்.டி. காசிராசன்**
அரசு கூடுதல் செயலாளர்.

## இணைப்பு

## தமிழ் தட்டச்சுகள் வழங்குவதற்கான தேவைப்பட்டியல்

1. தலைமைச் செயலகத்துறையும் அலுவலகமும்:
2. மேற்கண்ட தலைமைச்செயலகத் துறையிலுள்ள அனுமதிக்கப்பட்ட இடங்கள்:

| | நிரந்தர மானவை | தற்காலிக மானவை | மொத்தம் |
|---|---|---|---|
| 1 தட்டச்சர் | | | |
| 2. சுருக்கெழுத்துத் தட்டச்சர் | | | |

3. மேற்கண்ட துறையிலுள்ள மொத்தத் தட்டச்சுகள்

| | நிரந்திரமாக வழங்கப் பட்டவை | கடனாக வழங்கப் பட்டவை | மொத்தம் |
|---|---|---|---|
| 1 தமிழ் தட்டச்சுகள் | | | |
| 2 ஆங்கிலம் | | | |

4 தற்போது வழங்கத் தேவைப்படும் தமிழ்த் தட்டச்சுகளின் எண்ணிக்கை

5. 1.ஒப்படைக்கப்படவிருக்கிற ஆங்கிலத் தட்டச்சுகளின் எண்ணிக்கை

2. ஒப்படைக்கப்படவிருக்கிற ஆங்கிலத் தட்டச்சுகள் ஒவ்வொன்றின் விவரங்கள்

அ. வகை

ஆ அளவு

இ மொழி

ஈ. வரிசை எண்.

உ. நிரந்தரக் கோப்பு எண்.

ஊ. வழங்கப்பட்ட நாள்

எ. பழுது பார்க்க இதுவரை செலவிட்ட தொகை

ஏ. கடைசியாகப் பழுதுபார்த்த நாள்

ஐ. கடைசியாகப் பழுதுபார்க்கச் செலவிட்ட தொகை

ஒ. இது சம்பந்தமான வேறு உரிய கூடுதல் தகவல்கள்

**பிரிவு அலுவலர்**

**இணைப்பு - 36**

## தமிழ் நாடு அரசு

சுருக்கம்

தமிழ் வளர்ச்சி - தஞ்சாவூரில் நடைபெற்ற எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டு நிறைவு விழாவில் மாண்புமிகு முதலமைச்சர் அறிவித்த 'இன்றும் தமிழ்', 'என்றும் தமிழ்' அறிவிப்பைச் செயல்படுத்துதல் - முதலமைச்சர் தலைமையில் அனைத்து அரசு செயலர்கள் கூட்டத்தை நடத்தி தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தை விரைவுபடுத்துதல் - ஆணை வெளியிடப்படுகிறது.

---

தமிழ் வளர்ச்சி - பண்பாட்டு (த.வ.1.1.)த்துறை

**அரசாணை நிலை எண்.49** நாள்:7.2.1996

திருவள்ளுவராண்டு 2027

யுவ-தை-24

**படிக்கவும்**

1. **அரசாணை (நிலை) எண்.9.** தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் **துறை, நாள்:13.1.88**
2. **எட்டாவது உலகத் தமிழ்** மாநாட்டு நிறைவு விழாவில் **மாண்புமிகு முதல்வரின் அறிவிப்புகள்**

3. தமிழ் வளர்ச்சி இயக்குநரின் நேர்முகக் கடிதம் எண்.ஈ3/393/95, நாள் : 20.1.95

4. அரசாணை(நிலை) எண்.258 தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை, நாள் : 18.10.95

**ஆணை**

தஞ்சாவூரில் 5.1.1995 அன்று நடந்த எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டின் நிறைவு விழாவில் மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் தமிழ் மாநாட்டின் விளைவாக தமிழ் வளர்ச்சிக்கு புதிய பரிமாணத்தையும், உத்வேகத்தையும் ஏற்படுத்தியுள்ளதை நிரந்தரமாக்கிடவும், 'அறிவியலிலும் தமிழ்' 'அனைத்திலும் தமிழ்' என்பதை உணர்த்திடவும் 'இன்றும் தமிழ்' 'என்றும் தமிழ்' என்ற புதிய எழுச்சி முழக்கத்தை அறிவித்தார்கள்.

2. இது தொடர்பாகவும் தலைமைச் செயலகத்தில் தமிழ் ஆட்சிமொழித் திட்டம் செயலாக்கப்படுவதை முறையாக ஆய்வு செய்வதற்கு ஆலோசனை வழங்கும் பொருட்டும் தலைமைச் செயலரைத் தலைவராகக் கொண்ட ஆறு நபர்கள் அடங்கிய உயர்நிலைக் குழு பார்வை 4-இல் கண்ட அரசாணையில் அமைக்கப்பட்டடுள்ளது.

3. தமிழ் வளர்ச்சி இயக்குநர், அரசு செயலகத் துறைகளில் தமிழ் தட்டச்சுப் பொறிகளின் எண்ணிக்கை குறைவாக உள்ளது என்றும், தலைமைச் செயலகத் துறைகள் அனைத்திலும் 50 விழுக்காடுகள் அளவு தமிழ்த் தட்டச்சுப் பொறிகளை வைத்திருக்கலாம் எனவும், இது தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தை மாநிலம் எங்கும் முனைப்புடன் செயல்படுத்த வழிவகுக்கும் என்றும் பரிந்துரைத்துள்ளார். மேலும், மாண்புமிகு முதலமைச்சர் தலைமையில் அனைத்து அரசுச் செயலாளர்கள், துறைத் தலைவர்கள், மாவட்ட ஆட்சித் தலைவர்கள், மாநகராட்சி ஆணையர்கள் தனி அலுவலர்கள், அரசுடைமை நிறுவனங்கள், தன்னாட்சி பல்கலைக் கழகங்கள் மற்றும் வாரியங்கள் ஆகியவற்றின் தலைவர்களைக் கொண்ட கூட்டம் நடத்தி தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தினை விரைவுபடுத்தலாம் எனவும் அரசுக்குப் பரிந்துரை செய்துள்ளார்.

4. தமிழ் வளர்ச்சி இயக்குநரின் பரிந்துரையை ஆய்வு செய்து, மாண்புமிகு முதலமைச்சர் தலைமையில் அனைத்து அரசுச் செயலாளர்களின் கூட்டத்தைக் கூட்டி தமிழ் ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கத்தினை விரைவுபடுத்தவும் மற்றும் தலைமைச் செயலகத்திலுள்ள துறைகளில் தமிழ் தட்டச்சுப் பொறிகளின் எண்ணிக்கையை 65 விழுக்காடாக உயர்த்தியும் அரச ஆணையிடுகிறது.

5. இவ்வாணை நிதித்துறையின் அலுவல் சார்பற்ற எண்.384/ நி.செ/95 நாள்: 27.1.1995இல் பெற்ற இசைவுடன் வெளியிடப்படுகிறது.

(ஆளுநரின் ஆணைப்படி)

நா. ஹரிபாஸ்கர்
அரசு தலைமைச் செயலாளர்

இணைப்பு - 37

Copy of G.O.Ms.No.1134, dated 21.6.1978 from the Education (TN) Department, Government of Tamilnadu.

**ABSTRACT**

Official Language - Introduction of Tamil in Government Offices - Signing of names by Government Servants in Tamil - Notification - Issued.

Read :

1. From the Director of Tamil Development letter No.15887/76/A3, dated 14.10.78.
2. From the Director of Tamil Development letter No.1655/77/A3, dated 15.3.77.
3. From the Director of Tamil Development letter No.1655/77/A3, dated 16.6.77.

The following Notification will be published in the *Tamilnadu Government Gazette*:-

**NOTIFICATION**

In exercise of the powers conferred by section 4 of the Tamilnadu Official Language Act, 1956 (Tamilnadu Act XXXIX of 1956) the Governor of Tamilnadu hereby directs that with effect on and from the 21st June 1978 all Government Servants working under the administrative control of the Government of Tamilnadu shall sign their names only in Tamil

in all case excepting those referred to in para 4 Government Order Miscellaneous No.2070 Education (Tamil Develop ment), dated the 2nd December 1971.

(By order of the Governor)

**G.C. Rangabashyam**
Commissioner & Secretary to Government

**இணைப்பு : 37(அ)**

நகல்:

**தமிழ்நாடு அரசு**

கடித எண்.3911/தவ1-1/97-1
தமிழ்வளர்ச்சி - பண்பாட்டுத்துறை
தலைமைச் செயலகம்
சென்னை-600 009
நாள்:15.4.1997
சித்திரை 2, ஈஸ்வர,
திருவள்ளுர் ஆண்டு 2028.

**அனுப்புநர்**

திரு யா. பொ. ராஜபாண்டியன், எம்.ஏ.,
அரசு துணைச் செயலாளர்.

**பெறுநர்**

அனைத்துத் துறை செயலாளர்கள்.
அனைத்துத் துறைத் தலைவர்கள்.

அன்புடையீர்,

பொருள்: தமிழ் வளர்ச்சி - பெயருக்கு முன் எழுத்தை சரியான தமிழ் எழுத்தைப் பயன்படுத்துதல் தொடர்பாக.

அரசு அலுவலகப் பெயர்ப் பலகையிலும், அரசால் வெளியிடப் படும் அறிவிப்பு, அறிவிக்கை, ஏல விளம்பரம், இதர விளம்பரங்கள் ஆகியவைகளை வெளியிடுகையில் அலுவலர்களின் பெயர்களுக்கு முன்

எழுத்தை ஆங்கில எழுத்தை தமிழில் (எஸ். முத்து) எழுதப்படுகிறது. இதனைத் தவிர்த்துத் சரியான தமிழ் எழுத்தையே (சு. முத்து) பயன்படுத்துமாறும், அவ்வாறே அரசு அலுவலர்கள் கையொப்ப மிடும்போது பெயருக்கு முன் சரியான தமிழ் எழுத்துக்களையே பயன்படுத்திக் கையொப்பமிடுமாறும் தங்களைக் கேட்டுக் கொள்ளப் பணிக்கப்பட்டுள்ளேன்.

தங்கள் உண்மையுள்ள,

(ஓம்)/-

//உண்மை நகல்//

**இணைப்பு : 38**

## தமிழ்நாடு அரசு

**சுருக்கம்**

தமிழ் வளர்ச்சி - அரசு ஊழியர் பெயருக்கு முன், ஊர்/தந்தையின் பெயரின் முதல் எழுத்தினைத் தமிழிலேயே எழுதுதல் - அரசாணை - வெளியிடப்படுகிறது.

தமிழ் வளர்ச்சி-பண்பாடு (மற்றும்) அறநிலையத் (தவ1-1) துறை

அரசாணை (நிலை) எண்:431. நாள்:16.9.1998

திருவள்ளுவராண்டு 2029

வெகுதான்ய, ஆவணி 31.

படிக்க:

1. அரசாணை (நிலை) எண்.1134, கல்வித் (தவ) துறை, நாள்: 21.6.78
2. அரசுக் கடித எண்:39/தவ1-1/97-1, தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறை, நாள்:15.4.1997.

**ஆணை**

தமிழ்நாடு அரசின் நிருவாகக் கட்டுப்பாட்டின்கீழ் பணிபுரியும் அனைத்து அரசுப் பணியாளர்களும் அனைத்து இனங்களிலும் 21.6.1978 முதல் தமிழில் மட்டுமே கையொப்பமிட வேண்டுமென்று ஆணையிடப்பட்டுள்ளது. அரசு அலுவலகப் பெயர்ப்பலகைகளிலும் அரசால் வெளியிடப்படும் அறிவிப்பு, அறிவிக்கை, ஏல விளம்பரம், இதர விளம்பரங்கள் ஆகியவைகளை வெளியிடும்போது அலுவலர்களின் பெயர்களுக்கு முன் அவரது ஊர்/தந்தையின் பெயரில் உள்ள முதல் எழுத்தை எழுதும்போது ஆங்கில எழுத்தினை பயன்படுத்தாமல் சரியான தமிழ் எழுத்தைப் பயன்படுத்துமாறு இதனால் ஆணையிடப்படுகிறது. இது தொடர்பாக வெளியிடப்பட்ட அரசுக் கடிதமும் இணைக்கப்பட்டுள்ளது.

2. இந்த அரசாணை பெறப்படும் நாளிலிருந்து நடைமுறைப்படுத்தப்பட வேண்டும்.

(ஆளுநரின் ஆணைப்படி)

***த.ரா. சீனிவாசன்***
அரசுச் செயலாளர்.

**இணைப்பு - 39**

கல்வித்துறையின் 17.10.73 நாளும் 60999/த/73-5 எண்ணும் பெற்ற அரசுக் குறிப்பாணையின் நகல்.

பொருள் : ஆட்சிமொழி - சட்டம் - தமிழ்த் திட்டம் செயற்படுதல் குறித்த படிவங்கள் - அச்சடித்தல்.

பார்வை : 1.தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கடிதம் ந.க.எண்.16779/73/ஆ3., நாள் 11.7.73

2.அரசு மேற்குறிப்பு எண்.60999/73-1, நாள் 19.7.73.

அரசு அலுவலகங்களில் தமிழ்மொழி ஆட்சிமொழியாகச் செயற்படுவதைப் பற்றிய ஆய்வினை மாவட்ட ஆய்வுத் தனி அலு வலர்கள் மேற்கொள்ளும்போது பெரும்பாலான துறைகளில் எளிதான

படிவங்கள் கூட ஆங்கிலத்திலேயே அச்சடிக்கப்பட்டு பயன்படுத்தப்பட்டு வருவதாகக் கண்டறியப்பட்டுள்ளது பொதுவாக அனைத்துத் துறைகளின் படிவங்களையும் அச்சிடுவதற்கு முன்பு அப்படிவங்களில் சில ஆங்கிலத்தில் அச்சிடப்பட வேண்டியிருப்பின் அவற்றிற்கு தமிழ் வளர்ச்சி இயக்குநரின் இசைவு பெறுதல வேண்டும ஒவ்வொரு துறையில் படிவங்களை அச்சிட எழுதுபொருள் அச்சுத் துறைக்குத தெரிவிக்கும்போது குறிப்பிட்ட படிவங்கள் ஆங்கிலத்தில் அச்சிட தமிழ் வளர்ச்சி இயக்குநரின் இசைவு பெறப்பட்டதென்று சான்றுரையை வழங்க வேண்டும் அதற்கேற்றவாறு எழுதுபொருள் நடைமுறை நூலுக்குத் தக்க திருத்தங்களை போக்குவரத்துத துறைக்கு அனுப்பிவைக்குமாறு எழுதுபொருள அச்சுத்துறை இயக்குநர் கேட்டுக்கொள்ளப்படுகிறார்

**அ. பால்ராசு,**
அரசுத் துணைச் செயலாளர்.

## இணைப்பு - 40

அரசாணை நிலை எண் 2618, கல்வித்துறை, நாள் 30 11 1981, தமிழ்நாடு அரசு

ஆட்சிமொழி - தமிழ் - பதிவேடுகளும படிவங்களும் - தமிழில் அச்சிடல் ஆணை வெளியிடப்படுகிறது.

பார்வை :

1 அரசுக் குறிப்பாணை எண் 60999 / தவ1 / 73-5, நாள். 17 10 73

2 தமிழ் வளர்ச்சி இயக்குநரின் 9.6 80 நாளும் இ2 / 7247 / 80 எண்ணுமிட்ட கடிதம்

**ஆணை** :

அரசுத் துறைகளுக்கு வழங்கப்படும் அனைத்துப் பதிவேடுகளும படிவங்களும எழுதுபொருள் அச்சுத்துறை இயக்குநரால் இனித் தமிழிலேயே அச்சிட்டு வழங்கப்பட வேண்டும் என்றும, படிவங்கள் ஆங்கிலத்தில் அச்சிடப்பட வேண்டியிருப்பின தமிழ் வளர்ச்சி இயக்குநரின் இசைவினைப் பெற வேண்டும் என்றும் பார்வையில் காணும் அரசுக் குறிப்பாணையில் வலியுறுத்தப்பட்டுள்ளது

2 பார்வை இரண்டில் காணும் தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கடிதத்தில் மருத்துவச் செலவினை ஈடுசெய்யும் பதிவேட்டை **(Medical**

**Reimbursement Register)** தற்போது எழுதுபொருள் அச்சுத்துறை இயக்குநர், தமிழ் வளர்ச்சி இயக்குநரின் இசைவினைப் பெறாமல் ஆங்கிலத்தில் அச்சிட்டு, அரசுத் துறைகளுக்கு வழங்கியுள்ளனர் என்றும், இந்நிலை ஆட்சிமொழி செயலாக்கத் திட்டத்திற்கு முரணானதாகும் என்று குறிப்பிட்டு, அரசின் செயலகத் துறைகள் மற்றும் துறைத் தலைமை அலுவலகங்கள் ஆகிய அனைத்திற்கும் தேவைப்படுகின்ற பதிவேடுகள் மற்றும் படிவங்கள் எல்லாவற்றையும் இன்னும் பிறவற்றையும் தமிழில்தான் அச்சிடவேண்டும் என்றும், ஆங்கிலத்தில் அச்சிடும் இன்றியமையாமை இருப்பின் தமிழ் வளர்ச்சி இயக்குநரின் இசைவினைப் பெற்ற பின்னரே அச்சிடவேண்டும் என்றும் தக்கதொரு ஆணையைப் பிறப்பிக்கும்படி தமிழ் வளர்ச்சி இயக்குநர் கோரியுள்ளார்.

3. தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கோரிக்கையினைப் பரிசீலித்து மருத்துவச் செலவினை ஈடுசெய்யக் கோரும் விண்ணப்பப் படிவங்களில் நோய் மற்றும் மருந்துகள் பற்றிய பெயர்களை ஆங்கிலத்திலோ அதை அப்படியே தமிழில் எழுதுவதில் **(Transliteration)** தடையேதுமில்லை என்று முடிவு செய்து அரசு பின்வரும் ஆணையினை வெளியிடுகிறது.

''அரசின் செயலகத் துறைகள் மற்றும் துறைத் தலைமை உள்ளிட்ட அனைத்து அரசு அலுவலகங்களுக்கும் தேவைப்படுகின்ற மருத்துவச் செலவினை ஈடுசெய்யப் பதிவு செய்யும் பதிவேடுகள் மற்றும் விண்ணப்பப் படிவங்கள் உட்பட அனைத்தையும் எழுதுபொருள் அச்சுத் துறை இயக்குநர் இனி தமிழில்தான் அச்சிட்டு வழங்க வேண்டும். ஆங்கிலத்தில் அச்சிடும் இன்றியமையாமை இருப்பின் அதை தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கவனத்திற்குக் கொண்டுவந்து பின் அவரது இசைவினைப் பெற்ற பின்னர் அச்சிட வேண்டும்'' என்பதாகும்.

4. இவ்வாணை போக்குவரத்துத் துறையின் அ.சா.கு. எண். 125 / செயலாளர் / போக்குவரத்து / 81-1, நாள் 18.1.81இல் பெற்ற இசைவுடன் வெளியிடப்படுகிறது.

(ஆளுநரின் ஆணைப்படி)

(ஒம்.) **செ. ராம்தாஸ்,**
ஆணையர் மற்றும் அரசுச் செயலாளர்

இணைப்பு - 41

# GOVERNMENT OF TAMILNADU

## ABSTRACT

Public Servants - Service Records - Recording of entries in Tamil - Orders - Issued.

---

Public (Services-A) Department

G.O.Ms.No.1993 Dated the 28th June, 1971.

Read :

1. G.O.Ms.No.83, Public (General-M), dated 20.1.1961.
2. G.O.Ms.No.1796, Public (T.D.I), dated 27.9.69.
3. G.O.Ms.No.3148, Public (T.D.), dated 27.12.1969.

**ORDER**

In the G.O's cited, orders have been issued to the effect that Tamil should be used in respect of all official communications except the exempted items. Based on these orders, orders relating to postings and transfers, declaration of probation, sanction of increments, earned leave, etc., are now issued in Tamil in Government Offices. A point has now been raised for clarification by the District Educational Officer, Kancheepuram and the Deputy Diretor of Industries and Commerce, Coimbatore whether the entries with reference to the above orders in the service books of the Government Servants should also be made in Tamil or orders should be translated into English and then entered in the Service Books.

2. The Government have examined the matter in detail, in consultation with the Accountant General, it has been decided that the entries in respect of orders relating to postings and transfers, declaration of probation, sanction of increments, earned leave, etc. in the Service Books of the

Government servants may be made in Tamil whenever the relevant orders are issued in Tamil. The Government accordingly direct that the entries in the Service Books of the Government servants be made in Tamil in future wherever the relevant orders are issued in Tamil.

(By order of the Governor)

**P. Sabanayagam,**
Chief Secretary to Government

**இணைப்பு - 42**

**தமிழ் நாடு அரசு**

பொருள்

அலுவலக நடைமுறை - அலுவலக ஆணை, கடிதங்கள் ஏனைய வெளியீடுகள் - கிறிஸ்துவ ஆண்டுக்கு நேரான தமிழ் ஆண்டு, திங்கள், நாள் குறியீடாகப் பயன்படுத்துதல் - ஆணை வெளியிடப்படுகிறது.

---

பணியாளர் மற்றும் நிர்வாகச் சீர்திருத்தத் (பணி-எ) துறை.

அரசு ஆணை நிலை எஸ்.91.

நாள் : 3.2.1981.
தை 21, ரௌத்திரி,
2011 திருவள்ளுவராண்டு.

**ஆணை**

3.5.1980இல் கோயம்புத்தூர் பேரூரில் கூடிய தமிழகப் புலவர் குழு திருவள்ளுவர் ஆண்டையும் தமிழ்த் திங்களையும் நாள் குறியீடாக அரசு அலுவல்களில் நடைமுறையிற் கொள்ளுமாறு ஒருமனதாகத் தீர்மானம் இயற்றி அதன் மீது நடவடிக்கை எடுக்குமாறு தமிழக அரசை வேண்டியுள்ளது.

2. தமிழகப் புலவர் குழுவின் இத்தீர்மானத்தை அரசு தீவிரமாகப் பரிசீலனை செய்தது. மத்திய அரசு வெளியிடும் கடிதங்களில் கிறிஸ்துவ ஆண்டுக்கு நேரான தேவநாகரி ஆண்டு, திங்கள், நாள் குறியீடாகப் பயன்படுத்தி வருகின்றனர். மேற்கண்ட முறையைப் பின்பற்றும் வகையில், தமிழக அரசு வெளியிடும் அனைத்து அலுவலக ஆணை, கடிதங்கள், செய்தி மற்றும் ஏனைய வெளியீடுகளிலும் இது முதற்கொண்டு கிறிஸ்துவ ஆண்டுடன் தமிழ் ஆண்டு, திங்கள், நாள் மற்றும் திரு

வள்ளுவர் ஆண்டையும் பயன்படுத்த வேண்டுமென அறிவுறுத் தப்படுகிறது.

3. தலைமைத் துறைத் தலைவர்கள் தம் கீழ் பணியாற்றும் அனைத்து அலுவலகங்களிலும் மேற்கண்ட ஆணையைப் பின்பற்றும்படி வலியுறுத்துமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

(ஆளுநரின் ஆணைப்படி)

ஒம்/- **வே. கார்த்திகேயன்,**
தலைமைச் செயலாளர்.

**இணைப்பு - 43**

## தமிழ்நாடு அரசு

சுருக்கம்

எழுதுபொருள் அச்சுத் துறை - எழுதுபொருள் - இரப்பர் முத்திரைகள் - அலுவலக முத்திரைகள் - ஆங்கில எழுத்துக்களுக்குப் பதிலாக தமிழில் திங்களின் முன்னெழுத்துக்களைப் பொறித்தல் - அரசாணை வெளியிடப்படுகிறது.

---

போக்குவரத்துத் துறை

அரசாணை நிலை எண் 175 நாள் 27.3.1973

பார்வை : தமிழ் வளர்ச்சி இயக்குநரின் 20.2.73 நாளிடப்பெற்ற கடிதம் எண் ஆ4/25972/72.

**ஆணை**

எழுதுபொருள் அச்சுத் துறை பல்வேறு அலுவலகங்களுக்குத் தயாரித்து வழங்கும் அலுவலக முத்திரைகளில் அலுவலகங்களின் பெயர்கள் தமிழில் பொறிக்கப் பெற்றிருப்பினும், அவற்றில் உள்ள திங்கள்களின் முன்னெழுத்துக்கள் ஆங்கில எழுத்துக்களிலேயே பொறிக்கப் பெற்று வருகின்றன. அதாவது '5 சன 1972' எனப்படுவது 5 Jan 1972 என்றும் '7 பிப் 1972' எனப்படுவது 7 Feb. 1972 என்றும் இவை போன்றே பிற திங்கள்களின் பெயர்களும் பொறிக்கப் பெறுகின்றன எனவே முத்திரைகளில் பயன்படுத்துவதற்கு (ஆங்கிலத் திங்கள்களின் முன்னெழுத்துக்கள்) தமிழில் பொறிக்கப் பெற்றுள்ள தேதிக் கூடுகளை எழுதுபொருள் அச்சுத் துறை இயக்குநர் வெளியில் வாங்குவதற்கு ஆணை பிறப்பிக்குமாறு தமிழ் வளர்ச்சி இயக்குநர் கேட்டுக் கொண்டுள்ளார்.

2. அரசு பரிந்துரையை ஏற்றுக் கொண்டு, தமிழில் உள்ள அலுவலக முத்திரைகளில் ஆங்கிலத் திங்கள்களின் முன்னெழுத்துக்கள் தமிழிலேயே பொறிக்கப்பட வேண்டும் என்று ஆணை இடுகிறது. அதற்குத் தேவையான தேதிக் கூடுகளை வெளி அங்காடிகளிலிருந்து வாங்குவதற்கு, எழுதுபொருள் அச்சுத் துறை இயக்குநருக்கு அரசு அனுமதி அளிக்கிறது.

(ஆளுநர் உத்தரவுப் படி)

**எம்.எம். ரமேஷ்**
அரசு இணைச் செயலாளர்.

**இணைப்பு - 44**

## தமிழ்நாடு அரசு

சுருக்கம்

கல்வி - தமிழ் வளர்ச்சி - தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் - பெரியார் ஈ. வெ. இராமசாமி நூற்றாண்டு விழா - பெரியார் மேற்கொண்ட தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தை ஏற்றுக் கொள்ளல் - ஆணை வெளியிடப்படுகிறது.

---

கல்வித் துறை

அரசாணை நிலை எண் 1875 நாள் : 19.10.1978.

பார்வை :

1. செய்தி - மக்கள் தொடர்புத் துறை நேர்முக கடிதம் எண் 40880/78, நாள் 17.8.78.
2. தமிழ் வளர்ச்சி இயக்குநர் கடிதம் எண் 9843/78/ஆ2, நாள் 28.9.78.

**ஆணை**

தமிழ்மொழி எழுத்துத் தொகுதி எளிதில் கையாள முடியாதபடி அதிகமாகவுள்ளதால், அச்சிடுதல், தட்டச்சு செய்தல் போன்றவற்றில் அதிக நேரம் செலவிடப்படுவதைத் தவிர்க்கும் வகையில் தமிழ் எழுத்துத் தொகுதிகளில் சீர்திருத்தம் தேவை என பெரியார் ஈ.வெ.இராமசாமி தமது வாழ்நாளில் தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தைக் கையாண்டு வந்ததுடன் அதனை அனைத்துத் துறைகளிலும் நடைமுறைப்படுத்த வேண்டுமென்று மிகவும் வலியுறுத்தி வந்தார். பெரியார் மேற்கொண்ட தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தை தமிழக அரசு ஏற்று அதனை நடைமுறைப்படுத்த தக்க ஆணை வெளியிட வேண்டி பெரியார் நூற்றாண்டு விழாக் குழுவினர் அரசைக் கேட்டுக் கொண்டனர். 18.9.78 அன்று ஈரோட்டில் பெரியார்

நூற்றாண்டு விழாவினைத் தொடங்கி வைத்து தமிழக முதல்வர் அவர்கள், பெரியார் ஈ.வெ.ராமசாமி அவர்கள் மேற்கொண்ட தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தை தமிழக அரசு செயற்படுத்துமென அறிவித்தார். தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநரும் பெரியார் மேற்கொண்ட தமிழ் எழுத்துச் சீர்திருத்தங்களை உடனடியாக நடைமுறைக்குக் கொண்டுவர தக்க நடிவடிக்கை எடுக்க வேண்டிப் பரிந்துரை செய்துள்ளார்.

2. மேலே கூறிய தமிழக முதல்வர் அறிவிப்பிற்கிணங்கவும், தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநரின் பரிந்துரையை ஏற்றும் அரசு இவ்வாணையின் இணைப்பில் கண்டுள்ளவாறு சீர்திருந்திய தமிழ் எழுத்துக்களை உடனடியாக மேற்கொள்ள வேண்டுமென ஆணை பிறப்பிக்கின்றது. இச்சீர்திருந்திய தமிழ் எழுத்து வடிவங்கள், அனைத்து அரசு அலுவலகங்களிலும், பள்ளிகள் மற்றும் கல்லூரிகளிலும் உள் ளாட்சித் துறை வரம்பிற்குட்பட்ட நகராட்சி, மாநகராட்சி, ஊராட்சி ஒன்றியங்களிலும் , தமிழக அரசின் வரம்பிற்குட்பட்ட வாரியங்கள், கழகங்கள், நிறுவனங்களிலும் பின்பற்றப்பட வேண்டும்.

3. தமிழ் மொழியில் வெளிவரும் நாளிதழ்களும், பருவ ஏடுகளும், தமிழ் புத்தகம் வெளியிடுபவர்கள், அச்சிடுபவர்களும் இவ்வாணையில் சொல்லப்பட்ட சீர்திருந்திய தமிழ் எழுத்து வடிவங்களைக் கையாள வேண்டுமென அரசு பரிந்துரை செய்கின்றது.

4. எழுதுபொருள் அச்சுத் துறை இயக்குநர், தமிழக அரசு வெளியீடுகளிலும், அரசிதழ்களிலும் மற்றும் தமிழில் அச்சிடப்படும் எல்லா இதழ்களிலும் சீர்திருந்திய எழுத்து வடிவங்களை உடனடியாகக் கையாள வேண்டுமென பணிக்கப்படுகின்றார்.

5. இச்சீர்திருந்திய எழுத்து வடிவங்களுக்குத் தக்க முறையில் விரிவான விளம்பரத்தைச் செய்து, இதனை நடைமுறைப்படுத்த நடிவடிக்கை எடுக்கத் தமிழக அரசு செய்தி மக்கள் தொடர்புத் துறை இயக்குநர் கோரப்படுகின்றார். மேலும், இத்திட்டத்தைப் பற்றிய விளம்பரங்கள் அனைத்து நாளிதழ்களிலும் வெளியிட ஏற்பாடு செய்யும் படி கேட்டுக் கொள்ளப்படுகிறார். தமிழக அரசின் சார்பில் வெளி யிடப்படும் அனைத்து விளம்பரங்களிலும் உடனடியாக சீர்திருந்திய தமிழ் எழுத்து வடிவங்களைக் கையாள வேண்டுமெனவும் அவர் பணிக்கப்படுகின்றார்.

(ஆளுநரின் ஆணைப்படி)

**ஜி.சி. ரெங்கபாஷ்யம்,**
ஆணையர் மற்றும் அரசுச் செயலர்.

## இணைப்பு

| நடைமுறையிலுள்ள எழுத்துக்கள் | | சீர்திருந்திய எழுத்துக்கள் |
|---|---|---|
| ஐ | .. | அய் |
| ஔ | .. | அவ் |
| னு | .. | னா |
| ரு | .. | றா |
| ணு | .. | ணா |
| ைண | .. | ணை |
| ைல | .. | லை |
| ைள | .. | ளை |
| ைன | .. | னை |
| ெணு | .. | ணொ |
| ெனு | .. | னொ |
| றெ | .. | றொ |
| ளே | .. | ளோ |
| றே | .. | றோ |
| ேனு | .. | னோ |

## இணைப்பு - 45

23.5.1979 நாளும் 4704/த1/79-2 எண்ணும் பெற்ற குறிபாணை ஆணையாளர் மற்றும் அரசுச் செயலாளர், கல்வித் துறை, சென்னை -9 அவர்களிடமிருந்து தமிழ் வளர்ச்சி இயக்குநர், சென்னை -1-க்கு வந்ததின் நகல்.

பொருள் : தமிழ் வளர்ச்சி - தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் பெரியார் ஈ.வெ.இராமசாமி நூற்றாண்டு விழா-பெரியார் மேற்கொண்ட தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தை ஏற்றுக் கொள்ளல் -திருத்தம் வெளியிடப்படுகிறது.

பார்வை: 1. அரசாணை நிலை எண் 1875, கல்வித் துறை, நாள் 19.10.1979.

2. தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கடிதம் எண் ஆ2/9843/78, நாள் 15.2.1979.

தமிழ்மொழி எழுத்துத் தொகுதியில் சில சீர்திருத்தங்கள் செய்து பார்வையில் கண்ட அரசாணையில் ஆணை வெளியிடப்பட்டுள்ளது. அவ்வாணையின்படி ஐ என்பது அய் என்றும் ஔ என்பது அவ் என்றும் மாற்றப்பட்டுள்ளது. ஆனால் ஐ, ஔ என ஏற்கனவே இருந்த உயிரெழுத்துக்களின் வடிவங்கள் வழக்கிலிருந்து கைவிடப்பட வேண்டியதில்லை என அரசு இப்போது கருதுகிறது.

2. அதன்படி பார்வையில் கண்ட ஆணைக்கு திருத்தம் வெளியிடும் வகையில் ஏற்கனவே வழக்கில் இருந்த ஐ, ஔ ஆகிய உயிரெழுத்துக்களின் வடிவங்கள் கைவிடப்படாமல் முன்பு போலவே தொடர்ந்து நடைமுறை வழக்கில் இருந்துவரும் என இதன்மூலம் அரசு ஆணை பிறப்பிக்கின்றது.

**இ.சி.பி.பிரபாகர்**
ஆணையர் மற்றும் அரசுச் செயலாளர்.

**இணைப்பு - 46**

## தமிழ்நாடு அரசு

பொருட் சுருக்கம்

தமிழ் - ஆட்சிமொழிச் சட்டம், 1956 - ஆட்சிமொழிச் சட்டத்தினை நடைமுறைப்படுத்தாத அரசு அலுவலர்கள் மீது நடவடிக்கை எடுத்தல் பற்றி ஆணை பிறப்பிக்கப்படுகிறது.

கல்வித் துறை

அரசாணை நிலை எண் 24 நாள் 6.1.1982.

பார்வை:

1. கல்வித் துறை அ.சா.கு.எண்9145/எப்1/79, நாள் 2.4.79.
2. தமிழ் வளர்ச்சி இயக்குநரின் நேர்முகக் கடித எண் 5/7820/79, நாள் 31.10.79.
3. தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கடிதம் ந.க. எண்இ2/5438/80, நாள் 3.5.80.

**ஆணை**

தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தினைச் சரிவர

நடைமுறைப்படுத்தாத அலுவலர்கள்மீது எந்தெந்த முறைகளில் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கலாம் என்பது பற்றி தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கருத்துக் கேட்கப்பெற்றது. தமிழ் வளர்ச்சி இயக்குநர் அனுப்பியுள்ள கருத்துரையில் தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தினை சரிவர நடைமுறைப்படுத்தாத அரசு அலுவலர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுப்பதற்கு, 1956ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்டுள்ள தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தில் வழிவகைகள் ஏதும் செய்யப்பட வில்லையாதலாலும் பிற மாநிலங்களில் ஆட்சிமொழித் திட்டத்தினைச் செயற்படுத்தாத அரசு அலுவலர்கள், பணியாளர்கள் மீது எடுக்கப்படும் ஒழுங்கு நடிவடிக்கைகளைக் கருத்திற்கொண்டு 1956ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்திற்குத் தக்க திருத்தங்கள் வெளியிடுவதைவிட நடைமுறையிலுள்ள தமிழ்நாடு குடிமுறைப் பணியாளர் (வகைப்பாடு, கட்டுப்பாடு, மேல்முறையீடு) விதிகளின் கீழ் தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தை சரிவர நிறைவேற்றாத அரசு அலுவலர்கள் மற்றும் பணியாளர்கள்மீது நடவடிக்கை எடுக்க அரசாணை வெளியிடலாம் என்று பரிந்துரை செய்திருந்தார்.

2.தமிழ் வளர்ச்சி இயக்குநர் அவர்களின் இக்கருத்தினை அரசு கவனமாக ஆய்ந்து பின்வரும் முறை சிறந்ததெனக் கருதி அதன்படி நடவடிக்கை மேற்கொள்ளுமாறு ஆணையிடப்படுகிறது.

3. சார்நிலை அலுவலர்களின் ஆட்சிமொழித் திட்டம் செம்மையாக அமுல் செய்யப்படாவிடில் அதைத் துறைத் தலைவர்களின் கவனத்திற்கு இயக்குநர் கொண்டு வரலாம். நிலைமையைப் பரிசீலித்து உரிய நடிவடிக்கை எடுக்கும் பொறுப்பு துறைத் தலைவர்களைச் சாரவேண்டும். துறைத் தலைவர்கள் அலுவலகங்களில் இத்திட்டத்தின் நிலைமை திருப்திகரமாக இல்லாவிடில் அதை இயக்குநர் தலைமைச் செயலகத்தில் உள்ள துறைச் செயலாளர்களின் கவனத்திற்குக் கொண்டுவர வேண்டும். உரிய நடிவடிக்கை எடுக்கும் பொறுப்பு செயலாளர்களைச் சாரும். இவ்வாறு முறை வகுப்பதுதான் உசிதமென்று அரசு கருதுகிறது. ஆட்சிமொழித் திட்டத்தில் அரசுக்குள்ள முனைப்பான நாட்டத்தை அதிகாரிகளுக்கு மீண்டும் வலியுறுத்தப்படுகிறது. அதில் அவர்கள் பொறுப்பை வலியுறுத்தும் வகையில் ஆணை வெளியிடப் படுகிறது. தலைமைச் செயலகத் துறைகளும், மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களிலும் இதில் முன் மாதிரியாக விளங்குவதே இத்திட்டம் கீழ் மட்டத்தில் பரவலாகவும், வெற்றிகரமாகவும் நடப்பதை உறு திப்படுத்தும்.

(ஆளுநரின் ஆணைப்படி)

**செ.ராம்தாஸ்,**
ஆணையர் மற்றும் அரசுச் செயலர்.

இணைப்பு - 46(அ)

# தமிழ் நாடு அரசு

சுருக்கம்

ஆட்சிமொழி- மாவட்டந்தோறும் ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் நடத்துதல் - முதல் கட்டமாக கோவையில் நடத்தச் செலவினம் ஒப்பளிப்பு - ஆணை வெளியிடுதல்

---

கல்வி அறிவியல் மற்றும தொழிலநுட்பவியல் துறை

அரசாணை நிலை எண் 34	நாள் 11 1 84
மார்கழி 27, ருதரோத்காரி
திருவளளுவா ஆண்டு, 2014

பார்வை

1 தமிழ் வளாச்சி இயக்குநர் கடிதம் ந க.எண் இ2/12755/83, நாள் 29 10 83

**ஆணை**

தமிழ ஆட்சி மொழித் திட்டம் அனைத்துத் துறைகளிலும் முழு அளவில் தற்போது செயல்படுத்தப்பட்டு வருகின்றது எனவும், இதற்குத் துணை செய்யும் வகையில் மாவட்டந்தோறும ஆடசிமொழிக் கருத்தரங்குகள் நடததலாம் என்று எண்ணுவதாகவும், ஒரு நாள் முழுவதும நடத்தப் பெறவிருக்கும் அக்கருததரஙகில் காலையில் அனைதது மாவட்ட நிலை அலுவலர்களின் கலநதுரையாடல ஏறபாடு செய்யப்பெறலாம எனவும், அககூட்டததில் ஒவ்வொரு துறைகளிலும் ஆடசிமொழித திட்ட நிறைவேறறத்தில் ஏற்படும் இடாபாடுகள், குறைகள் இவற்றினைக் கலந்தாய்வு செய்து இவற்றைக களையத் தேவையான வழிவகைகள் காணலாம் எனவும், இக்கலந்துரையாடலுககு மாவட்ட ஆட்சியாளரைத் தலைமை தாங்குமாறு மாணபுமிகு கல்வி அமைச்சா பெருமக்களின தலைமையில் ஆட்சி மொழித் தொடாபாக பல தலைப்புகளில் பேசுமாறு மூவரை அழைக்கலாம எனவும, இததகைய மாவட்ட நிலை கருத்தரங்குகள பலவகைகளிலும் தமிழத்திடட நிறைவேற்றத்துக்கு உறுதுணையாக அமையும் எனவும, முதல கருததரங்கினை கோவையில மாண்புமிகு கல்வி அமைச்சர் அவர்கள தலைமையில் நடத்தலாமென எண்ணியுள்ளதாகவும் இக்கருததரங்கிற்குத தோராயமாக ரூ 2500/-(ரூபாய் இரண்டாயிரத்து ஐநூறு) செலவு ஆகும் எனவும், இரண்டாம், மூன்றாம், நான்காம கருத்தரங்குகளை முறையே சேலம்,தருமபுரி, பெரியார் மாவடடங்களில நடததிட ஏறபாடுகள் செய்துள்ளதாகவும, 1984-85ஆம் நிதிஆண்டில் மற்ற மாவட்டங்களிலும்

தொடர்ந்து கருத்தரங்கு நடைபெறும் எனவும் , நான்கு மாவட்டக் கருத்தரங்கினையும் நடத்திட ரூ.10,000/- வழங்குமாறும் முதல் மாவட்டக் கருத்திரங்கினை கோயம்புத்தூரில் மாண்புமிகு கல்வி அமைச்சர் அவர்கள் தலைமையில் நடத்த உள்ளதால் தனிநேர்வாகக் கருதிச் செலவுத் தொகைக்கு ஒப்புதல் அளிக்குமாறு தமிழ் வளர்ச்சி இயக்குநர் கோரியுள்ளார்.

2.அரசு அலுவலகங்களில் எல்லா கடிதப் போக்குவரத்துகளும், கோப்புகளும் தமிழிலேயே இருக்க வேண்டும் என்னும் கருத்தினை அரசு பல தடவைகளில் வலியுறுத்தி உள்ளது. இக்கருத்தினை விரை வினில் செயலாக்க இம்மாதியான கருத்தரங்குகளும், அவற்றில் அமைச்சர்களின் பங்கேற்பும் மற்றும் அறிவுரைகளும் மிகவும் உதவியாய் இருக்கும் என அரசு கருதுகிறது.

3. ஆகவே தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கருத்தினை அரசு ஏற்று முதல் கட்டமாக கோவையில் நடத்துவதற்கு உத்தேசித்துள்ள கருத்தரங்கிற்கு இணைப்பில் உள்ளவாறு செலவு ரூ.2500/-க்கு அரசு ஒப்புதல் அளிக்கிறது.

4.மேலே பத்தி 3இல் ஒப்பளிப்புச் செய்யப்பட்ட செலவினம் கீழ்க்காணும் கணக்குத் தலைப்பில் பற்று வைக்கப்படும்.

277-கல்வி-சி. சிறப்புக் கல்வி-ஏஎப். தமிழ் மொழி இலக்கிய மேம்பாடு ஐ-திட்டத்தில் சேராதது -ஏஏ தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் அலுவலகம்-26. ஏனைய செலவுகள் (தகவல் தொகுப்புக் குறியீடு எண். 277சி-ஏஎப் ஏஏ 2608)

5. இவ்வாணை நிதித் துறையின் 2.1.84 நாளிட்ட 144488–/கல்வி/ 83-1, அ.சா.கு. எண்ணில் பெற்ற இசைவுடன் வெளியிடப்படுகிறது.

(ஆளுநரின் ஆணைப்படி)

**தி.து.சுந்தர்ராஜ்,**
ஆணையர் மற்றும் அரசுச் செயலாளர்.

**இணைப்பு - 47**

தமிழ்நாடு ஆட்சிமொழிக் குழு அலுவலகம், சென்னை - 9.

அனுப்புவோர்

திரு.கொ.நீ. சிங்காரவேலு, எம்.ஏ.,
செயலாளர்,
ஆட்சிமொழிக் குழு, சென்னை - 9.

பெறுநர்

எல்லாத் துறைத் தலைவர்கள்
மாவட்ட ஆட்சித் தலைவர்கள்

ந.க. எண். 5131 / 67 - ஈ, நாள் 19.9.67.
சுற்றறிக்கை எண். 91.

ஐயா,

பொருள் : ஆட்சிமொழி - தமிழ் - அரசாங்க அலுவலகங்களில் பெயர்ப் பலகைகள் - தமிழில் எழுதிப் பொருத்துதல் பற்றியது.

ஆட்சி மொழிக் குழுத் தனி அலுவலர் (ஆய்வு) அவர்களும் செயலாளர் அவர்களும் அலுவலகங்களை ஆய்வு செய்கையில், பல அலுவலகங்களில் பெயர்ப்பலகைகள் ஆங்கிலத்திலேயே எழுதிப் பொருத்தப்பட்டுள்ளதைக் கண்டு அவ்வப்போது அப்பெயர்ப் பலகைகள் தமிழிலும் எழுதிப் பொருத்தப்பட வேண்டுமென்று அவ்வலுவலகத் தலைவர்களைக் கேட்டுக் கொண்டுள்ளனர். எல்லா அலுவலகங்களிலும் பெயர்ப் பலகைகள் நல்ல தமிழிலும் அதனடியில் ஆங்கிலத்திலும் எழுதிப் பொருத்தப்பட வேண்டும். இதன் தொடர்பாக, துறைத் தலைவர்களும் மாவட்ட ஆட்சித் தலைவர்களும் தங்கள் அலுவலகங்களிலும் தங்கள் சார்நிலை அலுவலகங்களிலும் உடனடியாக நடவடிக்கை எடுத்துக் கொள்ளுமாறு ஆட்சிமொழிக் குழு கேட்டுக் கொள்கிறது.

2. இக்கடிதம் பெற்றுக் கொண்டமை பற்றியும் இது குறித்துத் தாங்கள் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் பற்றியும் இவ்வலுவலகத்திற்குத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள,

**கொ. நீ. சிங்காரவேலு**
செயலாளர்

**இணைப்பு - 48**

## தமிழ்நாடு அரசு

பொருட் சுருக்கம்

தமிழ் வளர்ச்சி - அரசு அலுவலகங்களில் பெயர்ப்பலகைகள் அமைத்தல்- எழுத்து உருவங்களின் அமைப்பு குறித்து ஆணை வெளியிடப்படுகிறது.

---

தமிழ் வளர்ச்சி- பண்பாட்டுத் துறை

அதரசாணை (நிலை) எண். 349 நாள் : 14.10.87

திருவள்ளுவராண்டு 2018

பிரபவ, புரட்டாசி 28

படிக்க:

1) அரசாணை (நிலை) எண்.1541, தொழிலாளர் மற்றும் வேலைவாய்ப்புத் துறை, நாள் 29.7.82.

2) தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கடிதம் எண். இ5/502/83, நாள் :7.8.84.

**ஆணை**

ஆட்சிமொழிக் குழுச் செயலாளரின் 19.9.67ஆம் நாள் சுற்றறிக்கை எண்.5131/67இல், அரசு அலுவலகங்களில் அவற்றின் பெயர்ப் பலகைகள் அனைத்தும் நல்ல தமிழிலும் அதனடியில் ஆங்கிலத்திலும் எழுதிப் பொருத்தப்பெற வேண்டுமென்று தெரி விக்கப்பட்டுள்ளது, மேலும் தொழிலாளர் மற்றும் வேலைவாய்ப்புத் துறையின் 29.7.82ஆம் நாளிட்ட அரசாணை எண்.1541இல் கடைகள் மற்றும் நிறுவனங்களின் பெயர்ப் பலகைகள் தமிழில் இருக்க வெண்டுமெனவும், இதர மொழிகளையும் பெயர்ப் பலகைகளில் பயன்படுத்தப்பட வேண்டியிருந்தால் முதலில் தமிழிலும் அதன் கீழ் இரண்டாவதாக ஆங்கிலத்திலும் அதனைத் தொடர்ந்து இதர மொழி களிலும் முறையே 5:3:2 என்ற விகிதத்தில் அமையலாமெனவும் ஆணையிடப்பட்டுள்ளது.

2.மேலே பத்தி 1இல் தெரிவிக்கப்பட்டுள்ள கருத்துக்களின் அடிப்படையில், அரசின் துறைத் தலைமை மற்றும் மாவட்ட அலுவலகங்களின், பெயர்ப்பலகைகள் அளவுகளில் வேறுபட்டாலும், அதில் எழுதப்படும் எழுத்துக்களின் அளவு தமிழிலும் ஆங்கிலத்திலும் முறையே 5:3 என்ற விகிதத்தில் அமையலாமெனவும் மற்றும் அரசு துறைத் தலைமை மற்றும் மாவட்ட அலுவலகங்களைத் தவிர்த்து பிற அலுவலகங்களில் பெயர்ப் பலகைகளைத் தமிழில் மட்டும் அமைத்தல்

போதுமானது எனவும், மேலே பார்வை 2இல் கண்ட கடிதத்தில் தமிழ் வளர்ச்சி இயக்குநர் அரசுக்குப் பரிந்துரைத்துள்ளார்.

3.தமிழ் வளர்ச்சி இயக்குநரின் பரிந்துரையை ஏற்று, அவ்வாறே அரசின் துறைத் தலைமை மற்றும் மாவட்ட அலுவலகங்களில் பெயர்ப் பலகைகள் அளவுகளில் வேறுபட்டாலும் அவற்றிலுள்ள எழுத்துக்களின் அளவு தமிழிலும்ஆங்கிலத்திலும் முறையே 5:3 என்ற விகிதத்தில் அமைய வேண்டுமெனவும், அரசு துறைத் தலைமை மற்றும் மாவட்ட அலுவலகங்களைத் தவிர பிற அலுவலகங்களில் பெயர்ப் பலகைகள் தமிழில் மட்டும் அமைத்தால் போதுமானதெனவும் அரசு ஆணையிடுகிறது.

(ஆளுநரின் ஆணைப்படி)

**ஔவை நடராசன்,**
அரசுச் செயலாளர்

**இணைப்பு - 49**

## தமிழ் நாடு அரசு

சுருக்கம்

சாலைகள் - தெருக்கள் பெயரிடுதல் - தமிழ் வளர்ச்சி இயக்குநரின் அறிவுரை பெறுதல் - ஆணை மாற்றம் - வெளியிடப்படுகிறது.

---

ஊர் வளர்ச்சி மற்றும் உள்ளாட்சித் துறை

அரசாணை (நிலை) எண் 117 நாள் 29 சனவரி 1982.

பார்வை :

1) அரசாணை(நிலை) எண் 971, (ஊ.வ.ஊ.து.) நாள் 27.5.81.
2) தமிழ் வளர்ச்சி இயக்குநரின் 4.11.81 மற்றும் 7.12.81 நாளிட்ட கடித எண் இ3/10736/81.

**ஆணை**

பார்வை ஒன்றில் கண்டுள்ள அரசாணையில் சாலைகள்/ தெருக்கள் பெயர்களை தமிழாக்கம் செய்யும்போதும் சாலைகளுக்குப் புதிய தமிழ்ப்பெயர்கள் சூட்டும்போதும் தேவை ஏற்பட்டால் தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கருத்தை பெற்று பிறகு முடிவு செய்யுமாறு எல்லா உள்ளாட்சிகளும் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளார்கள்.

2. மேற்காணும் அரசாணையில் மூலம் நடைமுறையில் கருதப்படும் பயன் விளையாது எனவும், அது ஆணை அளவிலேயே

நின்றுவிடும் எனவும், தமிழ் வளர்ச்சி இயக்ககத்தில் காலத்தாழ்வு ஏற்படுவதற்கு வாய்ப்பில்லை ஆதலால், தமிழ் வளர்ச்சி இயக்ககத்தை கலந்து சாலைகளுக்குத் தமிழ்ப் பெயர் சூட்டவேண்டும் என்ற அடிப்படையில் அரசாணையில் அமைந்த தேவை ஏற்பட்டால் எனும் சொற்றொடரையும் தேவை ஏற்படின் என்ற சொற்றொடரையும் நீக்கும் முறையில் அரசாணைக்கு தக்க திருத்தங்கள் வெளியிட தமிழ் வளர்ச்சி இயக்குநர் அரசை கேட்டுக் கொண்டுள்ளார்.

3. மேலே சொன்ன தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கருத்தை ஆராய்ந்து அதை அரசு ஏற்கிறது. பார்வை 1-இல் கண்டுள்ள அரசாணை கீழே குறிப்பிட்டுள்ளவாறு மாற்று ஆணை இடப்படுகிறது.

4. சாலைகள்/தெருக்கள் பெயர்களை தமிழாக்கம் செய்யும் போதும் சாலைகளுக்குப் புதிய பெயர்கள் சூட்டும்போதும் அப்புதிய பெயர்கள் அரசால் ஒப்புதல் பெற்றபின், தமிழ்ப் பெயர்ப் பலகைகள் வைப்பதற்கு முன் தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கருத்தை பெற்று அவரால் தமிழாக்கம் செய்யப்பட்ட பெயர் கொண்ட பலகைகள் வைக்குமாறு தன் பொறுப்பிலுள்ள அனைத்து உள்ளாட்சிகளுக்கும் தக்க அறிவுரை வழங்கும்படி நகராட்சிகளின் நிர்வாக இயக்குநரும், ஊரக வளர்ச்சி இயக்குநரும், பேரூராட்சி இயக்குநரும் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். அவ்வாறே தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கருத்தைப் பெற்ற பிறகு சாலைகளின் தமிழ் பெயர்ப் பலகைகள் வைக்குமாறு சென்னை மாநகராட்சிஆணையாளரும், மதுரை மாநகராட்சி ஆணையாளரும், கோவை மாநகராட்சி ஆணையாளரும் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

(ஆளுநரின் ஆணைப்படி)

**எச்.பி.என். ஷெட்டி,**
அரசு ஆணையர் மற்றும் செயலர்.

**இணைப்பு - 50**

# தமிழ்நாடு அரசு

## சுருக்கம்

**தமிழ் வளர்ச்சி - அரசு நிலையிலும், துறைத்தலைவர்கள் மற்றும் மாவட்ட அலுவலர்கள் நிலையிலும் அனுப்பப்படும் தொலைவரிச் செய்திகள் தமிழில் அனுப்பப்பட வேண்டுமென அரசு ஆணை வெளியிடப்படுகிறது.**

தமிழ் வளர்ச்சி - பண்பாட்டு (த.வ.1.2.)த் துறை

அரசாணை (நிலை) எண். 161

நாள் : 12.8.96
திருவள்ளுவராண்டு 2027
தாது - ஆடி - 28

படிக்க

1. தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம், திருச்சிராப்பள்ளி மனு, நாள் : 11.4.94.
2. தமிழ் வளர்ச்சி இயக்குநரின் கடிதம் எண். ந.க. ஆ2 / 8872 / 94, நாள் : 4.8.94.

**ஆணை**

தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றச் செயலர் அவர்கள் தந்திப் போக்குவரத்து தமிழிலேயே நடைபெறும் முறைக்குச் செயல்வடிவம் தருகின்ற வகையில் அனைத்துத் துறைத் தலைவர்களுக்கும் தமிழக மக்கள் அனைவரும் தமிழ் மொழியிலேயே தந்தி அனுப்புவதை வழக்கமாகப் பின்பற்ற வேண்டும் என்றும், மாநில அரசு நிர்வாகத்திலும் நடைமுறைப்படுத்த மாவட்ட ஆட்சியர்கள் உட்பட அனைவருக்கும் ஆணைகள் பிறப்பிக்கப்பட வேண்டும் என்று அரசை வேண்டியுள்ளார்.

2. தமிழ்நாடு கலை இலக்கிய பெருமன்றச் செயலர் அவர்களின் கோரிக்கையினை அரசு மிகவும் கவனமாகப் பரிசீலித்து மைய அரசின் தொலைத் தொடர்புத் தகவல் துறைப் பொது மேலாளர் தமிழக அரசு அலுவலகங்களில் தமிழில் தொலைவரிச் செய்திகளை வெளியிடுவதற்கு ஏதுவாக பாண்டிச்சேரி உட்பட தமிழகத்தில் பல பகுதிகளில் உள்ள இடங்களில் தொலைவரிச் செய்தி அலுவலகங்கள் செயல்படுகின்றன என்று தெரிவித்துள்ளதால் தலைமைச் செயலகத்தின் அனைத்து நிருவாகத் துறைகள் மற்றும் அத்துறைகளின் கீழ் இயங்கும் துறைத் தலைவர்கள் இணைப்பில் உள்ள இடங்களில் தமிழில் தொலைவரிச் செய்தி அலுவலகங்கள் தோற்றுவிக்கப்பட்ட நிலையில் தொலைவரிச் செய்திகள் அனைத்தும் தமிழில்தான் அனுப்பப்பட வேண்டுமென அரசு ஆணையிடுகிறது. அதற்கொப்ப, துறைத் தலைவர்கள் தம் கட்டுப்பாட்டில் இயங்கும் அலுவலகங்களுக்குத் தேவையான அறிவுரைகளை வழங்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

(ஆளுநரின் ஆணைப்படி)

**வை. பழனிசாமி**
அரசு செயலாளர்

இணைப்பு

## தமிழில் தந்தி அனுப்பும் அலுவலகம் தோற்றுவிக்கப்பட்டுள்ள இடங்கள்

1. மையத் தந்தி அனுப்பு அலுவலகம், சென்னை - 1.
2. தந்தி அனுப்பு அலுவலகம், அண்ணா சாலை.
3. தந்தி அனுப்பு அலுவலகம், மாம்பலம்.
4. தந்தி அனுப்பு அலுவலகம், மைலாப்பூர்.
5. தந்தி அனுப்பு அலுவலகம், எத்திராஜ் சாலை.
6. மையத் தந்தி அனுப்பு அலுவலகம், வேலூர்.
7. மையத் தந்தி அனுப்பு அலுவலகம், திருச்சிராப்பள்ளி.
8. மையத் தந்தி அனுப்பு அலுவலகம், தஞ்சாவூர்.
9. மையத் தந்தி அனுப்பு அலுவலகம், மதுரை.
10. தந்தி அனுப்பு அலுவலகம், தூத்துக்குடி
11. மையத் தந்தி அனுப்பு அலுவலகம், திருநெல்வேலி.
12. மையத் தந்தி அனுப்பு அலுவலகம், கோயம்புத்தூர்.
13. மையத் தந்தி அனுப்பு அலுவலகம், சேலம்.
14. மையத் தந்தி அனுப்பு அலுவலகம், ஈரோடு.
15. மையத் தந்தி அனுப்பு அலுவலகம், பாண்டிச்சேரி.
16. தந்தி அனுப்பு அலுவலகம், சென்னை ஆயிரம் விளக்கு.
17. தந்தி அனுப்பு அலுவலகம், கரூர்.
18. தந்தி அனுப்பு அலுவலகம், புதுக்கோட்டை.
19. தந்தி அனுப்பு அலுவலகம், நாகப்பட்டினம்.
20. தந்தி அனுப்பு அலுவலகம், கும்பகோணம்.

